உ

ஓம் மஹாகணபதயேநம:

ஸ்ரீமச்சங்கராசார்ய பகவத்பாத ஆசாரியசுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# ஸ்ரீ உபதேச சகஸ்ரீ.

இது

ஸ்ரீ கோவிலூர் மடாலயம்

ஸ்ரீ அண்ணாமலை ஞானதேசிகரவர்கள்

ஆஞ்ஞையின்படி

ஸ்ரீ வேதாந்தபாஸ்கரராய் விளங்காநின்ற

ஸ்ரீ வீர, சுப்பைய சுவாமிகளால்

மொழிபெயர்க்கப்பட்டு

சென்னைச்

சிவரஹஸ்ய முத்ராலயத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1916

காபி ரைட்] [விலை 0 10 0



உ

ஓம் கணபதி துணை.

சிவமயம்.

# ஸ்ரீ உபதேச சகஸ்ரீ

---

### ஸ்ரீ வன்னி விநாயகர் வணக்கம்.

*உமைதிருக் கொழுந னேயிவ் வுலகநற் குரவ னாகி*
*யமுதினை யருத்த வேண்டி யருளுப தேச மாக*
*வமைசகத் திரிய தீதை யருந்தமி ழுதனி லாற்றச்*
*சமிநிழ லமர்ந்த வீசன் றண்மரை மலர்கள் போற்றி.* 1

### ஸ்ரீ பஞ்சமூர்த்திகள் வணக்கம்.

*வன்னி யைங்கரன் றிருவடி மலரிணை வாளிணை மறைத்தேகு*
*மன்ன வன்மரை மலரிணை யறுமுக னடிமல ரிணையார்க்கு*
*மன்னை யென்னரா தனவலி யுருவளி யருள்பொழி தரும்வீர*
*மன்ன வன்றிருப் பொன்னடி தன்னையும் மனந்தனி னினை*
*வாமே.* 2

### ஸ்ரீ மச்சங்கரபூஜ்யபகவற்பாதாசாரிய சுவாமிகள் வணக்கம்.

*மங்கையொ டிலமுந் தங்க மிவைதமின் மகிழ்ந்து வாடு*
*மெங்களுக் கருள வேண்டி யிவ்வுல கதனி னூடுங்*
*கங்கையை யுமையை நீத்துக் கடுந்துற வடைந்து மேவுஞ்*
*சங்கர பகவற் பாத சற்குரு சரணம் போற்றி.* 3

ஸ்ரீ பரமபாதாதி நால்வர் வணக்கம்.

பஞ்ச பாதிகை யிறைவனைப் பாமவார்த் திகத்தைச்
செஞ்சொ லாற்றருஞ் சூரயனைச் செறிநன வதனிற்
றஞ்ச லாகிலை படைந்திடு முனிவனைத் தோட
கஞ்சொ லாரியன் றனையுளக் கஞ்சமீ தமைப்பாம். 4

ஸ்ரீ பரமகுரவர் வணக்கம்.

முத்தி ராமலிங் கேசனென் றேசிக முதலைச்
சுத்த மாதுற விறைவனைத் துபரொழித் தருளுஞ்
சித்தி ஞானித் தேசிகன் றனைத்தினந் தினமென்
சித்த மானது திரிகா லறநினைந் திடுமே. 5

ஸ்ரீ அருளிறை வணக்கம்.

ஐங்கர விறைவ னென்ற னருந்துய ரழிக்க வேண்டி
யிங்கொரு மனுட னாகி யெழுந்தருள் புரிந்து சிதந்
தங்குறும் பதத்தை யெற்குத் தமைபிறப் புறவே யீந்த
பொங்கருள் கொழிக்கும் வீர மாதவன் பொற்றாள் போற்றி.

இவ்வாசிரியனை யிங்ஙனமியற்றுவ லென்பது.

சிறந்த கத்தியப் பத்தியச் சீரதாய்ச் செறிந்த
வறந்த ரும்மிதைக் கத்திய வுருவம தாயே
மறந்த வென்றனை மதிதனின் மருவியான் வாழ்வான்
றுறைந்த வென்மனத் தளவினிற் கூறுவன் குலவ. 7

அவையடக்கம்.

பொங்கருந் துயர்செய் குடும்பமென் கடலைப்
பொட்டெனக் கடந்திடப் புணைபோற்
சங்கர குரவ னருளுப தேச சகத்திரி யெனுமிதைத் தமிழி

விக்கெளி யனுந்தெசய் திடநீனைக் திந்த
வெள்ளுறு கொதுகொரு திருவை
வங்கமென் பதுகொண் டெழுகடற் கடத்த மதித்திடன்
மானுமே வழங்கில். 8

பாயிரம் முற்றும்.

---

உ

ஸ்ரீ கணபதி துணை.

# ஸ்ரீ உபதேச சகஸ்ரீ.

## கத்தியப் பிரபந்தம்.

### முதலாவது சிஷ்யப் பிரதிபோதன விதிப பிரகரணம்,

### அனுக்கிரமணிகை.

செய்ய விரும்பியதின் பிரதிஜ்ஞையின் வாயிலாகச் சாஸ்திரீய வநுபந்த சங்கிரகம். 1

ஓம், சிரத்தையையும், அறியும் வேட்கையையுமுடைய முமுட்சுக்களுக்கு உபகாரமாமாறு மோக்ஷசாதன உபதேச விதியை விளங்க விளம்புகின்றோம்.

தொகுத்துக் கூறிய அருத்தத்தின் விவரணம். 2

அவ்விம்மோக்ஷ சாதனமாய ஞானத்தைச் சாதனங்களாற் சாதிக்கப்பெற்ற அநித்தியமாய யாவற்றினின்றும் விரக்தனும், புத்திர வித்த லோக வேடணைகளைத் தியாகித்தவனும், பரமஹம்ஸ சன்யாசத்தைப் பற்றினவனும், சமதம தயாதியோடு கூடினவனும், சாஸ்திரப்பிரசித்த சிஷ்யகுண

சம்பன்னனும், சுசியும், பிராஹ்மணனும், சாதி கருமம் ஆசாரம் வித்தை குலம் என்பவற்றாற் பரீக்ஷிக்கப்பட்டவனும், விதிப்பிரகாரமடைந்தவனுமான சிஷ்யன் பொருட்டுக் கிரகணந்திடமாம் வரையும் அடிக்கடி அனுக்கிரகிக்கவேண்டும். 2

குருவினடைவு செய்யத்தக்கதென்பது. 3

"நிச்சயித்து" எனபதுமுதல் "உண்மையாகப் பிரஹ்ம வித்தையை" என்பதிறுகச் சுருதியும் புகல்கின்றது; திரமாகக் கிரகித்த வித்தையும் ஆத்மாவின் சிரேயஸின்பொருட்டுஞ் சந்ததியின் பொருட்டுமாம்; வித்தையின் சந்ததியும் நதிகடக்க அவாவினனுக்கு நாவாயொப்பப் பிராணியின் அனுக்கிரகத்தின் பொருட்டாம். நீராற்சூழ்ந்ததும் தனத்தானிறைந்ததுமாய விப்பிருதிவியை ஒருவன்றரினும் அன்னோன்பொருட்டு மிஃதியற்பாலதன்று, இதுவேஅதனினும் அதிக தரமாமென்று சாஸ்திரமுஞ் சிக்ஷிக்கின்றது; வேறாயினோ, ஞானத்தினடைவு இன்மையின் "ஆசிரியனையுடைய புருடனறிவன்" "ஆசிரியனாலே அறிந்த வித்தை" "ஆசிரியன் கடத்துவிப்போன், நன்ஞானமோடம் என்றீண்டுரைக்கப்படும்" என்பனமுதலிய சுருதிகளாலும்; உனக்கு ஞானமுபதேசிப்பர்க" ளென்பன முதலிய ஸ்மிருதிகளாலுங் காண்க. 3

அடிக்கடி குருபானுபதேசத்தின்கட்காரணம். 4

சீடனது ஞானக்கிரகணத்தையுங் குறிகளா லுணர்ந்து, அக்கிரகணத்தின்கண் ணிலவுறு மேதுக்களாய அதர்மம், லௌகிகம், பிரமாதம், நித்தியாநித்தியவிவேகவிஷயம்வரைவிரியாத திரமுற்கேள்வி, லோகசிந்தாவேக்ஷணம், ஜாதியாதிகளினபிமானம் என்பனவாதிய அவற்றினிவர்த்தகங்களாய

சுருதி ஸ்மிருதி விஹித அக்குரோதாதி அஹிம்ஸாதி இயமங்களாலும், ஞானவிருத்தங்களாய நியமங்களாலும் நிவிர்த்திப்பிக்கத் தக்கனவாம். 4

ஞானோபாய ஸோஜஜானோபதேசம். 5

ஞானோபாயமாய அமானித்வாதி குணங்களும் நன்றாகக் கிரகிப்பிக்கத்தக்கனவாம். 5

குருவாற் செய்யத்தக்க உபதேசக் கிரமம். 6

ஊஹாபோஹ கிரகண தாரண சமதம தயானுக்கிரகாதி சம்பன்னனும், வித்தையை யடைந்தவனும், திருஷ்டாதிருஷ்ட போகங்களிற் பற்றற்றவனும், சர்வகர்ம சாதனத்தியாகியும், பிரஹ்மவித்தும், பிரஹ்மத்தின் கட்டிதனும், நடைகடவானும், இடம்பம் தர்ப்பம் மற்றவினைபெற்றல் நிட்டூரம் மாயை மாற்சரியம் பொய் அகங்காரம் மமதை என்பன முதலவாய தோடங்க ணீங்கினவனும், கேவலம் பரானுக்கிரகப் பிரயோஜனனும், வித்தியோப யோகார்த்தியும் ஆய ஆசிரியனும் "சௌமியனே! இது முன்னம் சத்தாகவே இருந்தது, ஒன்றே அத்துவிதம" யாண்டு அன்னியத்தைப் பார்க்கின்றானில்லை" "ஆன்மாவே யிவ்வியாவும்" "இது முன்னம் ஆன்மா, ஒன்றாகவே யிருந்தது" "நிச்சயமாக இவ்வியாவும் பிரஹ்மம்" என்பன முதலிய ஆன்மாவின் ஏகத்தன்மைப் பிரதிபாதனபரங்களாய சுருதிகளை முன்ன முபதேசிக்க. 6

சுருதிகளாலும் ஸ்மிருதிகளாலும் பிரஹ்மத்தினது இலக்கணம் கிரஹிப்பிக்கத் தக்கதென்பது, 7-8

உபதேசித்துப் பின்னர் "யாதொரு ஆன்மாப் பாபமற்றதோ" "எது சாக்ஷாத் அபரோக்ஷமாகப் பிரஹ்மம்,' 'எது

அபி லும் வேட்கை மாந்தும்வேட்கையற்றது' "இதுவுமன்றிதுவுமன்று" "தூலமற்றது அணுவற்றது" "அந்த இந்த இதுவுமன்று இதுவுமன்று" "பார்க்கத்தகாதது பார்ப்பது" "விஞ்ஞான மானந்தம்" "சத்திய ஞானமனந்தம்" "திருசியமற்றதிற்சரீரமற்றதில்" "அந்தஇந்த மஹான் அஜன் ஆன்ம" "பிராணனற்றது மனமற்றது" "அதுவெளியுள் அஜம்" "விஞ்ஞான கனனே" "அந்தரமற்றது பாகியமற்றது" "அறிபப்பட்டதினு மறியப்படாததினும் அலெந்னியமே" "ஆகாசம் பிரசித்தமான" என்பன முதலிய வெழிலோத்து களால் பிரஹ்மத்தி னிலக்கணங் கிரகிப்பிக்கத் தக்கது. 7

"பிறப்பிறப்பின்று" "ஒருவன் பாபத்தையுங் கிரகியான்" "எங்ஙனம் ஆகாசத்தில் நித்தியந்திதம்" "ஆகத்தை யறிபவனுயென்னையறி" "அது சத்துமன்ற தசத்துமன்றென்று சாற்றப்படும்" "ஆதியற்றதன்மையாற் குணமற்ற தன்மையால்" "எல்லாப்பூதங்களிற் சமமாக" "உத்தமமாய புருடன்" என்பனமுதலவாய மறையாலறையலுறு மிலக்கண விருத்தமற்றதும், பரமான்மாவிற்கு அசம்சாரித்தன்மையைப் பிரதிபாதிப்பதிற்றற்பரமுற்றதும், அதற்கதனேடனன்னியத் தன்மையைப் பிரதிபாதிப்பதிற் றற்பரமுற்றதும் ஆய ஸ்மிருதிகளாலும் கிரகிப்பிக்கத்தக்கது. 8

உபதேசத்தின்பின்மதிநிச்சலத்தின் பொருட்டுச் சிஷ்யனை மறுபடி வினவவேண்டுமென்றசிரியனது கிருத்தியங் கூறல். 9

இங்ஙனம் சுருதி ஸ்மிருதிகளாற் பரமான்ம விலக்கணத்தைக் கிரகித்தவனும், சம்சாரசாகரத்தி னின்றும் கரை

யேற விச்சித்தவனுமாய சிஷ்யனைப் பிரிய தரிசனனே! நீயா ராயுள்ளாய்? என்று வினவுக. 9

உணர்வின்மையாதி தோஷத்தால்
சிஷ்யனுடைய உத்தரம். 10

மறையோன் மகன், இவ்வம்மிசத்தன், பிரஹ்மசாரியாயிருந்தேன், அல்லதுகிரகத்தன், இப்பொழுது பரமஹம்ச பரிவிராட்டாய்ச் சம்சார சாகரத்தினின்றுஞ் சன்ம மிருத்தியுவாய மகாநக்கரத்தினின்றும் விடுபடும் வேட்கையனுயுளன் என்று சிஷ்யன் செப்பிடில். 10

தேசிகன் பின்னுபதேசத்தா லத்தகைய
தோஷத்தைத் தியாகிக்கச் செய்வது. 11

பிரியதரிசனனே! ஈண்டே நின்மிருதசரீரம் பக்ஷிகளாற் பக்ஷிக்கப்படும்; அல்லது, மட்டன்மையையேனுமருவும்; ஆண்டெவ்வாறு சம்சாரத்தினின்றும் உத்தாரணஞ் செய்ய விச்சிக்கின்றாய்? நதியினக் கூலங்கள் பஸ்மீ பூதமாங்கால் நதியின் கரைகடப்பவனன்றாகின்றாயன்றோ? என ஆசிரியன் கூறுக. 11

தூலதேகாபிமானத்தியாகத்தின் பின்
சிஷ்யனுடைய விஞ்ஞாபனம். 12

ஆகத்தினின்றும் யானன்னியன், சரீரமோ சனிக்கும் மரிக்கும், பக்ஷிகளாற் பக்ஷிக்கப்படும், மட்டன்மையை மருவும், சத்திரமெரி முதலியவையாலும் விநாசமாம், வியாதியாதிகளாலும் வீக்கப்படும், அதன்கண் நானென்றுற்குயிற்றிய தருமாதரும வசத்தாற் பக்ஷி நீடம்போன்று புகுந்தோனுயடிக்கடியாக நாசமாங்கால்தருமாதரும வசத்தாலன்னிய

தேகத்தைப் பூர்வதேடமழியுங்காலீடாந்தரமடையும் புட் போன்றடைவேன்; இங்ஙனமே யான் அனாதியாய சம்சாரத் தில் தேவ மனுட திரியக்கு நிரயத்தானங்களில், என் கரும வசத்தானுற்றவுற்ற வுடலை யொழித்து, உறுநவநவ வெவ் வேறுடலைத் தரிப்பவனாய்ச் சனனமரணப் பிரபந்த சக்கரத் திற் கடயந்திரங் கடுப்ப என்கருமத்தாற் பிரமிப்பவனாய்க் கிரமமாக இவ்வாக்கையை மேவுற்று, இச்சம்சார சக்கரச் சுழற்சியாற்றுக்கியாய்ச் சம்சாரசக்கரச் சுழற்சியின் சாந்தி யின் பொருட்டுப் பகவானாகிய தேவரீரையடைந்தவனாகின் றேன்; ஆதலாலாகத்தி னன்னியனான நானித்தியனே; போ வன வருவனவாய புற்கலங்கள் புருடனுக்குப் புடவைகள் போன்றனவே யென்று அச்சிஷ்யன் அறைவானேல். 12

சிஷ்யனைப் புகழ்தல் வாயிலாக ஆசிரியனதுத்தரம். 13-15

நன்று நவின்றனை; நன்று நாடியுள்ளா யெனினும், விப் பிரகுமரன், இவ்வம்மிசத்தன், பிரஹ்மசாரியாயிருந்தேன், அல்லது கிரகத்தன், இப்பொழுது பரமஹம்ச பரிவிராட்டா யுளனென்று எவ்வண்ணம் பொய் புகன்றனை? என்று ஆசிரி யன்வினவுக.

பகவனே! யானெவ்வண்ணம் பொய்புகன்றவனானேன் என்று அச்சிஷ்யன் கூறுவனாயின். 14

எதனால் நீ பின்னஜாதி பிதாரதி அந்வய சாதகர்மாதி சமஸ்கார விசிட்ட சரீரத்தை மறையோன்மகன், இவ்வம்மி சத்தன் என்பன முதலிய வாக்கியத்தால் ஜாதி அந்வயந் தணந்த ஆன்மாவிற் குணர்ந்தவனாகின்றாயோ? என்று அவன் பொருட்டாசிரியன் அறைக. 15

விளம்பியபொருளை விரிப்பான் சீடன்றன் வினவெழுச்சி. 16

*எவ்வண்ணம் சரீரம் பின்னசாதியந்நுவயசமஸ்காரமாம்? அல்லது, சாதியந்நுவபசமஸ்கார மற்றவன்றான் யானெவ்வண்ணமாவேன்? எனவவன் வினவில். 16*

ஆசிரியன் விடையளிப்பான் றொடங்கல். 17

*பிரியதரிசனனே! கேட்பாயாக:—இவ்வாகம் உன்னிற் பின்னமும், பின்னசாதியந்நுவயசமஸ்கார முடையதுமாம்; நீயோ சாதியந்நுவயசமஸ்காரம் நீங்கினனெவாயெனப் புகன்று அவனைச் சிந்திப்பிக்க. "பிரியதரிசனனே! சத்தாக வேயிது" என்பதுமுதலிய சுருதிகளாலும் ஸ்மிருதிகளாலும் முற்புகன்ற விலக்கணம் வாய்ந்த சர்வான்மாவாய பரமான்மாவைக் கேட்டவண்ணஞ் சிந்திக்க வருகஞகின்றாய்; அதனதிலக்கணத்தையுஞ் சுருதிஸ்மிருதிகளாற் சிந்திக்க வருகஞகின்றாய் என்றாரியனறைக. 17*

உடலின் பின்னசாதியந்நுவயசமஸ்காரத்தன்மையினுணர் வுதிப்பா னதனுற்பத்திப் பிரகாரம். 18

*எவ்விவ்வாகாசம் பிரசித்தம், நாமவுருவங்களினின்றும் வேறுபொருள் வடிவாயது, சரீரமற்றது, தூலமற்றதாதியிலக்கணமுடையது, பாபமற்றதாதி யிலக்கணமுடையது, சர்வசம்சார தர்மங்களாற் பற்றவொண்ணாதது, எது சாக்ஷாத் அபரோக்ஷமாய பிரஹ்மம், எவ்வாத்மா சர்வாந்தரமோ, பார்க்கத்தகாதது, பார்ப்பது, கேட்கத்தகாதது, கேட்பது, நினைக்கத்தகாதது, நினைப்பது, அறியத்தகாதது, அறிவது, நித்தியவறிவுருவாயது, அந்தரமற்றது, பாகியமற்றது, விஞ்ஞானகனமே, ஆகினியொப்பப் பரிபூரணமாயது, அநந்த சக்தியுடையது, சருவத்திற்கு மான்மாவாயது, அபி*

னும் வேட்கையாதிபற்றது, தோன்றன் மறைதலற்றது, தன் வடிவின் விலக்ஷணங்களும் உலக காரணவடிவங்களும் உண்மை யின்மைகளினின்றும் அநிர்வசனீயங்களும் தன்னாலறியப்படுபவைகளும் சற்பாவ மாத்திரத்தாற் றன்னுருவி விருப்பனவும் வெளிப்படாதனவுமாய நாமவுருவங்களின் விசேஷ கருத்தா; சிந்திக்கத்தகாத வாற்றலுண்மையின், என்று உற்றபரமான்மக விலக்கண சிந்தனையின்பொருட் டுரைக்குக. 18

## உடலினுற்பத்தி யுபதேசம். 19-21

வெளிப்படாத அந்நாம ரூபங்கள் வெளிப்படுங்கால், அவ்விவ்வான்மனினின்றும் வானமெனப் பெயரிய வத்துவானதுண்டாயிற்று. அவ்வாகாசமெனப் பெயரிய பூதமும் இவ்வண்ணம் மலமறு சலிலத்தினின்றும் மலமுறு பேனம்மானப் பரமான்மாவினின்று முண்டாயிற்று, சலிலத்தின் வேறுப் காணொணாமையிற் பேனஞ்சலிலமுமன்று, சலிலத்தினின்று முற்றினும் வேறுமன்று; நின்மலமாய சலிலமோ மலரூபமாய பேனத்தினின்றும் அன்னியமாம்; இவ்வண்ணம் பேனத்தானமேய நாமரூபங்களினின்றும் பரமான்மா அன்னியஞ், சுத்தம், பிரசன்னம், அதன்விலக்ஷணமாம்; வெளிப்படாத பேனத்தானமேய அந்நாம ரூபங்கள் வெள்ப்படுங்கால் வானமெனப்பெயரிய வத்துவானதுண்டாயிற்று. 19

நாமரூபங்கள் வெளிப்பட அதினின்றும் தூலபாவமடையுங்கால் வாயுபாவத்தை யடைந்தன, அதினின்றும் அக்னிபாவம், அக்னியினின்றும் அப்புபாவம், அதினின்றும் பிருதுவிபாவமாமென இவ்வண்ணம் முறையாய்ப் பூர்வபூர்வாநுப்பிரவேசத்தாற் பிருதுவியீறுயுள்ள பஞ்சமகா பூதங்

களுண்டாயின. அதினின்றும் பஞ்சம்கா பூதகுண விசிட்டப் பிருதுவி, பிருதுவியாலும் பஞ்சான்மகமாய நெற்கோதுமை முதலிய ஓடதிகள் உண்டாயின; அயிலப்பட்ட அவற்றினின்றும் ஸ்திரீபுருஷ சரீர சம்பந்தியாய் லோகிதமும் சுக்கிலமும் உண்டாகின்றன. அவித்தையாற் பிரயுக்த காமமதத்தின் மதனத்தால் உண்டாயதும், மந்திர சமஸ்காரம் செய்யப்பட்டதுமாய அவ்விரண்டும் ருதுகாலத்திற் கருப்பாசயத்திலிடப்படும் ஸ்வயோனி ரசானுப் பிரவேசத்தால் விருத்தியடையாநின்ற கர்ப்பீபூதமாய அது ஒன்பதாந் திங்களிலேனும், பத்தாந்திங்களிலேனும் வெளிப்படும். 20

பெயராகிருதிகளைப் பெற்றுண்டாய அது ஜாதகர்மாதிகளால் மந்திர சமஸ்காரம் செய்யப்பட்டுப் பின்னருபநயன சமஸ்கார யோகத்தால் பிரஹ்மசாரி யென்னும் பெயரைப் பெறும், அச்சரீரமே பத்தினியோக சமஸ்கார யோகத்தால் இல்லறத்தானென்னும் பெயரை இயையும், அதுவே வன இருப்பின் சமஸ்காரத்தால் தாபசனென்னும் பெயரைத்தரிக்கும், அதுவே கிரியாவிநிவிருத்தி நிமித்த சமஸ்காரத்தால் பரிவிராட்டென்னும் பெயரைப்பற்றும், இவ்வண்ணஞ் சரீரம் உன்னிற் பின்னமும், பின்னஜாதி அன்வய சமஸ்காரமுடையதுமாம். 21

## சூக்ஷ்மசரீராபிமான த்யாஜனம். 22-23

“பிரியதரிசனனே! அன்னமயமே மனம்” என்பதுமுதலிய சுருதிகளால் மனமும் இந்திரியங்களும் நாமரூபான்மகங்களேயாம்; யானெவ்வாறு பின்னஜாதி அந்வய சமஸ்கார வர்ஜிதனுவேனெனிற் கேட்பாயாக:—எவ்விவன் நாமரூபங்களின் விசேஷகர்த்தாவோ, நாமரூபதர்ம விலக்ஷண

ஞே, அவனே நாமரூபங்களை நன்காற்றி இச்சரீரத்தைச் சிருஷ்டித்துச் சமஸ்கார தர்மவர்ஜிதனுய தானே ஈண்டு நாமரூபத்திற் பிரவேசித்தனன், அன்னியங்களாற் பார்க்கப்படாதவனுப்த் தான் பார்ப்பவனுப், அங்ஙனமே கேட்கப்படாதவனுய்க் கேட்பவனுப், நினைக்கப்படாதவனுப் நினைப்பவனுப். அறியப்படாதவனுப் அறிபவனுப். "சர்வ ரூபங்களை யாற்றி நாமங்களைக் குயிற்றிச் செப்பல்செய்பவனுப்த் தீரன் யாவன் உளனே" என இவ்வர்த்தத்தி லாபிரக்கணக்கான சுருதிகளுள்:—'அது சிருஷ்டித்து அதுவே பிரவேசித்தது' "உட்பிரவேசித்தவன் ஜனங்களின் சிக்ஷகன்' 'அவ்விவனீண்டு பிரவேசித்தவன்' "இவனின் னன்மா' "அவனிவ்வெல்லையையே பிளந்து இத்துவாரத்தா லடைகின்றனன்" 'சர்வபூதங்களி லிவன்கூடான்மா" "அந்த இந்தத் தேவதை பார்த்தது, இப்பொழுது நானிம்முத்தேவதை" என்பன முதலிய சுருதிகளாம். 23

பரமான்மாவே க்ஷேத்ரக்ஞனென்பதில் ஸ்மிருதிகள். 24

"ஆன்மாவே சர்வதேவதைகளும்" "நவத்வாரபுரத்திற்றேகி" "என்னை க்ஷேத்ரக்ஞனுகவுமறி" "சர்வபூதங்களிற் சமன்" "பார்க்கப்பட்டவனும் நினைக்கப்பட்டவனும்" "அன்னியன் உத்தமபுருஷன்" "சரீரங்களி லசரீரன்" என்பன முதலிய ஸ்மிருதிகளுமாம்; ஆதலால், ஜாதி அந்வய சமஸ்கார வர்ஜிதன் நீயெனச் சித்தித்தது. 24

பரஜீவர்களின் அபேதத்தில் அநுபவ விரோதமுளதென்னுஞ் சங்கையி னிராசவாயிலாகப் பேததிருஷ்டியினிந்தை. 25-27

அஞ்ஞன் சுகி துக்கி பத்தன் சம்சாரி என நானன்னியனே, என்னின் விலக்ஷணனுய இந்த அசம்சாரியாகிய தே

வன் அன்னியன் அவனை யான் பலிஉபகார நமஸ்காராதிகளா லும், வருண ஆசிரம கருமங்களாலும் ஆராதித்துச் சம்சார சாகரத்தினின்றும் ஏற இச்சித்தவனுகின்றேன், யான் அவ னே யென்பதெவ்வண்ணம்? என்று அவன் அறைவானேல்.

இவ்வண்ணம் பிரியதரிசனனே! அறிய வருகனன்றுகின் றுய், பேதஞானத்திற்கு நிஷேதத்தன்மை யுண்மையின், பே தஞானமானது 'எவ்வண்ணம் நிஷேதிக்கப்பட்டதென்று சங்கித்துக்கூறுகின்றார்:—"அன்னியன் பரமேசன், அன்னிய னுகின்றேன் என அவனறிந்தவனன்று" "யாவன் அன்னி யமேயிது வென்று தன்னிற் பின்னமாகப் பிராஹ்மணத் தன் மையையறிகின்றுனே,அவனைப் பிராஹ்மணத்தன்மைச் சாதி யானது தத்வ விமுகனுய்ச் செய்க" "யாவனுன்மாவின்கண் நாநாப்போன்று பார்க்கின்றுனே, அவன் சம்சாரத்தினின் றும் சம்சாரத்தை யடைகின்றுன்" என்பன வாதியை ஆசி ரியன்கூறுக. 26

இச்சுருதிகளியாவும் பேதஞானத்திற்குச்சம்சாரப் பிரா ப்தியைத் தெரிவிக்கின்றன. 27

அபேத திருஷ்டியின் பிரசம்சை வாயிலாகச் சாதனத் தோடுகூடிய கர்மத்தின் பிரதிஷேதோபபாதனம். 28-32

அபேத ஞானத்திற்கோ ஆயிரக்கணக்காய சுருதிகள் மோக்ஷத்தைத் தரிசிப்பிக்கின்றன; "அது ஆன்மா,அது நீயா யிருக்கின்றுய்" எனப்பரமான்ம பாவத்தை விதித்து, "ஆசி ரியனையுடைய புருடனறிவன்" எனக்கூறி, "அவனுக்கு அவ் வளவே நீள்காலம்" என மோக்ஷத்தைத் தெரிவிக்கின்றன. சத்திபாபிசந்தனுய சோரனல்லாதவனுக்குத் தாகாதியின்மை போன்று என்னுந் திருஷ்டாந்தத்தினுல் அபேத விஞ்ஞானத்

தானே சம்சாரமின்மையைத் தெரிவிக்கின்றன. அசத்தியா பிசந்தனை சோரனுக்குத்தாகாதிபோன்று என்னுந் திருஷ்டாந்தத்தினல் பேத தரிசனத்தானே சம்சாரப் பிராப்தியைத் தரிசிப்பிக்கின்றன. 28

"அவையீண்டு விபாக்கிரமாயேனும்" என்பதாதியானும், அபேத தரிசனத்தால் "அவன் ஸ்வாராட்டாகின்றான்" எனக்கூறி அதன் விபரீதமாய பேததரிசனத்தாற் சம்சாரப் பிராப்தியைத் தரிசிப்பிக்கின்றன.

"பின்னர் யாவர் கூறிய தரிசனத்தினின்றும் வேறு விதமாயறிவரோ அவர் அன்யாராஜா உடையவராயும், க்ஷய உலகமுடையவராயுமாவர்" ஆதலால், பிராஹ்மண புத்திரன், இவ்வம்மிசத்தன், சம்சாரி, பரமான்ம விலக்ஷணன் என ஆவா! மித்தையையே கூறினே. 29

ஆதலால், பேததரிசனத்திற்குப் பிரதிஷித்தத் தன்மையுண்மையானும், கர்மோபாதானத்திற்குப் பேதவிஷயத் தன்மையுண்மையானும், யஞ்ஞோபவீதாதிகட்குக் கர்மசாதனத் தன்மையுண்மையானும், பரமான்மாபேதஞானத்தாற் கர்மசாதனோபாதானத்தினுடைய பிரதிஷேதஞ் செய்யப்பட்டதெனவுணரத்தக்கது. கர்மங்களுக்கும் அதன் சாதனங்களாய யஞ்ஞோபவீதாதிகட்கும், பரமான்மாபேத ஞான விருத்தத் தன்மையுண்மையின், சம்சாரிக்குக் கர்மங்களும் அதன் சாதனங்களாய யஞ்ஞோப வீதாதிகளும் பிரசித்தமாய் விதிக்கப்படுகின்றன; பரமான்மா பேத ஞானவானுக்கின்று; பேததரிசன மாத்திரத்தானே அதினின்றும் அன்னியத்தன்மையாம். 30

கர்மங்கள் செய்யத்தக்கன; நிவர்த்திக்கத்தக்கனவன்று மேல், கர்மசாதன சம்பந்தியுங் கர்ம நிமித்த ஜாதி ஆசிரமாதிய சம்பந்தியும் ஆய பரமான்மாவிற்கும், ஆன்மாவோடும் அபேதஞானத்தை "அது ஆத்மா, அது நீயாயிருக்கின்றாய்" என்பன வாதியாய நிச்சித ரூபவாக்கியங்கள் ஓதா தொழிய வேண்டும், பேதஞான பாபத்தோடு சம்பந்தமற்றவன், நிந்தையையும் "பிரஹ்மவித்துவின் இந்நித்தியமகிமை" "புண்ணியத்தோடு சம்பந்தமற்றவன்" "பிராஹ்மண சுவர்ண ஹரணனீண்டுப் பிராஹ்மண சுவர்ணஹரணமற்றவனுவன்" என்பன முதலியவையுரையாதொழியவேண்டும். 31

கர்மங்களுங் கர்ம சாதனங்களாகிய யஞ்ஞோபவீதாதிகளும் நன்றாகத் தியாகஞ் செய்யப்படுவனவன்றாயின், கர்மாசம்பந்தி ஸ்வரூபத்தன்மையையும், கர்மநிமித்த வருணாதியசம்பந்த ரூபத்தன்மையையும் கூறுதொழியவேண்டும்; ஆதலான், முமுட்சுவாற் சாதனசகிதகருமம் பரமான்மாபேததரிசன விரோதமாதலின், நன்றாகத் தியாகிக்கத்தக்கதாம்; ஆன்மாவும் பரமே யென்று சுருதிகூறிய விலக்கணப் பிரகாரம் அறியத்தக்கது.

## கூறிய பிரஹ்மான்மைக்கியத்தையே உத்தியால் விவஸ்தாபனஞ் செய்கின்றார். 33-35

ஹே பகவன்! தகிக்கப்பட்ட அல்லது, சேதிக்கப்பட்ட தேகத்திற் பிரத்யக்ஷ வேதனையும், அயில்வதாதியினிமித்தம் பிரத்யக்ஷதுக்கமும் எனக்கு உண்டாகிறது. பரமாகிய இவ்வான்மாவோ, இவ்வான்மா தர்மா தர்மமற்றது. ஜரையற்றது மிருத்தியுவற்றது சோகமற்றது அயிலும் வேட்கையற்

றது தாகமற்றது சர்வகந்தரச வர்ஜிதமென்று சர்வசுருதிகளி லும் ஸ்மிருதிகளிலும் கேட்கப்படுகின்றது. அதன் விலக்ஷ ணனாய் அநேக சம்சார தர்ம சம்யுக்தனை நான் பரமான் மாவை ஆன்மத்தன்மையதாகவேனும், சம்சாரியாகிய வென் னைப்பரமான்மத் தன்மையனாகவேனும், அக்னியைச் சீதத் தன்மையதாகப்போல் எவ்வண்ணமறிவேன்? சம்சாரியாய்ச் சர்வ சுவர்க்க மோக்ஷசாதனத்தில் அதிகிருதனாயநான் சுவ ர்க்கமோக்ஷ சாதனங்களாய கர்மங்களையும், அதன் சாதனங் களாய யஞ்ஞோப வீதாதிகளையும் எவ்வண்ணம் பரித்தியா கஞ் செய்வேன்? என்று அவன் விளம்புவானேல். 33

தகிக்கப்பட்ட அல்லது, சேதிக்கப்பட்ட வுடலிற் பிரத் யக்ஷவேதனை யெனக்குண்டாகின்றதென்று யாதுநீ கூறினை அதுபொய்யாம்; ஏனெனில், தருவிற்போல் தகிக்கப்பட்ட அல்லது, சேதிக்கப்பட்ட உபலப்தாவிற்கு அறிபவனுக்கு உபலப்யமானமுங் கருமமுமாய வாகத்திற்றாகச்சேதங்களின் வேதனையின் பிரதீதி யுண்டாகின்றமையின், வேதனை தாகாதி சமானாஸ்ரயமேயாம். யாண்டுத்தாகமேனுஞ் சேதமேனுஞ் செய்யப்படுகிறதோ ஆண்டே தாகாதி வேதனையை யுலகு கூறுகின்றது; உபலப்தாவின்கட் டாகாதி வேதனையைக் கூறு கின்றதின்று; எவ்வண்ணமெனின், யாண்டு நினக்கு வேதனை யென வினவப்பட்டவன் எனக்குச் சிரசில் அல்லது, உரத்தில் அல்லது,உதரத்தில் எனயாண்டுத் தாகாதி ஆண்டே கூறுகின் றனன்; உபலப்தாவின்கட் கூறுகின்றானில்லை. உபலப்தாவின் கண் வேதனையிருக்குமாயின், தாகாதி, யாசிரயம்போலவேத னையின் நிமித்தம் தாகச்சேதாதி வேதனையின் ஆசிரயத் தன் மையுடையதாக வுபலப்தாவைக் கூறல்வேண்டும்; 34

சக்ஷுவின் மாட்டுள்ள உருவம்போற்றானகவு முணர்ந்துகொள்ளற்றகாது; ஆதலினாற்றாகச்சேதாதி சமானாஸ்ரயத் தன்மையனவாகப் பிரதீதியாதலிற் ருகாதியொப்ப வேதனை கர்மபூதமேயாம். பாவரூபத்தன்மையானுந் தண்டுலபாகாதிபோ லாசிரயமுடையதாமென்க. ஸ்மிருதிசமான காலத்திலே பிரதீதிபாதலின், வேதனு விஷயமாய அதன் சமஸ்காரம் வேதனையின் சமானாசிரயத்ததேயாம்; அதனிமித்த விஷயமாய த்வேஷமும் சமஸ்கார சமானாசிரயத்தின் கண்ணதேயாம். அங்ஙனமே இராகத்துவேஷங்களும் யாதொருபயமும் உருவசமஸ்கார சமானாஸ்ரயங்களை ஆஸ்ரயம் புத்தியெனக் கிரகிக்கப்படுகின்றது; ஆதலால், ஞாதாவெஞ்ஞான்றுஞ் "சுத்தனபயன்" என நுதலப்பட்டுளது. என்றவன் பொருட்டுக் கூறுக. 35

வேதனாதிகளின் அனாத்ம தர்மத்வ உபபாதனம். 36 38

உருவாதி சமஸ்காராதிகள் பின்னென்னாசிரய முடையன வாமாலோவெனில்? மொழியப்படுகின்றது:— யாண்டுக் காமாதிகள் ஆண்டே, ஆயினக் காமாதிகள் யாண்டையன? "காமஞ்சங்கற்பஞ்சம்சயம்" என்பனமுதலிய சுருதிகளாற் புத்தியின்கண்ணவேயாம். "யாண்டு உருவங்கள் இருக்கின்றனவென இருதயத்தில்" என்னுஞ் சுருதிபால் உருவாதி சமஸ்காராதிகளும் ஆண்டையனவேயாம். "இவனிருதயத்திலெக் காமங்க ளாசிரயித்திருக்கின்றனவோ" "இருதயத்தின் சர்வசோகங்களை அப்பொழுது கடந்தவனாகின்றான்" "இது அசங்கம்" "இது காமங்கடந்தது" என்பனமுதலிய சுருதி சதங்களாலும்; இது அவிகாரியென்று மொழியப்படும். "அனாதித்தன்மையால் நிர்க்குணத்தன்மையால்" என்

பனமுதலிய ஸ்மிருதிகளாலும், இச்சைதுவேஷம் முதலியனவும் விஷயமாய க்ஷேத்திரத்தின் றருமமேயன்றி யான்மாவினவன்று, என, அசுத்தி கருமத்தின்கண்ணதேயன்றி யான்மாவின்கண்ணதன்று. 36

ஆதலால், உருவாதி சமஸ்காராதி அசுத்தி சம்பந்தமின்மை யானே பரமான்மாவினின்றும் நீ விலக்ஷணனன்று; பிரத்தியக்ஷாதி விரோதமின்மையிற் பரமான்மாவே யான் என்றுணரல் பொருந்தும். "அது தன்னையே யான் பிரஹ்மமாயிருக்கிறேனென்றுணர்ந்தது" "ஒரு பிரகாரத்தாலே பார்க்கத்தக்கது" "யானேகீழும்" "ஆன்மாவேகீழும்" "சருவத்தையு மான்மாவாகவே காண்க" "யாண்டிவனுக்குச் சர்வம் ஆன்மாவாகவே" "இவ்வியாவு மெவ்விவ்வான்மா" "அவ்விவன்கலையற்றோன்" 'அந்தரமற்றது பாகியமற்றது' "பாஹ்யாப் யந்தரத்தோடு கூடியது அஜம்" "பிரஹ்மமேயிது" "இத்துவாரத்தாலடைகின்றனன்" "பிரஞ்ஞானத்தினமேயங்கள்" "சத்யம் ஞானமனந்தம் பிரஹ்மம்" "அதினின்றும் அது சிருட்டித்து அதுவே பிரவேசித்தது" "சர்வபூதங்களில் ஒருதேவன் கூடன் சர்வவியாபி" "சரீரங்களில் அசரீரத்தை" "உற்பத்தி நாசமற்றது" "கஞவிஞ்ஞேயம்" "நஞவிஞ்ஞேயம்" "அவன் என் ஆன்மாவென்றறிக" "எவன் சர்வபூதங்களை" "அது சலிக்கின்றது அது சலிக்கின்றதில்லை" "அதைப்பார்த்துக் காந்திமானுகின்றான்" "அதுவேஅக்கினி" "நான்மனுவாயிருந்தேன் சூரியனும்" "உட்பிரவேசித்தவனைச் சனங்களின் சிக்ஷகன்" "பிரியதரிசனனே! சத்தாகவே" "அது சத்தியம் அது ஆத்மா அது நீயாயுள்ளாய்" என்பன முதலிய மறைகளாலுங் கூடும். 37

"சர்வப் பிராணிகளின் குகாசயனை ஆன்மாவின் சரீரங்கள்" "ஆன்மாவே தேவதைகள்" "நவத்வாரபுரத்தில்" சர்வபூதங்களிற்சமம்" "வித்யாவிநய சம்பன்னனுய்" "விபக்தங்களி லவிபக்தம்" "சர்வம் வாசுதேவன்" என்பனமுதலிய ஸ்மிருதிகளாலும்; சர்வசம்சார தர்மங்களினின்றும் விடுபட்டதாய்ப் பரம்பிரஹ்மமாய் ஆன்மாவாயுள்ள ஒன்றே நீயெனத் துணிபப்பெற்றது. 38

பிரஹ்மான்மைக்கியத் தன்மையின்கண் இலௌகிக வைதிக வியவகாரவிரோதசங்கை. 39

ஹேபகவன்? அந்தரமற்றதூஉம் பாகியமற்றதூஉம் பாகியாப்யந்தரங்களோடுகூடியதூஉம் ஜன்மமற்றதூஉம் முழுதுமாயதூஉம் சைந்தவகனமபோன்று பிரஞ்ஞானகனமேயாயதூஉம் சர்வமூர்த்திபேதவர்ஜிதமாயதூஉம் ஆகாசம்போன்றேகரசமாயதூஉம் ஆத்மாவாமேல்; சுருதிஸ்மிருதிலோகப்ரசித்தமும் நூற்றுக்கணக்கான வாதிகளின் சம்சய விஷயமும் ஆய சாத்யங்கள் சாதனங்கள் சாதகர்கள் காணப்படுகின்றனரே கேட்கப்படுகின்றனரே இஃதென்னென்று அவன் கூறுவானேல். 39

ஈண்டு ஆசிரியர் சமாதானம். 40

எவ்விவை காணப்படுகின்றனவோ கேட்கப்படுகின்றனவோ அவ்விவை அவித்தையாலியற்றப்பெற்றனவேயாம்; பரமார்த்தமாக ஆன்மாவொன்றேயுளது, அவித்யா திருஷ்டிக்கோ திமிரதிருஷ்டியாலநேக சந்திரர்தோற்றுவதுபோல் அநேகம்போற்றோற்றுகின்றது. "யாண்டுத்தான் அன்னியம் போன்றுமோ" "எக்கால் துவிதம்போலிருக்கின்றதோ அக்கால் இதரன் இதரத்தைப்பார்க்கின்றான்" "அவன் சம்சாரத்

தினின்றும் சம்சாரத்தை யடைகின்றான்" "பின்னர்யாண்டு அன்யத்தைப்பார்க்கின்றானோ அன்யத்தைக்கேட்கின்றானோ அன்யத்தை யறிகின்றானோ அது அற்பம்" "பின்னர் எது அற்பமோ அதுமர்த்யம்" "வாசாரம்பணம் விகாரோநாமதேயம்" "அந்ருதம்" "அன்னியனீசன் அன்னியனான்" எனப் பேததரிசன நிந்தையினடை வுண்டாகின்றமையிற்றுவித மவித்தைபாலியற்றப் பெற்றதேயாம். "ஏகமேவாத்விதீயம்" "எப்பொழுதிவனுக்கு" "மோகமேது" "சோகமேது" என்பனமுதலியஏகத்வவிதிசுருதிகளாலும் என்று ஆசிரியன் அனுக்கிரகிக்குக. 40

கர்மகாண்ட அப்ராமாண்ய வினாவிடைகள். 41-42

ஹேபகவன், இவ்வண்ணமாமேற்சாத்யசாதனாதிபேதமும் உற்பத்தியும் பிரளயமும் சுருதியால் யாதின்பொருட்டுக்கூறப்படுகின்றன ? 41

ஈண்டுக்கூறப்படுகின்றது:—அவித்யாவானும் சரீராதிபேதமுடையவனும் தன்னை இஷ்டாநிஷ்டசம்பந்திபாய் நினைபவனும் இஷ்டப்ராப்தியையும் அநிஷ்டபரிஹாரத்தையும் இச்சித்தவனும் சாதனங்களாலே இஷ்டாநிஷ்டப்ராப்திபரிஹாரங்களின் உபாயவிவேகத்தை யறியாதவனும் ஆகிய புருஷனுக்குக்கிரமமாக அதன் விஷயமாய அஞ்ஞானத்தை நிவர்த்திக்கும்பொருட்டுச் சாஸ்திரம் பிரவிர்த்தித்ததே யன்றிச் சாத்யசாதனாதிபேதத்தை விதிக்கப்பிரவிர்த்திக்கவில்லை. அநிஷ்டரூபசம்சாரமேயது. சாத்தியாதிபேத திருஷ்டியையுடைய சம்சாரமூலமாய அவித்தையையே உற்பத்திப்பிரளயாதிகளால் ஏகத்தன்மையினடைவின் றரிசனத்தால் சிருஷ்டியாதிவாக்கியம் நாசஞ்செய்கின்றது. 42

### அவித்யாநாசத்தின் பிரயோஜனம். 43

சுருதிஸ்மிருதிநியாயங்களால் அவித்தை நாசமாங்கால், ஆன்மா அந்தரமற்றது, பாகியமற்றது, பாகியாப்யந்தரங்களோடு கூடியது, சன்மமற்றது, சைந்தவகனம்போன்று பிரஞ்ஞானகனமேயாயது, ஒன்றாயது, ஆகாசம்போன்று பரிபூரணமாயது என்னுமிதன்கண்ணே பரமார்த்ததரிசிகட்கு ஏகப்பிரஞ்ஞையின் பிரதிஷ்டையுண்டாகின்றது; சாத்யசாதன உற்பத்திப்பிரளயாதி பேதத்தாலசுத்தியின்கந்தமும் பொருந்துகின்றதின்று. 43

### முக்தியிச்சையுண்டாங்காற் சாதனசகித கர்மத்யாக நிகமனம்.

ஆதலாலிப் பரமார்த்த தரிசனத்தை யறிய இச்சித்தவனால் வருணாசிரமாதி யபிமானத்தாலாய பாங்க்தரூப (பஞ்சப்பிரகார) புத்ரவித்தலோக வடணைகளினின்றும் விபரீத எழுச்சியாய சந்யாசஞ் செய்யத்தக்கது; அவ்வபிமானத்திற்கு நன்ஞானவிரோதத் தன்மையுண்மையின், பேததரிசனப் பிரதிஷேத அர்த்தப்பொருத்தமும் பொருந்துகின்றது. ஏகான்மாவின்கண் சாஸ்திர நியாயத்தால் அசம்சாரித்தன்மையின் ஞானமுதிக்குங்கால், அதன் விபரீதஞான முண்டாகின்றதில்லை. அக்னியின்கட் சீதத்தன்மையின் புந்தியேனும், சரீரத்தின்கட்சுரைமரணமற்ற புந்தியேனும் உளதாவதில்லையன்றோ? ஆகையினால், சர்வகருமங்கட்கும் அதன் சாதனங்களாய யஞ்ஞோபவீதாதிகட்கும் அவித்யாகார்யத்தன்மையுண்மையின், அவை பரமார்த்த தரிசன நிஷ்டருற்றியாகஞ் செய்யத்தக்கனவா மென்றுணர்க. 44

முதலாவது சிஷ்யப்ரதிபோதன விதிப்ரகாரணம் முற்றும்.

## இரண்டாவது கூடஸ்த அத்வய ஆத்மபோதப் பிரகரணம்.

சஞ்சித்த முமுக்ஷுவின் கிருத்யமாய சிரவணத்தை விதியாகச் சூசிப்பித்துக்கொண்டு சம்சார விஷயமாய சீடன் வினாக்களை அவதரித்தல். 45

*சுகமாயிரா நின்ற பிராஹ்மணராகிய பிரஹ்ம நிஷ்டரைச் சனன மரணவடிவமாய சம்சாரத்தினின்றும் விரக்தனும் முமுக்ஷுவாயு மிராநின்ற ஒரு பிரஹ்ம விசாரதற்பரனைவன் விதிப்ரகாரமடைந்து வினவுவானாயினன், ஹேபகவன்! தேகேந்திரிய விஷய வேதனைவானாய், யான் சம்சாரத்தினின்று மெவ்வண்ணம் விடுபடுவன்! அடிக்கடி துயிலினடைவால் விஸ்ரமித்து விஸ்ரமித்து நனவிற்றுக்க மநுபவிக்கின்றேன்; அங்ஙனங்கனவினுந்துக்கமனுபவிக்கின்றேன்; இஃதேயன் னென்னியல்பா? அல்லதென் னன்னிய வியல்பா யிருப்பவனுக்கு நைமித்திகமா? இயல்பாயின், இயல்பிற்கு நீக்கவொண்ணாத் தன்மையுண்மையின், எனக்கு மோக்ஷாசையின்றாம்; நைமித்திகமாயின், நிமித்த பரிகாரமாங்கால் மோக்ஷத்தினடைவுண்டாம்.* 45

சிஷ்யாஸ்வாசன பூர்வகமாகக் குருவினுத்தரம். 46-48

*அவன் பொருட்டுத் தேசிகர் திருவாய் மலர்ந்தருளுகின்றார்-குழந்தையே கேட்பாயாக நினக்கிஃதியல்பதன்று, பின்னரோ, நைமித்திகமாம்:* 46

*எனக்கேட்ட சீடன், எந்நிமித்தம் நிவர்த்தியாங்கால் நைமித்திகாபாவ மாமோ, அவ்வாறாய நிமித்தம் யாது? அதன் நிவர்த்தகந்தான் யாது? ரோகநிமித்தம் நிவர்த்தியாங்கால் எங்ஙனம் ரோகி தன்னியல்பை யடைகின்றன*

ளே, அங்ஙனம் துக்கநிமித்தம் நிவர்த்தியாங்கால் எவ்வியல்பை யானடைவனே, அவ்வாறாய என்னியல்பு யாது எனக் கேட்ப. 47

தேசிகர் திருவாய்மலர்ந் தருளுகின்றார்; அவித்தை நிமித்தம், அதன்நிவர்த்திகை வித்தை; அவித்தை நிவர்த்தியாங்கால் அந்நிமித்த மின்மையின் சனனமரண வடிவமாய சம்சாரத்தினின்றும் விடுபடுவாய்; கனூநனைத் துயரையு மநுபவிக்காய். 48

பின்னரும் விசேட மாயறியும் வேட்கையால் அவித்யா விஷயக சிஷ்யன் வினா. 49

அவ்வவித்தையாது? என்விஷயத்தது? என்னுசிரயத்தது? எதனால் யான் இயல்பை யடைவனே, அவ்வாறாய அவித்தியாநிவர்த்திகையான வித்தைதான் யாது? எனச் சிஷ்யன் வினவ. 49

குருவி னுத்தரம். 50

தேசிகர் திருவாய்மலர்ந் தருளுகின்றார்: நீ அசம்சாரியாய பரமான்மாவாயும் சம்சாரியாயுளனென்றும், அகர்த்தாவாயுங் கர்த்தாவாயுள னென்றும், அபோக்தாவாயும் போக்தாவாயுள னென்றும், நித்தியனாயு மநித்தியனாயுமுள னென்றும் விபரீதமா யுணர்கின்றாய்; இஃதவித்தை. 50

அத்யாசானுப பத்திப்பிரதர்ஸ்ன பூர்வகமாகச் சிஷ்யன் வினா. 51

யான் நித்தியனாயினும் பரமான்மாவன்று. பிரமாணங்களால் அனுபவிக்கப்படுதலின், கர்த்ருத்வ போக்த்ருத்வ வடிவ சம்சாரமெனக் கியல்பாம். அவித்தைக்குச் சுவாத்ம விஷயத்தன்மை பொருந்தாமையின், அவித்தை நிமித்த

மன்று. அவித்தையென்பது, பிரசித்த அன்னியத்தின் கண் பிரசித்த அன்னிய தர்ம அத்யாரோபணமாம் பிரசித்த வெள்ளியைப் பிரசித்த சுத்தியின் கண்ணும், பிரசித்த புருஷனைத் தாணுவின் கண்ணும், அல்லது, பிரசித்ததாணுவைப் புருஷனிடத்திலும் அத்யாரோபிக்கப் படுகின்றது போலாம். அப்ரசித்தத்தைப் பிரசித்தத்திலேனும், பிரசித்தத்தை யப்ர சித்தத்திலேனும் அத்யாரோபிப்பதில்லை. ஆத்மாவிற் கப்ரசித்தத்தன்மை யுண்மையின், ஆத்மாவின்கண் அனாத்மாவையும் அங்ஙனம் ஆத்மாவிற் கப்ரசித்தத்தன்மை யுண்மையானே அனாத்மாவின்கண் ஆத்மாவையும் அத்யாரோபிக்கின் றதில்லை யென்று சீடனாசங்கிப்ப. 51

குருவினுத்தரம். 52

அவன் பொருட்டுத் தேசிகர் திருவாய் மலர்ந்தருளுகின்றார்:—வியபிசாரத்தான் முதலதன்று, என்னை ஆத்மாவின்கண் ணத்யாரோ பணத்தைக்காண்டலின், யான் வெள்ளையன் கரியனென தேகதர்மத்திற்கு அகம்பிரத்யய விஷயமாய ஆத்மாவின் கண்ணும், இதுவாயிருக்கின்றேனென்றும் அகம்பிரத்யயவிஷயமாய ஆத்மாவிற்குத் தேகத்தின்கண்ணும் காண்டலின், பிரசித்தத்தைப் பிரசித்தத்திலே அத்யாரோபிக்கப்படுகின்ற தென்று குழந்தையே! நியமிக்கக்கூடாது. 52

வியபிசார மின்றேன்று சீடன் சங்கித்தல். 53

ஆனாலகம்பிரத்யய விஷயமாக ஆத்மாவும், இதுவெனத் தேகமும் பிரசித்தமேயாம்; ஆண்டிவ் வண்ணமாகத் தாணு புருஷர்கட்கு மிப்பி வெள்ளிகட்கு மொப்பத்தேகாத்மாக்களாய பிரசித்தங்கட்கே அன்னியோன்னிய அத்

தியாரோபண மாதலின், ஆண்டியாது விசேடத்தை யாசரித்துப் பிரசித்தங்கட்கு அன்னியோன்னிய அத்தியா ரோபண முண்டென்று நியமிக்கக் கூடாதெனப் பகவானுற்றிருவாய் மலர்ந்தருளப்பட்டது என்று சீடன் வினவ. 53

கூறிய வியபிசாரத்தை ஆசிரியர் வற்புறுத்தல். 54

தேசிகர் திருவாய் மலர்ந்தருளுகின்றார்:—மைந்தனே கேட்பாயாக! தேகாத்மாக்கள் பிரசித்தங்களென னுண்மை தான் எனினும், தாணு புருஷர்கள் போன்று விசேஷ ஞான விஷயகமாகச் சர்வலோகப் பிரசித்தங்களன்று; ஆயினெவ்வண்ணமெனின்? நித்தியமும் நிரந்தர அவிசேஷ ஞான விஷயமாகப் பிரசித்தமாம். இது தேகம், இது ஆத்மா வென விசேஷ ஞானங்களாற் றேகாத்மாக்களை யெவனொருவனுங் கிரகிபான்; அதனானே ஆத்மானாத்ம விஷயத்தில் இவ்வண்ணமாத்மாவென்றும் இவ்வண்ண மாத்மாவன்றென்றும் உலகர் அடிக்கடி மோகிக்கின்றனர். இவ்விசேஷத்தை யாசிரயித்துத்தான் இவ்வண்ணம் நியமிக்கக் கூடாதெனக்கூறினும். 54.

ஆத்மாவிற்கு அத்தியஸ்தத் தன்மை யுண்மையின் சத்துத் தன்மை பொருந்தா தெனச் சீடன் சங்கித்தல். 55

அற்றேல், அவித்யாத்யாரோபிதம் யாண்டு யாதோ ஆண்டஃது சத்தெனக் கண்டோம். எங்ஙன மிப்பியின் கண் வெள்ளி, தாணுவின்கட் புருடன், பழுதையின்கட் பாம்பு, ஆகாசத்தின்கட் டலமலினத்தன்மை என முதலனவாமோ; அங்ஙனமே, தேகாத்மாக்கட்கும் நித்தியமும் நிரந்தர அவிசேஷஞானத்தால் அன்னியோன்னிய அத்யாரோபணஞ் செய்யப்பட்டதாம். எஞ்ஞான்று மவ்வன்னியோன்னியங்க

ட்கு அசத்வமாம். எங்ஙனமிப்பியாதிகளில் அவித்யாத்யா ரோபிதவெள்ளியாதிகட்கும், விபரீதங்களிலதன் விபரீதங் கட்கும் என்ஞான்றும் அத்யந்த அசத்வமாமோ, அங்ஙனந் தேகாத்மாக்கட்கும் அவித்தையினாலே அன்னியோன் னிய அத்யாரோபணஞ் செய்யப்பட்டதாம். ஆண்டிவ்வண் ணமாகவே தேகாத்மாக்கட்கசத்வம் ப்ராப்தியாமெனின் வைநாசிக பக்ஷத்தன்மை யுண்மையின் அதுவு மநிஷ்ட மாம்; பின்னரோ, அனாத்மாதிஷ்டான விபரீதமாகத் தேக மவித்தையா லாத்மாவின் கண் ணத்யாரோபிதமாம். சன்மா த்திர ஆத்மாவின்கண் ணேகத்திற் கசத்வம் பிராப்தியா மெனிற் பிரத்தியக்ஷாதி விரோதத்தாலதுவுமனிஷ்டமாம். ஆகையால் ஆகாத்மாக்களவித்தையா லன்னியோன்னியத் தின் கண்ணத்தியாரோபிதங்களன்று; ஆயி னெவ்வண்ண மூலகவியவகார மெனின்? வம்சத்தம்பாதிகள் போன்று நித்திய சையுக்தங்களா மாலோவெனின்?

ஈண்டாசிரியர் உத்தரங்கூறல். 56

அற்றன்று, அநித்யத்வ பாரார்த்தத்வப் பிரசங்கம் வருத லின், வம்சத்தம்பாதிகள் போன்றே சேர்க்கைத் தன்மை யுண்மையிற் பாரார்த்தத் தன்மையு மநித்தியத் தன்மையும் பொருந்தும். மேலும் யாதொரு ஆத்மா தேகத்தோடு சேர் க்கை யுறுவதெனப் பிறராற் கற்பிக்கப்பட்டதோ, அது சேர் க்கைத் தன்மையுண்மையிற் பாரார்த்தமாம்; சேர்க்கையற்றது பரம், அன்னியம், நித்திய மென்றுணர்க.

வைநாசிக பக்ஷப்பிராப்திதோஷவினாவிடைகள். 57-58

ஆகத்திலத்தியாரோபத்தன்மை யுண்மையின், அச் சேர்க்கையற்ற சங்காத சான்றாய ஆத்மாவிற்குத் தேகமாத்

திரத் தன்மையால் அசத்வ அநித்தியத்வாதி தோஷப் பிரசங் கமுண்டாம். ஆண்டு நிராத்மகம் தேகம் நிர்த்தேகமுமாத்மா வெனவைநாசிகபக்ஷப் பிராப்தி வடிவ தோஷமுண்டா மா லோ வெனின்? 57

அற்றன்று, சுயமாகவே யான்மாவிற் காகாசத்திற்குப் போற் சேர்க்கைத் தன்மையின்மையை யங்கீகரித்துண்மை யின், அவ்வாத்மாவும் யாவற்ேறாடுஞ் சேர்க்கையற்றதெனத் தேகாதியாவும் நிராத்மகமாகா; என்னை ஆகாசம் யாவற்ேறா டுஞ்சேர்க்கையற்றதெனயாவும் நிராகாசம் எங்ஙனமாகாதோ அங்ஙனமென்க. ஆகையினால், வைநாசிகபக்ஷப்பிராப்தி தோ ஷமின்றாம். 58

பரமதத்தின்கண்ணுள்ள தூஷணத்தைப் பகர்கின்றார். 59

ஆத்மாவின் கட்டேகத்திற்கசத்வமாங்காற்காட்சியாதி விரோதமுண்டாமெனயாது முற்கூறப்பட்டதோ அது பொ ருந்தாது. காட்சியாதிகளாலாத்மாவின்கட் காயத்திற்குண் மைத்தன்மை காணப்படாமையின், குண்டத்திற் பதரிக்கனி போன்றும், க்ஷீரத்திற்கிருதம்போன்றும், திலத்திற்றைலம் போன்றும், பித்திபிற்சித்திரம்போன்றும், ஆத்மாவின் கட் காயங்காட்சியாதிகளாற் காணப்படுகின்ற தின்றன்றோ? ஆகையினாற் காட்சியாதி விரோதமின்று. 59

## வேறுபிரகாரமாக அத்தியாசம்பொருந்தாதெனச் சங்கித்தலுஞ் சமாதானமும். 60-73

ஆயிற் பிரத்தியக்ஷாதிகளாற் பிரசித்தமற்ற ஆத்மா விற்றேகாத்யாரோபணமேனும் ஆகத்திலாத்மாரோபணமே னும் எங்ஙனமாமாலோவெனின்? 60

ஆன்மாவிற்கியல்பாகப் பிரசித்தத்தன்மை யுண்மையின், இம்முதலது தோஷமன்று. கம்மின்கட்டலமலாதி அத்தியாரோபணங்காண்டலின், ஓரொருகாற்சித்தத்தின்கண்ணே அத்தியாரோபணம் நித்தியசித்தத்தின்கண்ணின்றென்று நியமிக்கக்கூடாதன்றோ. 61

ஹேபகவன்! ஆகாத்மாக்களின் அன்னியோன்னியாத்தியாரோபணம் அத்தியாச ஞானகாரபரிணமம் தேகாதி சங்காதத்தாற் செய்யப்பெற்றதா? அல்லது; ஆத்மாவாலாற்றப்பெற்றதாவென்? என்று சீடன் வினவ. 62

தேசிகர் திருவாய்மலர்ந்தருளுகின்றார்:—ஆகாதி சங்காதத்தாலாற்றப் பெற்றதாமேலாகுக; அல்லது, ஆத்மாவாலாற்றப் பெற்றதாமேலாகுக; அதிலாகவேண்டியதென்? 63

எனக்கேட்ட சீடன் கூறுகின்றான்:—யானாகாதி சங்காதமாத்திரமாவனேலாயின், எனக்கசேதனத்தன்மை யுண்மையிற் பரார்த்தத்தன்மை யுண்டெனத் தேகாத்மாக்கட்கிதரேதராத்தியாரோபண மென்னுவியற்றலொண்ணாது. சங்காதங்களினின்றன்னியமாயும் பரமாயுமுள்ள வாத்மாயானுவனேற் சேதனத்தன்மை யுண்மையிற் சுவார்த்தனுமெனச் சேதனவானுய என்னுமேலே ஆத்மாவின்கட் சர்வானர்த்த பீஜபூதமாய வத்யாரோபணஞ் செய்ப்பட்டதன்றோவாம்.

எனக்கேட்ட தேசிகர்திருவாய்மலர்ந்தருளுகின்றார்:—அனர்த்த பீஜபூதமாய் மித்தையாகிய வத்தியாரோபணத்தை யறிவாயேலாயிற்செய்யா தொழிவாயாக. 65

ஹேபகவன்! செய்யாதொழியக் கூடவேயில்லை; எவனே அன்னியனு லேவப்பட்டவனாய் நான் ஸ்வதந்திரனன்று.

ஆயினசேதனத்தன்மை யுண்மையிற் சுவார்த்தன் நீ யன்று; எவனுலேவப்பட்ட ஸ்வதந்திரனய்ப் பிரவர்த்திக்கின் றனேயோ அச்சேதனவான் சுவார்த்தன்; சங்காதனேநீ. 67

யானசேதனனயிற் சுகதுக்கவேதனையையுந் தேவரீர் திருவாய்மலர்ந்தருளியதையு மெங்ஙன மறிவேன் என்று சீடன் கூற. 68

தேசிகர் திருவாய்மலர்ந்தருளுகின்றார்:—சுகதுக்கவே தனையினின்றும் எம்மாலியம்பிய தினின்றும், நீயென் அன் னியனு? அல்லது, அனன்னியனேயாவென்? 69

யானனன்னியனன்று, எங்ஙனமெனின்? எக்காரணத் தாற் கர்மபூதமாய் அவ்விரண்டையுங் கடாதிகள் கடுப்பவறி கின்றேன். யானனன்னியனுவனேலாயினவ்விரண்டையுமறி யாமலன்றோ விருத்தல்வேண்டும்; பின்னரோ யானறிகின்றே னுதலானனன்னியனுவன். அனன்னியத்வமாயினே சுகதுக் கவேதனுவிக் கிரியையும் ஸ்வார்த்தமாகவே பிராப்தியாகின் றது தேவரீர் திருவாய்மலர்ந்த அசத்வ அநித்யத்வாதி தோ ஷமுமாம். சுகதுக்கவேதனு விக்கிரியைகளாய அவற்றிற்குச் சுவார்த்தத்தன்மை பொருந்தா. சந்தனமுட் களாலாற்றுஞ் சுகதுக்கங்கள் சந்தன முட்களின்பொருட்டன்றன்றோ அல் லது, கடோபயோகந்தான்கடத்தின் பொருட்டன்றன்றோ, ஆதலாற் சந்தனுதியாலியற்றும்பயன் அதனையறியுமெனக் காம். யானே அதினின்று மன்னியன், புத்தியிலாரூடமாய சமஸ்தவர்த்தத்தையு மறிகின்றேனென்று சீடன்கூற. 70

பிரதீபப்பிரகாசங்களுக்குப்போற்பாஸ்பரத்திற் பாஸ் பரமாற்றுமதிசயாபாவமாய சமத்தன்மையாற் சேதனவா னுக்குச் சேதனவான் பொருட்டாந்தன்மை பொருந்தாமை

யிற் சேதனவான்பாதந்திரனுப் பானுலேவப்படா னெனமற் றதுமன்றும். அசேதனவானுந் தன்மையானே அசேதன வானுக்குச் சுவார்த்தசம்பந்தம் பொருந்தாமையின், சேஷித் வம் பொருந்தாமையின், அசேதனவான் பொருட்டாந்தன் மையுஞ் சேதனவானுக்குப் பொருந்தாதென்க; எனவே இரண்டாவதுமேலாதாம்; அசேதனவானுக் கொன்றற் கொன்றன் பொருட்டாந் தன்மையுங் கண்டோமில்லை; காட் டகுட்டியங்கள் ஒன்றற் கொன்றன் பொருட்டியற்றுவன வன்றன்றே. 71

ஆண்டானடிமைகட்குச் சேதனவானுந்தன்மை யொப் பாயினும் ஒன்றற்கொன்றன் பொருட்டாந்தன்மை கண் கூடாய்க்கண்டன மெனின்? 72

அற்றன்று, அக்கினியினுஷ்ணப் பிரகாசம்போற் சேத னவான்றன்மைமேயநினக்குக் கூறும்வேட்கைத்தன்மை யுண்மையின் என்க. பிரதீபப் பிரகாசங்கட்கெனத்திருட் டாந்தமுங் காட்டப்பட்டதன்றே. ஆண்டங்ஙனமாகவே அக்கினியுஷ்ணப்பிரகாச துல்லியமாய கூடஸ்த நித்தியசை தன்ய வடிவத்தாற் றன்மதிமாட்டாரூட மாயயாவற்றையு மறிகின்றயாதலினென, இங்ஙனமாத்மாவிற் கெஞ்ஞான் றும் நிர்விசேஷத்தன்மையை யறிவாயேற்றுயிலில் விஸ்ர மித்து விஸ்ரமித்து நனுக்கனுக்களிற் றுக்கமனுபவிக்கின் றேனெனவும், இதுவேயென் னென்னியல்பாவல்லது நை மித்திகமாவென் னெனவும் ஏன்கூறினுய்? இவ்வியாமோக மிரிந்ததாவென்? அல்லதில்லையாவென்? புகலுதி. 73

கூடஸ்தவிஷயகமாய சம்சயபரிகாரங்கள். 74-75

எனக்கேட்டசீடன் ஹேபகவன் றேவரீரது திருப்பிர சாதத்தால் வியாமோகந்தீர்ந்தது; பின்னரோகூட ஸ்தத்தன்

மையிலையமெனக்குள தாகின்றது, எங்ஙனமெனின்? அசேதனத்தன்மை யுண்மையிற் சத்தாதிகட்குத் தாளுய்விளங்குந்தன்மையின்று, சத்தாதிவடிவ ஞானேற்பத்தியினின்று மவைகட்கு விளங்குந்தன்மை சித்திக்கின்றது. ஒன்றற்கொன்று வேறுபாடாய விசேஷணங்களோடுகூடிய நீலபீதாதியாகாரவத்வத்திற்குச் சம்பவமின்மையிற் சத்தாதிகள் ஞானமாத்திரவடிவனவன்று. ஆதலாற் பாகியாகார நிமித்தத்தன்மையுணரப்படுகின்றதெனப் பிரத்யயங்கட்குப் பாகியாகாரவற் சத்தாதி யாகாரத்தன்மையின் சித்தியாம். அங்ஙனம் ஞானங்கட்குஞ் சடத்வ மாகமாபாயித்தன்மையாலாம்; என்னை? அகம்பிரத்யயாலம்பன வஸ்துவாய அந்தக்கரணத்தின் பேதமாய விருத்திவிசேடங்கட்குச் சேர்க்கைத் தன்மையாலசேதனத் தன்மை பொருந்துகின்றமையினென்க. சுவார்த்தத் தன்மையின் சம்பவமின்மையின், ஸ்வரூப வ்யதிரிக்தகிராககக் கிராகியத் தன்மையானே சத்தாதிகளைப்போன்றே சித்திக்கின்றது. சேர்க்கையற்ற தன்மையோடு சைதன்ய வடிவத் தன்மையுண்மையாற் சுவார்த்தனுயினும் நீலபீதாதி யாகாரங்களாய அகம்பிரத்யயங்கட்கு உபலப்தாவென விக்கிரியாவானேயாம்; ஆகவே, எங்ஙனங் கூடஸ்தன் என ஐயம் என்று கூற. 74

அவன் பொருட்டாசிரிய ரருளுகின்றூர், நினைதையம் பொருந்தாது, எக்காரணத்தா லந்தப் பிரத்தியயங்கட்கு நியமமாக அசேஷ வுபலப்தியினுனே அபரிணுமித்தன்மை யுண்மையிற்கூட ஸ்தத்வ சித்தியின்கண் ணிச்சயவேதுவாய் அசேஷசித்தப் பிரசாரவுபலப்தியையே சம்சயவேதுவெனச் சொன்னுய். நினக்குப் பரிணுமித் தன்மையுளதாமேற்றன்

விஷயத்திற் சித்தத்திற்குப் போன்றும் தம் விஷயங்களிற் பொறிகட்குப் போன்றும் அசேஷ ஸ்வவிஷயசித்தப்பிரசார வுபலப்தியுண்டாகாதன்றோ; அங்ஙனம் ஆத்மாவாய நினக்கு ஸ்வவிஷய ஏகதேச வுபலப்தியின்றாதலின், நினக்குக்கூடஸ்தத் தன்மையேசித்தித்தது. 75

## உபலப்த்ருத் தன்மையானே கூடஸ்தத் தன்மை கூடாதெனுங் கடாவிடைகள். 76-85

உபலப்தியென்னுந் தாதுவினர்த்தம் விக்கிரியையேயாம். அங்ஙனமாகவே உபலப்தாவிற்குங் கூடஸ்த வடிவத்தன்மைக்கும் விருத்தமாமெனஆண்டுகூறில்? 76

அற்றன்று, தாதுவினருத்த விக்கிரியையின்மாட்டுபலப்தியுபசாரமாதலின்; எங்ஙனஞ் சிதிக்கிரியைத்வை தீபாவபலாவசான மெனத் தாதுவினருத்தத்தா லுபசரிக்கப்படுகின்றதோ, அங்ஙனம் யாதுபுத்தி பரிணாமப் பிரத்தியயமோ தாதுவினருத்தமும் விசிஷ்டக்கிரியாத்மகமுமாயவது ஆத்மாவி னுபலப்தியாபாச பலாவசானமென உபலப்தி சப்தத்தா லுபசரிக்கப்படுகின்றது. 77

எனக்கேட்ட சீடன், ஹேபகவன்! எனக்குக்கூடஸ்தத்தன்மையைப் பிரதிபாதிப்பா ளித்திருட்டாந்தம் அசமர்த்தமாம்; எங்ஙனமெனின்? சிதிக்கிரியை சேத்யவிக்கிரியாவசானமா மெங்ஙனம் தாதுவினருத்தத்தா லுபசரிக்கப்படுகின்றதோ அங்ஙனம் உபலப்திசப்தோபசரிதமாயினுந் தாதுவினருத்தமாய புத்திபரிணாமப் பிரத்தியயம் ஆத்மாவின் உபலப்தி விக்கிரியாவசானமாயின், ஆத்மாவிற்குக்கூடஸ்தத் தன்மையைப் பிரதிபாதிப்பான் சமர்த்த மன்றாமென்று கூற.

தேசிகர் திருவாய் மலர்ந்தருளுகின்றார், உண்மையே, உபலப்தியுபலப்தாக்கட்குப் பேதமிருப்பின் இங்ஙனமாகுக உபலப்தாவோ நித்தியவுபலப்தி மாத்திரமேயாம், தார்க்கிக சமயத்திற்போன்று உபலப்தி அன்னியம் உபலப்தா அன்னியமன்று. 79

உபலப்தி பலாவசானந்தாதுவி னருத்த மெங்ஙன மெனின்? 80

மைந்தனே கிளத்தப்படுகின்றது கேள், உபலப்தியாபாச பலாவசானமெனக் கூறினும், அது உன்னாற் கேட்கப்படவில்லையாவென்? ஆத்மா விக்கிரியோர்த்பாதனுவசானமென எம் மாற் கூறப்படவில்லையன்றோ! 81

ஆயினெங்ஙனங் கூடஸ்தனுய என்னிடத்தில் அசேஷஸ்வ விஷயசித்தப்பிரசார உபலப்த்ருத்தன்மையுளதெனக்கூறினீர், எனச் சீடன்கூற. 82

அவன்பொருட்டுத் தேசிகர் திருவாய்மலர்ந்தருளுகின்றார்: உண்மையுரைத்தனம் அசேஷ ஸ்வவிஷய சித்தப்பிரசாரோபலப்த்ருத் தன்மையாய அதனுனே யுனக்குக்கூடஸ்தத் தன்மையைக் கூறினும். 83

ஹேபகவன்! இங்ஙனமாமேல் கூடஸ்தநித்திய உபலப்தி ஸ்வரூபமாய் என்னிடத்தில் உற்பன்னமாய எனது ஸ்வரூப வுபலப்தி ஆபாசபலாவசானவான்களாய ஒலியாதிவடிவ புத்திபரிணமப் பிரத்தியயங்களினிடத்தில் எனது அபராதம் யாது? 84

உண்மையே, அபராதமின்று, பின்னேயோவெனின் அவித்தைமாத்திரந்தானபராதமென்று முன்னமே கூறியுள்ளோம். 85

## அவஸ்தாத்திரய சாக்ஷியாதலிற் கூடஸ்தத்தன்மை கூடாதெனச் சங்கைசமாதானங்கள்.

ஹேபகவன்! உறக்கத்திலொப்ப எனக்கு விக்கிரியையி ன்றாயின் எங்ஙனங் கனு நனுக்கள் கூடும்?. 86

அவன் பொருட்டாசிரியர் அருளுகின்றார்: சததம் உன் னாலனுபவிக்கப்படுகின்றனவா வென்? 87

நன்றனுபவிக்கின்றேனாயினும் இடைவிட்டுவிட்டேயன் றிச் சததமன்று. 88

அவன்பொருட்டாசிரியர் அருளுகின்றார்: ஆயினாகந்து கமாய இவைகள் நினது ஆத்மவடிவங்களன்று; நினது ஆத் மவடிவமாமேற் சைதன்ய வடிவம்போற் சந்ததமும் ஸ்வத சித்தமாகவன்றோ விருக்கவேண்டும் மேலுங்கனு நனுக்கள் நினது ஆத்ம வடிவங்களன்று, வியபிசாரித் தன்மையுண்மை யின், வத்திராதிகள் போல், எதற்கெது வடிவமோ அது அத ன் வியபிசாரியெனக் கண்டோமில்லை கனுநனுக்களோ சைத ன்ய ஸ்வபாவத்தினின்றும் வியபிசாரங்களாம் சுழுப்தியிலோ வடிவம் வியபிசரிக்கும் அது நஷ்டமென்றேனும் இன்றென் றேனும் பாத்தியமேயாம். எங்ஙனந் தனவஸ்திராதிகட்கு நாச த்தைக் கண்டனமோ, கனுமயலானுள்ளவாயவைகட்கு அபா வத்தைக் கண்டனமோ அங்ஙனம் அதத்தர்மங்களாய ஆகந் துகங்கட்கு உபயாத்மகத்தன்மையைக் காண்டலின். 89

அற்றேல், ஹேபகவன் இங்ஙனஞ் சுழுப்தியிற்கனு நனுக் கட்கொப்ப உபலப்தியின்மையிற் சைதன்யவடிவிற்கும் ஆகந் துக அடைவுண்டாம் அல்லது கதிவேறின்மையின் அசை தன்யவடிவன்யானாவேன் எனின்? 90

அற்றன்று, மைந்த? நோக்குதி? அது பொருந்தாமை யின், நிருபாதிக சைதன்யஸ்வரூபத்தை ஆகந்துகமெனக் காண்பாயேற்காண், சம்வற்சர சதங்களாலும் உத்தியால் நிரூபிப்பான் யாங்கள் வல்லேமல்லேம் அன்னிய எம்மூடனும் நிரூபிக்கவல்லனல்லன்; சேர்க்கைத்தன்மை யுண்மையிற் பரார்த்தத்தைபும் அநேகத்வத்தையும் நாசித்வத்தையும் எவ்வுத்தியாலும் நீக்கவொண்ணாது. ஸ்வார்த்தமற்றதற்கு ஸ்வதசித்தியின்மையின் எனக்கூறினும் சைதன்யஸ்வரூபமாய ஆத்மாவிற்கோ ஸ்வதசித்திபுண்மையின் அன்னிய அனபேக்ஷத்தன்மையாவராலும் நீக்கவொண்ணாது வியபிசாரமின்மையினென்க. 91

அற்றேல், சுழுத்தியிற்காண்கின்றேனில்லையென வென்றால் வியபிசாரங்காணப்பட்டதேயெனின்? 92

அற்றன்று, வியாகதத்தன்மை யுண்மையின், எங்ஙனம் வியாகாதம் எனின்? காண்கின்றநினது காண்கின்றேனில்லையென்னும் வசனம்வியாகதமன்றோ. ஹேபகவன் சுழுப்தியிலென்றற்சைதன்யமேனும் அன்னியஞ்சிறிதேனும் ஒருபொழுதுங்காணப்படவில்லையே? ஆயின் நீசுழுப்தியில் எக்காரணத்தால் திருசியத்தையே நிஷேதிக்கின்றனை யன்றித்திருஷ்டியையன்றோ அக்காரணத்தால் திருஷ்டிமானேயாகின்றாய் நினதுதிருஷ்டியாதோ அதுசைதன்யம் எனஎம்மாற் கூறப்பட்டுளது. எவ்விருக்கும் வத்துவாற்சிறிதும் அறியப்படவில்லையென்று நீபிரதிஷேதிக்கின்றனையோ அதுதிருஷ்டி நின் சைதன்யம், ஆகவே யாண்டும் வியபிசாரமின்மையிற்கூடஸ்த நித்தியத்தன்மையானது ஸ்வதசித்தமேயாம், பிரமாணாபேக்ஷயின்று. ஸ்வதசித்தமாய பிரமாதாவிற்கோ! அன்னிய

மாயபிரமேயத்தினது விளக்கத்தின்பொருட்டுப் பிரமாணுபே க்ஷைபுண்டென்க; விளக்கமில்வடிவாய அன்னியத்தினது விளக்கத்தின்பொருட்டு எவ்வன்னிய நித்தியவிளக்கம் அவா வப்படுகின்றதோ அதுகூடஸ்தமேயாம் நித்தியசுயஞ்சோதி யியல்பதாதலினென்க. பிரமாணுபேக்ஷையேனும் பிரமாதா வினபேக்ஷையேனுமின்று, அவ்வியல்புடைமையின்; எங்ஙனம்:—பிரகாசனம் அல்லது உஷ்ணத்வம், அயமப்புவாதி யின்கண் அனலாதித்தனுதியாய அன்னியத்தினின்றுமவாவப் படுகின்றது அவ்வியல்புடையனவன்மையின்; அனலாதித்தா திகட்கோ அதனபேக்ஷையின்று எப்பொழுதும் அவ்வியல்பு டைமையின். 93

சம்வித்தின் நித்தியத்வ ஆக்ஷேபபரிகாரங்கள். 94-101

பிரமை அநித்தியத்துவத்திலேயாம் நித்தியத்துவத்தி வின்றெனின்? 94

அற்றன்று, அவகதிக்கு நித்தியத்வ அநித்தியத்வங்க ளின் விசேடம்பொருந்தாமையின்; சேதனத்திற்குப் பிரமா த்வமாங்கால் அநித்தியசேதனம்பிரமை நித்தியமன்று என விசேடம் உணரப்படுகின்றதின்றன்றே. 95

நித்தியமாங்காற் பிரமாதாவிற்கு அபேக்ஷையின்று, அநித்தியமாங்காலோ யத்தனுந்தரிதத்தன்மை யுண்மையிற் சேதனமபேக்ஷிக்கின்றதென்று விசேடமாமெனின்? 96

ஆயின் பிரமாணநிரபேக்ஷைபினுலே பிரமாதாவாய ஆத்மாவிற்கு ஸ்வதசித்திசித்தித்ததென்க. 97

அபாவத்தினும் அபேக்ஷையினபாவமாம் நித்தியத்தன் மையுண்மையினெனின்? 98

அற்றன்று, ஆத்மாவின்கண்ணவகதிக்குச் சற்பாவமுண்மையினுனேயென விதுபரிகரிக்கப்பட்டதாம்; பிரமாதாவின் சித்தியேற் பிரமாணுபேக்ஷையாம், எவனுக்குப்பிரமிக்கும் வேட்கையுளதாம்? எவனுக்குப்பிரமிக்கும்வேட்கையோ அவனே பிரமாதாவென அங்கீகரிக்கப்படும்; அவன் சம்பந்தமாய பிரமிக்கும்வேட்கையும் பிரமேயமாயகர்ம விஷயமேயன்றிப் பிரமாத்ருவாயகர்த்ரு விஷயமன்று பிரமாத்ருவிஷயத்வமாமேற் பிரமாதாவிற்கும் அவ்விச்சைக்கும் அனவஸ்தைப்பிரசங்கம் வருதலின், அதற்கும் வேறுபிரமாதா அதற்கும் வேறெனு, இங்ஙனமே இச்சைக்குப்பிரமாத்ருத்வ விஷயத்வத்தி லென்றுணர்க; அவ்யவஹிதத்தன்மையானும் பிரமாதாவாய ஆத்மாவிற்குப் பிரமேயத்வம்பொருந்தாதென்க. உலகத்திலோபிரமேயம் என்பது பிரமாதாவினிச்சா ஸ்மிருதி பிரயத்னப்பிரமாணஜன்ம வியவகிதமாமெனப்பிரசித்தமாம்; வேறன்று, அவகதி பிரமேயவிஷயத்தது திருஷ்டா. தானே பிரமாதா, பிரமாதாவாயதனக்கே இச்சாதிகளின் ஒவ்வொன்றுலேனும் வியவகிதங்கற்பிப்பான் எவ்வாற்றுனும் கூடாதென்க. ஸ்மிருதியும் ஸ்மர்த்தவ்ய விஷயத்ததேயன்றி ஸ்மர்த்ருவிஷயத்ததன்று அங்ஙனமிச்சைக்கு இஷ்டத்தை விஷயஞ்செய்புந்தன்மையுளதேயன்றி இச்சாவானை விஷயஞ்செய்யுந்தன்மையின்றென்க, ஸ்மர்த்ரு இச்சாவான்களை விஷயஞ்செய்யுந்தன்மையினே பூர்வம்போல் ஸ்மிருதியிச்சைகட்கனவஸ்தை நீக்கமுடியாதாம். 99

அற்றேறப் பிரமாத்ருவிஷயாவகதியுண்டாதலில்லாக்காற் பிரமாதா அனவகதமேயாமெனின்? 100

அற்றன்று, அவகந்தாவிற்குமவகதிக்குமவகந்தவ்ய விஷயத்தன்மையுண்மையின்; அவகந்துரவகதி விஷயத்வத்திலோ

அனவஸ்தை முன்போன்றுமென்க, அவகதியுமாத்மாவின் கட் கூடஸ்தநித்திய ஆத்மச்சோதியாம், அஃதக்கினியா யிரஞ்சோதியாதி யுஷ்ணவொளியொப்ப அன்னியத்தினவா யின்றியே துணியப்பெற்றதெனமுன்னமே நன்குசாதித்த னம். சைதன்யஆத்மச்சோதியாய அவகதிக்குத் தனதாத் மாவிலநித்தியத்வமாங்கா லாத்மாவிற்குத்தன்பொருட்டாந் தன்மைபொருந்தாது, காரியகாரண சங்காதங்கடுப்பச் சேர்க் கைததன்மையுண்மையிற் பிறர்பொருட்டாதலையுந் தோஷத் தோடு கூடியிருத்தலையுங்கூறினேம்; எங்ஙனமெனின்? சைத ன்ய ஆத்மச்சோதிக்குத் தனதாத்மாவின்மாட்டனித்தியத் தன்மையாங்கால் ஸ்மிருதியிச்சையாதி வடிவவியவதானத் தாற் (விச்சேதத்தாற்) சாந்தரத்வ (இச்சாதிவிருத்தியந்தரபூ ர்வகத்வ)மாம். அங்ஙனமாகவே அச்சைதன்யச்சோதிச்கு உற் பத்திக்குமுன்னரும் பிரத்வம்சத்திற்குப்பின்னரும் ஆத்மா வின்கண்ணேயின்மையிற்சக்ஷுராதிகட்குச் சமமாய்ச்சேர்க் கைத்தன்மையுண்மையிற் பிறர்பொருட்டாதலாமென்க. எஞ் ஞான்றாத்மாவின்சட் சைதன்யச்சோதியினுற்பன்னமுறாதா மோ அஞ்ஞான்றாத்மாவிற்குத்தன் பொருட்டாந்தன்மை சம்பவிப்பதேயின்று, ஆத்மாவாத்மாக்கட்குத்தன்பொருட் டாந்தன்மைபிறர்பொருட்டாந்தன்மைச் சித்தியானது சம் ஹதத்தன்மையின்பாவாபாவ அபேக்ஷயதேயாமென்க. ஆதலின் அன்னியவேட்கையின்றியே ஆத்மாவிற்கு நித்திய சைதன்யச்சோதித்தன்மை துணியப்பெற்றதாம். 101

பிரமாத்ருத்வம் பொருந்தாதெனச் சங்கைசமாதானங் கள். இங்ஙனமாமாயிற் பிரமாஸ்ரயத்வமில்லாச்சா லெங்ங னம்பிரமாதாவிற்குப் பிரமாத்ருத்வங் கூடுமெனின்? 102

நுதலப்படுகின்றதுகேள்! பிரமைக்கு நித்யத்வாநித்யத்வங்கூறுவதில் வடிவவிசேஷமின்மையின் அவகதியேபிரமையாம்; ஸ்மிருதியிச்சையாதி பூர்வகமாய நித்தியமாயவதற்கேனுங்கூடஸ்தநித்தியமாயவதற்கேனும் வடிவவிசேஷமூளதாதலின்றென்க. எங்ஙனந் திஷ்டத்யாதி தாதுவினருத்தமாய்ப் பலமாய்க்கத்யாதிபூர்வகமாய அநித்தியத்திற்கேனும் அபூர்வமாயநித்தியத்திற்கேனும் வடிவவிசேடமின்றென "மனுடர் நிலைபெற்றிருக்கின்றனர்,பர்வதங்கணிலைபெற்றிருக்கின்றன" என்பனவாதியைத்துல்லியமாய்ச் சொல்லுவதைக் கண்ணுற்றனமோ அங்ஙனம்நித்திய அவகதிவடிவமாய் பிரமாதாவின் மாட்டும் பிரமாத்ருத்வங்கூறலானது பலசாமான்யத்தால் (பலஸ்வரூபப்பிரமையில் விசேஷாபாவத்தால்) விரோதமின்றுமென்க. 103

## கர்த்ருத்வ ஆக்ஷேபபரிகாரங்கள். 104-107

ஈண்டுச்சிடன்கூறுவதாவது:—நித்திய அவகதிவடிவமாய ஆத்மாவிற்கு அவிக்கிரியத்தன்மையுண்மையிற் காரியகாரணங்களோடு சேராததாய்வாச்சியாதிகளோடு தச்சாதிகளுக்குப் போற்கர்த்ருத்வம் பொருந்தாதென்க. சேராதவியல்பதிற்குங்கார்ய கரணக்கிரகணமாங்காலனவஸ்தையுண்டாம். தச்சாதிகளுக்கோ காரியகரணங்களோடு எஞ்ஞான்றுஞ்சேர்க்கையுளதென வாச்சியாதிகிரகணத்தில் அனவஸ்தையுண்டாகாது. 104

ஈண்டோ சேராதவியல்பதிற்குக் கரணக்கிரகணமின்றுயிற்கர்த்ருத்வங்கூடாதெனக் கரணங்கிரகிக்கத்தக்கதாம்; அக்கிரகணமும் விக்கிரியையேயெபன அதன்கர்த்ருத்வத்திற்

கரணாந்தரங்கிரகிக்கத்தக்கதாம் அக்கிரகணத்தினூடும் வேறெனப் பிரமாதாவிற்குக்கர்த்ருத்வமாங்கால் அனவஸ்தையபரிகார்யமாய். கிரியையே ஆத்மாவைச் செய்விக்கின்றதின்று, அசித்தமாயதற்கு வடிவமின்மையின். அற்றேலன்னியும் ஆத்மாவையடைந்து கிரியையைச்செய்விக்கின்றதெனின்? அற்றன்று, அன்னியத்திற்கு ஸ்வதசித்தத்வ, அவிஷயத்வ, பிரேரகத்வம், பொருந்தாமையின்; இரண்டாவதேல் ஆத்மாவிற்குவேறாய அசேதனவஸ்து ஸ்வதசித்தமெனக்கண்டோமில்லை சப்தாதிசர்வமும் அவகதிபலாவசானப்பிரத்யயத்தாலறியப்பட்டதாய்ச் சித்தமாம் ஆத்மாவினன்னியத்திற்கு அவகதியாமேல் அதுவுஞ்சேர்க்கையற்றுத் தன்பொருட்டதாய ஆத்மாவேயாம்·பிறர்பொருட்டதன்று அவகதியவசானப்பிரத்யய அபேக்ஷசித்திதரிசனத்தால் தேகேந்திரிய விடயங்கட்குத் தன்பொருட்டாந்தன்மையை யுணர்வான்வல்லேமல்லேம். 105

அற்றேல், ஆகத்தினவகதியின்கண் யாதொருகாட்சியாதிப் பிரத்யயாந்தரமுமவாவப் படுகின்றதின்றெனின். 106

உண்மையே, சாக்கிரத்தின்கண்ணிங்ஙனமாருக மரணவுறக்கங்களிலோ காயத்திற்குங் காட்சியாதிப்பிரமாண அபேக்ஷையே சித்தித்தது அங்ஙனமே இந்திரியாதிகட்குமாம். பாகியங்களாய சப்தாதிகளே தேகேந்திரியாகாரங்களாகப் பரிணமிக்கின்றனவெனப் பிரத்யக்ஷாதிப்பிரமாணாபேக்ஷயே சித்திக்கின்றது; பிரமாணபலமாய அவகதியைச் சித்தியெனவும்; அவ்வவகதியும் கூடஸ்தசுயஞ்சித்த ஆத்மச்சோதிசொரூபமெனவுங்கூறினேமன்றே. 107

## அவகதியின் கூடஸ்தத்வ பலத்வங்களின் விரோத பரிகாரங்கள். 108

அவகதியானது, பிரமாணங்களின் பலமெனவும் கூடஸ்தநித்திய ஆத்மச்சோதிவடிவமெனவும் விப்பிரதிஷித்தமாமெனவீண்டுவினவ வினவியவன்பொருட்டு விடைபகருகின்றார்: விப்பிரதிஷித்தமின்று, எங்ஙனமெனின்? கூடஸ்தநித்தியமாயிருந்தபோதினும் பிரத்யக்ஷாதிப் பிரத்யயாந்தத்திற் குறிப்பிக்கப்படுகின்றது அதன்பொருட்டாதலின் பிரத்யக்ஷாதிப்பிரத்யயத்திற்கு அநித்யத்வமாங்கால் அநித்தியம்போலாகின்றது அதனாற் பிரமாணங்களின் பலமெனஉபசரிக்கப்படுகின்றது. 108

## துவைதத்தின் மித்யாத்வப் பிரகடனம். 109-111

ஹேபகவன்! இங்ஙனமேல் ஆத்மாவின்கட் பிரமாணநிரபேக்ஷத்தன்மை யுண்மையிற்கூடஸ்தநித்திய அவகதியானது ஆத்மச்சோதி சொரூபமேயெனச் சுயஞ்சித்தித்தது. அதினன்னியமாய அசேதனம் இயைந்தியங்கலிற் பிறர்பொருட்டதாம். எச்சுகதுக்க மோகப்பிரத்யய அவகதிவடிவத்தாற் பிறர்பொருட்டதோ அவ்வடிவத்தாலே அனாத்மாவிற்குச்சத்வமுளது அன்னியவேற்றுவடிவத்தாலின்று; ஆதலிற்பரமார்த்தமாய் அசத்வமேயுளது. எங்ஙனம் உலகிற்கயிற்றரவுகானனீராதிகட்கு அவ்வவகதிக்குவேறாக இன்மை கண்டனமோ அங்ஙனம் நனக்கனத்வைதபாவத்திற்கும் அவ்வவகதிக்குவேறாக இன்மைபொருந்தும். ஹேபகவன் இங்ஙனமே பரமார்த்தமாய் அவகதியாய ஆத்மச்சோதிக்கு நைரந்தர்யபாவத்தாற்கூட ஸ்தநித்தியத்வ அத்வைதபாவமும் அனுபவிக்கப்படுகின்றது. சர்வப்பிரத்யயபேதங்களில் வியபிசார

மின்மையின். பிரத்தியயபேதங்களோ அவகதியை வியபிச ரிக்கின்றன. எங்ஙனங்கனவில் நீலபீதாதியாகார பேதரூபப் பிரத்தியயங்கள் அவ்வவகதியை வியபிசரிக்கின்றனவாய்ப் பரமார்த்தமாயின்றென நுதலப்படுகின்றன அங்ஙனம் நன வின்மாட்டும் நீலபீதாதிப்பிரத்தியயபேதங்கள் அவ்வவகதி யையே வியபிசரிக்கின்றனவாய் அசத்தியரூபங்களாவான் உரி யனவாகின்றன. அவ்வவகதிக்கும் அன்னிய அவகந்தா இன் றெனத்தன்வடிவத்தாற் றன்னைத்தள்ளக் கொள்ளக்கூடாது; அன்னியத்திற்கோ அபாவமிருத்தலின்றேவரீரது பிரசாதத் தால் யான்பூரணனாயினேன். 109

அங்ஙனமே, நனுக்கனுவிலக்கண சம்சாரநிமித்தம்யாதோ அவ்வாறுயவித்து அவித்தையாம், அவ்வித்தைதக்கு வித்தை நிவர்த்திகையாம். இவ்வண்ணம் நீ அபயத்தையடைந்தனை இனிமேல் நனுக்கனுத்துக்கத்தை யனுபவியாய் சம்சாரதுக் கத்தினின்றும் முத்தனானாய். 110

ஓம் எனவாம். 111

இரண்டாவது கூடஸ்த அத்வய ஆத்மபோதப் பிரகரணம் முற்றும்.

---

## மூன்றாவது பரிசங்க்யானப் பிரகரணம்.

### உபகரண சகித பரிசங்க்யானப் பிரகார உபதேசம். 112-113

பிராப்தமாயிராநின்ற புண்ணியா புண்ணிய க்ஷபணா பரர்களும் அபூர்வவிருத்தியை அவாவாதவர்களும் ஆயமு முக்ஷுக்களுக்கு இப்பரிசங்க்யானம் இயம்பப்படுகின்றது. அவித்தையை யேதுவாகவுடைய தோஷங்கள் முச்கரணப்

பிரவிர்த்தியேதுக்களாம். பிரவிர்த்தியாலோ இஷ்டா நிஷ்டமிஸ்ரபயன்களைப்பயக்கும் கர்மங்கள் விருத்தி செய்யப்படுகின்றனவென அவற்றை நிவிர்த்திப்பான் பரிசங்க்யானஞ் செய்தக்கதாம். 112

ஆண்டுச சப்தஸ்பர்சரூபரசகந்த விஷயங்கட்குச் சுரோத்திராதிக் கிராகியத் தன்மை யுண்மையிற்றன் கண்ணேனும் பிறவற்றின் கண்ணேனும் விஞ்ஞானமின்றென்பதறுதியாம். எங்ஙனம் லோஷ்டாதிகட்கோ அங்ஙனம் அவற்றின் பரிணாமங்கட்கும் விஞ்ஞானமின்றென்றே துணியப்படும். சுரோத்திராதிவாயில்களாலோ அவையறியப்படுகின்றன. எதனாலறியப்படுகின்றனவோ அது ஞாத்ருத் தன்மையுடையதாதலினறியப்படுமவற்றினின்றும் அன்னியவியல்புடையதாமென்க. அச்சத்தாதிகளோ அன்னியோன்னிய சம்சர்க்கித் தன்மையுடையனவாதலின் சன்மவிருத்திவிபரிணம அபக்ஷயநாசசம்யோக வியோகஆவிர்ப்பாவதிரோபாவ விகார விகாரிக்ஷேத்ரபீஜாதி அனேக தர்மங்களையுடையனவாம். சாமான்யமாகச்சுகதுக்காதி அநேக காரியங்களை இயற்றுவனவாம். அவ்விஞ்ஞாத்ருத்வமுடைமையானே அவ்விஞ்ஞாதாசர்வசப்தாதிதர்ம விலக்ஷணனு மென்க. 113

சப்தாதிகளாலாத்மாவினனுபவானுசிந்தனம். 114-115

ஆண்டு உபலப்யமானமான சப்தாதிகளாற் பீடிக்கப்பெற்றுத் துன்புற்ற வித்வானானவன் இவ்வண்ணஞ்சிந்திக்க. 114

சப்தமானது, தொனி சாமான்ய மாத்திரத்தாலேனும், ஷட்ஜாதிபிரியதுதியாதியிஷ்ட அநிஷ்ட அசத்திய நிந்தை திரஸ்கார ஆக்ரோசாதிகளென்னும் விசேஷ தர்மங்கள் வாய்ந்தவசனங்களாலேனும், திருக்கியல்பினனும் அசங்கனும்

அவிக்கிரியனும் அசலனும் அநிதனனும் அபயனும் அத்தியந்த சூக்ஷ்மனும் அவிஷயனும் ஆயஎன்னைக் கோசரஞ் செய்து பரிசிப்பான் அருகமேயன்றாம்; ஏனென்னில் அசம்சர்க்கித் தன்மை எனக்குண்மை யானே என்னைப் பரிசியாதென்க எனக்கதனானே சப்தாதிநிமித்த ஆனியேனும் விருத்தியேனு மின்றாமென்க. ஆதலினாற்றாதிநிந்தாதி பிரியாப்பிரியத்வாதி வடிவசப்தம் என்னையென் செய்யும். ஆத்மத்தன்மையானே பிராப்தமாய சப்தமானது பிரியசப்தமாயின் அவிவேகியை விருத்திசெய்க அப்பிரியசப்தமாயினோ நசிப்பிக்க, அவிவேகித் தன்மையுடைமையின். விவேகியாகிய எனக்குமபிர் நுனிமாத்திரமுஞ் செய்யச் சமர்த்த முடையதன்றென்க. இங்ஙனமேஸ்பர்சம், ஸ்பர்சசாமான்யத்தாலேனும், அதன் விசேஷங்களாய சீதோஷ்ணமிருதுகடினதிசுர உதரசூலாதி லக்ஷண அப்பிரியங்களாலேனும், சிற்சில சரீரசம்பந்தபாகிய ஆகந்துகநிமித்தப் பிரியங்களாலேனும், எனக்கு அஸ்பர்சத்தன்மையுண்மையின் யாதொரு விருத்தியானி வடிவவிக்கிரியையும் முஷ்டிகாதாதிகளால் வியோமத்திற்போன்று செய்யாதென்க. அங்ஙனம் ரூபம், ரூபசாமான்யத்தாலேனும் அதன் விசேஷங்களாய பிரியாப்பிரிய ஸ்திரீவ்யஞ்சனாதிவடிவங்களாலேனும் எனக்கு அரூபத்தன்மையுண்மையின் யாதொரு விருத்தியேனும் ஆனியேனுமியற்றா தென்க. அங்ஙனம் ரசம், ரசசாமான்யத்தாலேனும், அதன் விசேஷங்களாய மூடமதியுடையோரான் மிகவுங்கிரகிக்கத் தக்க பிரியாப்பிரியமதுராம்ல லவண கடுதிக்த்தகஷாயங்க ளாலேனும் அரசாத்மகமாய எனக்கு யாதொரு விருத்தியேனும் ஆனியேனுஞ் செய்யத்தகாதாமென்க. அங்ஙனங் கந்தம், கந்தசாமான்யத்தாலேனும்,

அதன் விசேஷங்களாயபிரியாப்பிரிய அலராதியனுலேபனுதி வடிவங்களாலேனும் அகந்தாத்மசமாய எனக்கு யாதொரு ஆனியேனும் விருத்தியேனுஞ் செய்யத்தகாததாமென்க "யாதொன்று அசப்தம் அஸ்பர்சம் அரூபம் அவ்யயம் அங்கனம் அரசம் நித்தியம் அகந்தமுடையது" என்று வேதத்தால் விளம்பப்பட்டிருப்பதையுங்காண்க. 115

## சப்தாதி அனுபவானுசிந்தனமும் ஆத்மா விளவிகாரித்வசிந்தனமும். 116

மேலும், ஆகாகாரமாகவும், அதன்கிராககங்களாய சுரோத்திராதி யாகாரங்களாகவும் எப்பாகிய சத்தாதிகளே பரிணமித்து நன்குதிதிபெற்றிருக்கின்றனவோ அவையே அந்தக்கரணத்வயாகாரமாகவும் அதன்விஷயாகாரமாகவும் பரிணமிக்கின்றன; அன்னியோன்னிய சம்சர்க்கித்தன்மை யுண்மையானும் சர்வகிரியைகளிற் சேர்க்கையுண்மையானும் என்க! ஆண்டு இங்ஙனமாக அறிஞுயனைக்கு யாதொரு சத்துருவேனும் மித்துருவேனும் உதாசினனேனும் இன்ருமெனச் சிந்திக்க. ஆண்டு ஒருவன் ஒரு பொய்புணர்வினபிமானத்தால் எனக்குக் கிரியாபல வடிவமாய பிரியமேனும் அப்பிரியமேனும் பிரயோகிப்பானிச் சிப்பனேல் அவன் அம்மித்தையே பிரயோகிப்பானிச்சிக்கின்றனன் அதனதவிஷயத் தன்மையெனக் குண்மையினுனும் "இது அவ்யக்தம் இது அசிந்தியம்" என்னும் ஸ்மிருதியியம் பலினுனும் எனச்சிந்திக்க. அங்ஙனம் சர்வபஞ்சபூதங்களின் விகாரத்திற்கும் விஷயமற்றதாம், அவிஷயத்தன்மை யுண்மையினுனும்; "இது அச்சேத்யம் இது அதாஹ்யம்" என்னும் ஸ்மிருதியியம்பலினுனுங் காண்க. சரீரேந்திரிய சம்ஸ்தானமாத்திரத்தையுபலக்ஷித்த

எனது பக்தர்களுக்கும் விபரீதர் களுக்கும் கிரியாக்கிரியாதி பிரயோகிப்பான் வேட்கையும் அதனாற் சனித்ததர்மாதர்மாதிகளினடைவும் யாதுண்டாகின்றதோ அது அவர்களுக்கேயன்றி அஜர அம்ருத அபயமாய என் கண்ணின்றென, "இதனைக்கிருதாகிருதங்கள் தபியா" "கர்மத்தால் விருத்தியாவதில்லை அற்பமாவதில்லை" "அது பாகியாப்யந்தரம் அஜம்" "லோகதுக்கத்தால் பரிசிக்கப்படுவதில்லை பாகியம்" என்பனவாதியாய சுருதிஸ்மிருதிகளாலுணர்க. அனுத்மவஸ்துவிற்கு அசத்வமிருத்தலின் என்பதுமேலாய ஏதுவாம். ஆத்மாவினத்வயத் தன்மையிற் பிராமாணிக மாங்கால் துவிதத்திற்கு அசத்வமிருத்தலின் என்றுணர்க. சர்வோபநிஷத் வாக்கியங்கள் யாவையோ அவை விஸ்தாரமாய் நன்காலோசிக்கத் தக்கனவாம், நன்காலோசிக்கத்தக்கனவாம். 116

மூன்றுவது பரிசங்க்யானப் பிரகரணம் முற்றும்.

ஸ்ரீ மச்சங்கரபூஜ்ய பகவற்பாதாசாரிய ஸ்வாமிகள் திருவாய்மலர்ந்தருளிய ஸ்ரீஉபதேச சகஸ்ரியின் கத்தியப் பிரபந்தம் முற்றும்.

ஸ்ரீ குருவேதுணை.

---

உ

ஓம் கணபதிதுணை.

சிவமயம்.

# ஸ்ரீ உபதேச சகஸ்ரீ
# பத்தியப் பிரபந்தம்,

## முதலாவது உபோத்காதப் பிரகரணம்.

அனுக்ரமணிகை.

மங்கலாசார பூர்வகமாகப் பிரஹ்மவித்யாரம்ப சமர்த்தனம்.

*சீராருஞ் சேதனமாய்ச் சருவகமாய்ச்*
*சருவமதாய்ச் சிறப்பே மேவிப்*
*பாராருந் தாவரசங் கமங்கண்மதிக்*
*குகைகளிற்கண் படிப்ப தாகி*
*யோரரு மெதுசருவ விஷயவதீ தமதாகி*
*யிலங்கா நிற்குங்*
*கூராருஞ் சருவவிதா மதன்பொருட்டு வணக்கமிகக்*
*குயிற்று வாமே.*

*தாராக்கினியாதான பூர்வகமாய சர்வகிரியைகளேயும் பிரதிபாதித்தவேதமானது பின்னரிஞ்ஞான்று பிரஹ்மவித்தையைப் பிரதிபாதிப்பான் ஆரம்பித்தது. கர்மங்களோ தேகயோகத்தின் பொருட்டாம் தேகயோகமாங்காலோ பிரியாப் பிரியங்கள் துருவமாயுண்டாம் அதனுலோ இராகத்வேஷமாம் அதனுலோ முக்கரணசேஷ்டையு முண்டாமென்க. அறியானுக்கதனுலோ அறம் பாவமெய்தும் அங்ஙனந்தேகயோகமு*

மடிக்கடியுண்டாமன்றே. இங்ஙனஞ் சம்சாரமானது சக்கிர மொக்க ஆறுதலின்றியதாய் அநாதிகாலமாரம்பித்துப் பிர விர்த்தித்துக்கொண்டிருக்கின்றதென்பது கண்கூடேயாம். அதன் மூலமஞ்ஞானமாமெனவதன் ஆணிவேட்கப்படுகின் றது அதனால் பிரஹ்மவித்தை தொடங்கப்படும் அதனான் முத்திசித்திக்கும். 5

## ஞானத்திற்கே மோக்ஷஹேதுத்தன்மை. 6-7

அஞ்ஞான ஆணியின்பொருட்டு வித்தையே சமர்த்தமு டையதாம், அப்பிரதிகூலமாயிருத்தலிற் கருமமன்றாம். அஞ் ஞானத் தினணியிலதாம்போதறுதியாயிராகத்வேஷங் கணசி ராவாம்; இராகத்வேஷங்களிரியா திருப்பிற்றேடோற்பவமா யகர்மந்துருவமா யுண்டாமாதலின் மோக்ஷத்தின்பொருட் டீண்டு வித்தையே விளக்கப்படுகின்றது. 7

## ஞானகர்ம சமுச்சயவாதமும் அதனது கண்டனமும். 8-15

ஜீவித்துக்கொண்டிருக்கு ஞான்று அங்ஙனங்கர்மம் நித் தியஞ்செய்யத்தக்கதாம் வீட்டின்பொருட்டுக் சாரணமாய வித்தையின் சககாரித்தன்மை யெதனாலதற்குளதோ அதனா லது செய்யத்தக்கதாம். எங்ஙனம்வித்தையோ அங்ஙனங் கருமஞ்செய்யத்தக்கதாம் பிரத்யவாயஸ்மிருதியிருத்தலினா லும் முமுக்ஷுக்களாற் கர்மஞ்செய்யத்தக்கதாமென்க அற் றேல், வித்தை துருவபலமுடையதாதலினன்னியங் கிஞ் சித்தையும் வாஞ்சிக்கின்றதில்லையெனின்? அற்றன்று துருவ பல காரியாயிருப்பினுமக்கினிஷ்டோமம் எங்ஙனமவசியம் அன்னியத்தையவாவுகின்றதோ அங்ஙனம் வித்தைதுருவ பலகாரியா யிருப்பினும் கர்மத்தைநித்தியம் நத்துகின்ற தென இவ்வண்ணம் சிற்சிலர் விரும்புகின்றனர்? அங்ஙனங்

கருமத்தை வித்தைபிரதிகூலமா யிருத்தலின் இச்சிக்கின் றதில்லை. வித்தைக்குக் கர்மம் பிரதிகூலமேயாமென்பது பிரசித்தமாம் அபிமானசகிதமாயிருத்தலின். நிர்விகார ஆத்மஞானத்தையே யீண்டு வித்தையென நன்கு நவிலப் படும். நான் கர்த்தா எனக்கிதுவாகுக வெனக்கர்மம் பிர விர்த்திக்கின்றது. வித்தையோ வஸ்துவின் அதீனமாம், கர்மமோ கர்த்தாவின் அதீனமாம். ஊஷரதேயத்துதக மதியை யொப்பக்காரகங்களை வித்தை நிவிர்த்திக்கின்ற தென்பதொருதலையாமாதலின் அவற்றை மெய்யெனக் கருதிக் கருமமியற்றுவானெங்ஙனமறிஞன்பிரவிர்த்திப்ப னென்க. விருத்தத்தன்மையுள தாதலின் வித்தையோடு கர்மமியற்றுவானறிஞற் கூடாததேயாம் ஆகலின்முமு க்ஷுவாற் கர்மந்தள்ளத் தக்கதேயாம். 15

கர்மகாண்ட அப்ராமாண்யசங்கையும் பரிகாரமும் .16-17

தேகாதிகளோடு தேகியின் விவேகமின்மையால் விசிஷ்டாபிமானக் கிரகணமியல்பாம். பிராணிகட்கது அவித்தையாலுண்டாக்கப்பட்ட தென்றுணர்க; அதுபரியந் தந்தான் கர்மகாண்டம் பிரமாணமாம் நேதி நேதி யெனத் தேகாதிகளை நீக்கி நிர்விசேஷ ஆத்ம ஞானத்தின்பொருட்டு ஆத்மாஞ்சுமாறியற்றப்பட்டுள்ளது அதனலவித்தையழிக் கப்படும். 17

அவித்தையின் புனருற்பவமின்மை. 18-19

அளவையாலழிக்கப்பட்டவவித்தை புனரெங்ஙனுண் டாம்; அவிசேஷ கேவல பிரத்யக்காத்மாவின்கண்ணும் அவ் வவித்தையில்லவே யில்லை; பிரஹ்மைவாகமஸ்மியென்றே அபரோக்ஷானுபவம் நிகழுங்காற் புனரவித்தை யுண்டாகா

தொழியுமேற்கர்த்தாபோக்தா வென்னும் புந்தியெங்ஙனும்? ஆதலின் வித்தை சகாயவிருப்பமற்றதாமென்க. 19

வித்தைக்குச் சககாரிநிரபேக்ஷத்தன்மை யுண்மையானே மோக்ஷஹேதுத் தன்மையுண்டெனல். 20-24

மான சாந்தமாய கர்மங்களினின்றும் நியாசமே அத்தியந்தம் பொருத்த மாயதாம் என்று சுருதியாற் கூறப்பட்டுளது அதனானே பிருகதாரணியத்தில் இவ்வளவு மாத்திரம் என அம்ருதத்வங் கேட்கப்பட்டுளது. அக்காரணத்தாற் கர்மமானது முமுட்சுக்களாற்றியாகிக்கத்தக்கதாம். அக்கினிஷ்டோமம் போலெனமுற்கூறப்பட்டதன்றோ ஆண்டிது கூறப்படும்; யாதெனின்? கர்மங்கட்கு அநேக காரக சாத்யத்தன்மை யுண்மையானும் பல பேத முண்மையானுமென்க. வித்தையதனின் விரோதமாதலின் திருஷ்டாந்தம் விஷமமாம். கிருஷியாதி போற்பலார்த்தத் தன்மையுண்மையின் அக்கினிஷ்டோமம் அன்னிய கர்மங்களால் விருத்தியை விரும்புக, வித்தை வேறென்விரும்புகின்றது? யாவனுக்ககங்காரமிஷ்டமாமோ அவனுக்கே பிரத்யவாயமுமாம் ஆத்மஞானிக்கோ அகங்காரபலார்த்தித்வங்களுள வாதலின்றாம். 24

உபநிஷத் சப்தார்த்தத்தையுரைத்தல். 25-26

ஆதலினலஞ்ஞான நாசத்தின் பொருட்டுஞ் சம்சார சம்யக்நிவிர்த்தியின் பொருட்டும் பிரஹ்மவித்தையைச் சம்பாதிக்கும் பொருட்டும் இந்த உபநிஷத்தானது ஆரம்பிக்கப்படும். உப, நி, என்னுமுபசர்க்கங்களை முன்புடையதும் சிதிலம், அடைவு, நாசம் என்னும் முப்பொருள் வாய்ந்ததும் ஆப "சத்" என்னும் பகுதிக்கு "க்விப்" என்னும் விகுதி

பராமாகால் உபநிஷத்என்னும் பதஞ்சித்திபாம். இதன் பொருளோ:—மந்தப் பிரஹ்மவித்துக்களுக்குக் கர்ப்பஜன் மஜராதிகளைச் சிதிலஞ்செய்கின்ற தென்பதொன்றும், ஜிஞ் ஞாசுக்களுக்கு உப, சமீபத்தில் நி, நிச்சபமாய்ப் பிரஹ்மத் தை யடைவிக்கின்றதென்பதொன்றும், தத்துவவித்துக்களு க்கோகர்ப்பாதிகளை நாசஞ்செய்கின்றதென்பதொன்றுமாம்.

முதலாவது உபோற்காதப் பிரகாணம் முற்றும்.

---

## இரண்டாவது ஆத்மஞானோற்பத்திப்பிரகரணம்.

### வாக்கியத்தாற் பிரஹ்மாத்ம ஞானத்தினுற்பத்திச் சங்கையுஞ் சமாதானமும். 1–2.

நேதி நேதி யெனச்சேஷிப்பிக்கப்பட்ட ஆத்மதத்து வத்தைப் பிரதிஷேதிப்பாணெண்ணுமையிற் சாக்ஷாத்தாயிது நானன்று இது நானன்று என உபலப்யமாம். இதம் வடி வோடு அத்யாசமாயதும் வாசாரம்பண கோசரமாயதும் ஆப அகமதியாதோவது புனர் பிரமாணத்தன்மையையனு காது, நிஷிர் படிவோற்பவத்தன்மை யுண்மையினென்க. 2

### உற்ப ... மாய ஞானத்தின் பிரத்தியக்ஷாதி பாத்யத்வ விஞவிடைகள் 3-4.

முனமதியைப் பாதியாமற் பின்மதி யுற்பன்னமாவதின் றும். சுயஞ்சித்தமா யேகமாய ஞானம் யாதோ அது பலத் தன்மையுடையதாதலிற் பாதிக்கப்படுவதன்றும். எங்ஙனங் காந்தாரதேசவாசியானவன் வனத்தினின்றுந் தன்தேயத் தையடைகின்றனனோ அங்ஙனம் சோகமோகாதிகளாற் பீடி க்கப்பெற்ற வித்தேக வனத்தைத் தாண்டித் தன்னாத்மாவை யடைகின்றனன். 4

இரண்டாவது ஆத்மஞானோற்பத்திப் பிரகாணம் முற்றும்.

## மூன்ருவது ஈசாத்மப் பிரகரணம்.

### ஜீவப் பிரஹ்மங்களினபேதம். 1-2

ஈச ஞத்மபின்னஞமேல் ஈசஞயிருக்கின்றனனென வறிதல் கூடாதாம். ஈசனே ஆத்மாவாய யாஞயிருக்கின்றனனென வறியிலோ, அந்த வித்தையானது அன்னியமான அவித்தையி னிவிர்த்திகையாம். அஸ்தூலத்வாதி தர்மங்கள் பிரத்தியக்காத்ம பின்னனுக் கிஷ்டமாமேல் ஈசனுக் கஞ்ஞேயத்தன்மை யுளதாம், உளதாங்காலத்தர்மங்களாலென்ஞம். ஆத்மத்வமாங்காலோ அன்னியமதியின் பாதமாம். 2

### அபேதாபாவமாங்காற் சுருதியி னனுபபத்திப் பிரதரிசனம். 3-4

ஆதலின் மித்தையாய அத்தியாசத்தை நிஷேதிப்பான் அஸ்தூலாதிகள் பிரத்தியக்காத்ம விசேஷணமாகக் கிரகிக்கத்தக்கனவாம். வேறிடத்தில் நிஷேதிப்பான் வேண்டுமேல் நிச்சயமாய்ச் சூனியத்வ வர்ணனமேயதுவாம். பிரத்தியக்காத்மாவாய ஆத்ம தத்துவத்தை யறியும்வேட்கையனின்றும் அன்னியத்தினிடத் திஷ்டமாமேல் "பிராணனற்றது மனமற்றது சுப்ரம்" என்னும் வேதகீதம் பயனற்றதன்ஞேவாம். 4

மூன்ருவது ஈசாத்மப் பிரகரணம்முற்றும்.

---

## நான்காவது தத்துவஞான ஸ்வபாவப் பிரகரணம்.

### சஞ்சித அனேக கர்மப் பிரதிபந்த முண்மையின் ஆத்மாவின் ஞானம் மோக்ஷஹேது அன்றேனச் சங்கித்தல் 1-2

அகம் பிரத்தியயத்தைப் பீஜமாக வுடையதும், அகம் பிரத்தியயமிருக்குமிடத்திலிருப்பதும், ஆய சஞ்சிதகர்மம்

யாதுண்டோ அது பிரஹ்மைவாஹமஸ்மியென்னும் பிரத்தியயமாய பெருநெருப்பாற்றஹிக்கப்பட்ட தாதலினெங்ஙனம் பலோன்முகமாம். அற்றேற் கண்டதை யொப்பப்ப லோன்முகமாமெனின்? அற்றன்று அது அன்னியகர்மமென இஷ்டமாதலின் என்க. கர்மாசிரய நிரோதமாங்கால் எங்ஙனங் கருமமிருக்குமென நுங்களை யாங்கள் வினவுகின்றனம் அதற்கு நீவிர் உத்தரங் கூறுவீராக ?. 2

ஆண்டுப் பிராரத்தகர்ம பலாவசானமாங் கான்ஞானோதயமாமென உத்தரங் கூறல். 3–5

பிராரத்தகர்மமானது விதேதக கைவல்ய பலத்தை மறைத்துத் தனது பலத்தை யவசியமீயும், தேகாதியாரம்ப சமர்த்தத் தன்மை யுண்மையின். அந்தத்தில் ஞானம் நன்குதயமாம். போக ஞானங்களாய விவைபிராரத்த கர்மத்தின் பலமாமாதலின் அவைகட்கவிரோதம் பொருந்தும்; இதரத்திற்கோவிரோதமேயாம். 4

தேகாத்ம ஞானம் போலாத்மாவின் கண்ணே யாவனுக்குத் தேகாத்மஞான பாதக ஞானம் உண்டாமோ அவன் வேட்காதிருப்பினும் வீடடைவனென்க. ஆதலின் நம்மாற் கூறிய இவையாவையும் சித்தமும் பொருத்தமுமாம். 5

நான்காவது தத்துவஞான ஸ்வபாவப் பிரகரணம் முற்றும்.

---

## ஐந்தாவது புத்தியபராதப் பிரகரணம்.

சர்வஜந்துக்கட்கும் ஆத்மஞானுக்கிரகத்தில் உதங்கரின் சரிதையுரைத்தல். 1

எங்ஙனம் உதங்கரானவர் மூத்திராசங்கையினு லமிருதத்தைக் கிரகிக்கவில்லையோ அங்ஙனம் ஜந்துக்கட்குக் கர்மநாசபயத்தால் ஆத்மஞானுக்கிரகமும் ஆமென்க. 1

சம்சார விப்ரமகாரணமும் பிரமாணமும் பகரல். 2-4

மதியின்கட்டிதமான ஆத்மாசலமாயிருப்பது போன்றும் நிச்சலமாயிருப்பது போன்றுங் காணப்படுகிறது. நாவாயிற் செல்பவனுக்கு எங்ஙனந்தருக்கள் அங்ஙனஞ் சம்சார விப்ரமுமாம். ஓடத்துளானுக்கு விபரீதத் தன்மையுண்மையால் எங்ஙனம் நகங்களின் கமனம் பொருந்துமோ ஆத்மாவிலங்ஙனஞ் சம்சாரமுமாம் "தியானவியாபாரம் செய்வது போல்" என்ற மறைமானமாம். சைதன்யப் பிரதிபிம்பத்தால் வியாப்தமாய புத்தியினின்றும் எதனாற்போதமுண்டாமோ அதனாற் சப்தாதிவடிவமா யாத்மாவிற்கு ஸ்புரணமுண்டாம். அதனாலுலகு மிகவும் மோகிக்கின்றது. 4

பதார்த்த விவேகவானாய முமுக்ஷுவாற்
பாவிக்கத்தக்கதைக் கூறல். 5

அகங்காரத்திற்குத் திருசியத்வமும் அதன் பொருட்டாதலும் யாதாலோ அஃது இதமம்சத்தின் விவேகமுண்டாங்காலுண்டாகா தென்க. ஆண்டு யாதொரு சாக்ஷி சேடித்ததோ அது பரமாத்மாவாம் என்னும் நிச்சயவானாகுக. 5

ஐந்தாவது புத்தியபராதப் பிரகாணம் முற்றும்.

---

## ஆறாவது விசேஷ நீக்கப் பிரகரணம்.

ஸ்தூலோபாயத்தாற்பதார்த்த சோதனப்பிரகார உபதேசம். 1-2

சேதித்துத்தியாகித்த அத்தத்தா லெங்ஙனமோ அங்ஙனமேவ வெம்மநுஷத்வாதிகளால் விசேடிக்கப்படுமோ, சிஷ்டமாய அவ்வவ்வியாவற்றாலும் ஆத்மா சுயம் விசேடிக்கப்படுகின்றதின்று மாதலின் அனாத்மத் தன்மையானேதியாகி

த்த அத்தத்தோடு சர்வவிசேஷணமுந்துல்லியமாம் ஆதலிற் சர்வ விசேஷணங்களா லறிஞன்முத்தனவன். 2

விசேஷணங்கட்கனுத்மத்தன்மையை விளம்பல். 3-4

இச்சர்வ விசேஷணங்களும் எங்ஙனமலங்காரமோ அங்ஙனம்பொருந்தும். இவ்வியாவும் அவித்தையாற் கற்பிக்கப்பட்டனவாதலினறிந்த ஆத்மாவின்கண்ணசத்தாமென்க. ஞேயாம்சத்தை விடுத்து எஞ்ஞான்றும் யாதொரு ஞாதாவுளதோ அதுவே ஆத்மாவெனக் கிரகிக்கத்தக்கதாம். அதை ஞாதுருத்தன்மை யடையடுக்காக் கேவல வடிவதெனத்துணிக. யானெனயாது கிரகிக்கப்படுகின்றதோ அது சின்னமான அத்த துல்லியமேயாம். 4

ஆத்மாவிற் கன்னியநிரபேக்ஷ வடிவமாய ஸ்வத சித்தியைச் செப்பல். 5-6

யானென்புழி சித்விஷயத்வ வடிவம் வாய்ந்த இதமம் சமாய எவ்வகங்காராதி யாண்டு விசேஷணமாமோ. அந்தப் பிரத்தியக்காத்மா அன்னியமாய் நிர்விசேஷமாய் ஸ்வதஸித்தமாய்ச் சித்திரக்கோவையுடையான்போன்று விளங்கிக்கொண்டிருக்கும். யானென்புழி எவ்விதமம்சமுளதோ அது அனுத்மாவெனப் பண்டிதர்களாற்றியாகிக்கத்தக்கதாம் அகம்பிரஹ்மமென்பதின் மாட்டுச்சிஷ்டமாய அகங்காராம்சம் யாதோ அது பூதபூர்வகதிக்குக் காரணமாமென்க. 6

ஆறுவது விசேஷ நீக்கப் பிரகாணம் முற்றும்.

---

## ஏழாவது புத்தியாரூடப் பிரகரணம்.

### தன தனுபவாவஷ்டம்பத்தாற் புத்தி யாரூடஅர்த்தந்தின் ஸ்பஷ்டீகரணத்தைச் செய்தல். 1-2

எதனால் யாண்டாண்டேனும் யாவையுபலப்யமாகின்றனவோ அவை யாவும் மதியாரூடமாய் எஞ்ஞான்றும் என்னாற் பிரகாசிக்கப்படுகின்றனவோ அதனால் யான் பிரபஞ்சாதீதனாப்ச் சர்வார்த்தப் பிரகாசகனாப் அபரிச்சின்னனா யிருக்கின்றேன். ஆத்யாத்மாதிதைவ ஸ்தூலசூக்ஷும தேகாத்மகங்களின் சாக்ஷியானெங்ஙனமோ அங்ஙனம் அன்னியங்களி னூடுமென்க. எதனாற்றள்ளவேனுங் கூடவேகூடாதோ கொள்ளவேனுங் கூடவேகூடாதோ, அதனால் யான் பரமாத்மாவேயாம். 2

### ஆத்மாவிற்கு விகாரித்வாதி தோஷாபாவத்தை யுபபாதனஞ் செய்தல். 3-4

ஆத்மாவிற்கசேஷபுத்தி சாக்ஷித்தன்மை யுண்மையின் விகாரித்தன்மையும் அசுத்தத் தன்மையும் பௌதிகத்தன்மையும் புத்திபோலற்பஞ்ஞத்தன்மையும் இன்றாமென்க. இரத்தாதியாகாரங்கண் மணியின்மாட்டாதப முளதாங்காலெங்ஙனங் கிரகிக்கப்படுகின்றனவோ, அங்ஙனமேயாவுமென்கண் ணன்கு விளங்குகின்றனவாதலினாதபனாற்போலென்னால் யாவும் விளங்குகின்றன வென வுணர்க. 4

### ஆத்மாவின் சுத்தத் தன்மையையும் அத்விதீயத் தன்மையையும் உரையாடல். 5-6

மதியிருக்குங்கான் மதியின்கட்டிருசியமுண்டாகுக விபர்யயமாங்காலின்றென்க. திருஷ்டா எஞ்ஞான்றுந் திரு

ஷ்டாவேயாம்; எதனாலிங்ஙனமாமோ அதனால் துவிதஞ்
சிறிதுமில்லவேயில்லை. அவிவேகத்தாற் பரமாத்மாவினின்
மையையெங்ஙனம் புந்தி அறிந்ததோ அங்ஙனம் விவேகத்
தாற் பரமாத்மாவினின்றும் அன்னியசீவனுந் தானும் இரா
ரென்றுணர்க. 6

எழாவது புத்தியாரூடப் பிரகாணம் முற்றும்.

---

## எட்டாவது மதிவிலாபனப் பிரகாணம்.

மதியாத்மாக்களின் சம்வாதவடிவத்தான் மதிக்குப்
பிரசமோபதேசம். 1-4

ஹேமதியே? இயல்பாகவே யெனக்குச் சேதனவடிவ
மிருப்பினும் நின்மோகச் செய்கையாற் போக்த்ருத்வாதி
சம்பந்தஞ் சம்பவித்ததாதலிற் சர்வ விசேஷ ரகிதத்தன்மை
யுண்மையின் நினது சேட்டையாலெனக்குக் கிஞ்சித்தும்
பயன்பவிப்பதில்லை. மாயாமயகார்யத்தை விடுத்து நிரர்த்த
கப் பிரயாசத்தினின்றும்மிருந்தசாந்தியை எதனால் யானெஞ்
ஞான்றும் பரப்பிரஹ்ம ஸ்வரூபனே விமுக்தனைப் போன்
றுவனே அங்ஙனம் அஜனே ஏகனே துவிதவர்ஜிதனே அத
னாலீண்டென்மாட்டடைதி. கம்மேபோ லெஞ்ஞான்றுஞ்
சர்வபூதங்களிற் சமமாய்க் கேவலமாய்ச் சர்வகமா யக்ஷர
மாய் நிரந்தரமாய் நிஷ்களமாய் நிஷ்கிரியமாய்ப் பரமாய சிவ
மாயுள்ளேனாதலின் நினது சேட்டைகளால் யாதொரு பய
னும் எனக்கீண்டின்றென்றுணர்க. ஏகனேயான், எனக்கசங்
கத்தன்மையுண்மையின் அங்கமாக வென்னினன்னிய வெத
னதுவாஞ்சையுமில்லை அங்ஙனமெதற்கும் யானங்கமுமன்
றுகின்றேன். யானசங்கரூபனாதலின் நின்னாலியற்றியதாற்

சிறிதும் பயனெனக்கின்று. என்னினன்னியமல்லா திருத்தலினுனக்குங் காரியமின்றென்றுணர்க. 4

## இப்பிரகரணமியற்றியதில் நிமித்தத்தை நிகழ்த்தல் 5-6

சாதன சாத்யவடிவமாய சம்சாரத்திற் சனங்கள் மிகவுமாசக்தர்களாயுளரென நெடிது சிந்தித்துச் சம்சாரத்தினின்று மிச்சனங்களின் விசேஷ விடுபடலின் நிமித்தம் யாம் ஸ்வரூபதத்வார்த்த விபோதகாரணமாய இச்சம்வாதத்தைப் புரிந்தனம். இச்சம்வாதத்தை யெவனேனுஞ் சிந்திப்பனேல் அவன் அஞ்ஞானத்தாலுண்டாயதும் மகாபய ஏதுவாயதுமாய சம்சாரத்தினின்றும் விடுபடுவன். அங்ஙனமவன் நிராசையுடையோனுய்ச் சோகமற்றோனுய்ச் சுகியாய்ச் சமனுய் ஆத்மவித்தாய் எஞ்ஞான்றுஞ் சஞ்சரிப்பனென்பதொருதலையாமென்க. 6

எட்டாவது மதிவிலாபனப் பிரகாணம் முற்றும்.

---

# ஒன்பதாவது சூக்குமத்வ வியாபித்வப் பிரகரணம்.

## ஆத்மாவின் நிரதிசய சூக்குமத்தன்மையையும் வியாபித்தன்மையையும் விளம்பல். 1-3

பிருதிவியாதிகளினின்றும் உத்தரோத்தரம் பிரத்தியக்காத்மாபரியந்தம் உள்ளவைகளிற் பூர்வபூர்வத்தியாகத்தாற் சூக்குமத்தன்மையும் வியாபித்தன்மையு முணர்க. எத்துணைப்பாகியப் பிருதிவி பரிமாணமாயிருக்குமோ அத்துணைச் சரீரசம்பந்தப் பிருதிவி பிரமாணமென வுணர்க; அங்ஙனமே அம்புமுதலிய தத்துவங்கள் நிரவசேஷமாய் அத்துணைப்பிரமாணங்களென வுணர்க. சதாகதியாதிகளி னுற்பத்திக்கு

முன்னெங்ஙனங் கம் சர்வகமோ அங்ஙனம் யானெஞ்ஞான்றுஞ்சர்வன் சர்வகன் சின்மாத்ரன் அத்வயன் ஆவனென்க. 3

### பிரஹ்மாதிகளுக்குத் தன்பொருட்டாகத் தன்மையைச் சாற்றல். 4-6

பிரஹ்மாதி ஸ்தாவராந்தங்களாய பிராணிகளெனக்கே புரமென நிர்ணயிக்கப்பட்டுளது, காமக்குரோதாதி தோடங்கள் எனக் கன்னியத்தா லெங்ஙன முளவாமென்க. எல்லாப் பூதங்களினூடுந் திதமாய ஈச்சுரனும் அப்பூத தோஷங்களாற் சந்தத மஸ்பிருஷ்டனும் ஆய என்னைப் பாலனெங்ஙனங் ககனத்தின்கட் கருமையைக் காண்கின்றனரோ அங்ஙனந் தோடத்தோடு கூடியவனாக உலகு காண்கின்றது. யாவற்றையும் விளக்குபவனையும் திருசியதோஷ சம்பந்தமற்றவனையும் குலவாநின்ற எனக்குப் பிராணிகள் யாவுமுடம்பாம். என்னை! எல்லாப்பிராணிகளின் மதிகளின்மாட்டெஞ்ஞான்றும் எனது சைதன்ய அவபாஸ்யத் தன்மை யுண்மையினென்க. 6

### ஸ்வரூப ஞானத்திற்கு நிர்விஷயத் தன்மையையும் நித்தியத் தன்மையையும் நிரூபித்தல். 7-9

யாது சனிமானோ யாது தான்ஞான விஞ்ஞேயமோ அது மித்தையெனவிட்டமாம் கனா ஞானம்போலுமென்க; ஆதலிற்றுவிதங்கிஞ்சித்து மின்றாமென்பது துணிபாம். ஞானமோ நித்தியமாய் நிர்விஷயமாய் நிகழ்கின்றது. துயிலின் கண்ணே அன்னியமின்மையின், ஞாதாவின் ஞாதியானது நித்தியம் என மறையாலறையப் படுகின்றது. ஆதலின் நனா ஞாதியோ பிராந்தியேயாம் அதன் விஷயமுமில்லதேயாமென அங்கீகரிக்கப்பாலதாமென்க. ரூபவானுந் தன்மை

முதலனவின்மையின் எங்ஙனந் திருஷ்டியாதிகளின் கர்மத்வமின்றோ அங்ஙனம் பிரஹ்மத்திற்கு விஞ்ஞான கர்மத்வமின்றெனத் துணியப்பெறும். 9

ஒன்பதாவது சூக்குமத்வ வியாபித்வப் பிரகரணம் முற்றும்.

---

## பத்தாவது திருசிஸ்வரூப பரமார்த்த தரிசனப் பிரகரணம்

தனதனுபவாபிநயத்தால் ஆத்மாவின் நிர்விஷய ஞான ஸ்வபாவத்தன்மையின் பிரகடனத்தைச் செய்தல். 1-2

திருசிஸ்வரூபமாயதும் ககனோபம மாயதும் பரமாயதும் சந்ததம் வெளியாய் விளங்குவதும் அஜமாயதும் ஏகமாயதும் அலேபகமாயதும் சர்வகதமாயதும் எவ்வக்ஷரப் பிரஹ்மமோ அதுவே சததம் யானுகின்றேனுதலின் யான் விமுக்தனேனும். யானே ஞானஸ்வரூபன் சுத்தன் அவிக்கிரியாத்மகன் பரமார்த்தமாய் எனக்கு யாதொரு விஷயமுமின்று. எதிரினும் குறுக்கினும் மேலுங்கீழும் யாண்டும் உளதாய சம்பூர்ண பூமாவேயான் யானஜன் என்கட்டிகனும் யானேவன். 2

ஜன்மஜராதி விக்கிரியையின்மையாற் கூடஸ்தாத் வயஸ்வபாவத் தன்மையைச் சுருதிப் பிரதரிசன பூர்வகமாக உபபாதித்தல். 3-9

அஜனேயான், அமரனேயான், அங்ஙனம் அஜரனேயான் அமிருதனேயான், சுயம்பிரபையனேயான், சர்வகதனேயான், அத்வயனேயான், யான் காரணமுங் காரியமு மல்லேன், அத்தியந்தம் நிர்மலன், சந்ததம் நிஜானந்தத்தாலே திருப்தன்யான். ஆதலின் யான் விமுக்தனேனும். துயின

ளுக்கனுவாளுய வெனக்கென்னது போன்றீண்டுக் கிஞ்சித் தரிசனமின்று, மோகனமாம். அவைகட்குத் தன்னாலேனும் பிறவற்றாலேனும் உண்மை யின்மையிற் சர்வ அவஸ்தைகளின் றிருஷ்டாவாகிய அத்துவித துரியனே யானுயிருக்கின்றேன். புற்கலபுத்தீந்திரிய சந்ததிக்கு என்னுருவத்தன்மையும் என்னதாந்தன்மையுமின்று என்னை? எனக்கு நிர்விகாரத்தன்மை யுண்மையினுனும் அங்ஙனமே கூறிய சந்ததிக்கு அசத்வஹேது விருத்தலினுனுமென்க. எங்ஙனங் கனவின் றிருசியம் மித்தையோ அங்ஙன மிதற்கு மசத்வமா மென் றுணர்க. எனக்கத்வயத்தன்மை யுண்மையின் விக்கிரியை யின்றென்பதும் விகார ஹேதுவுமெனக் கின்றென்பதுமாய விது சத்தியமேயாம். எனக்கசரீரத்தன்மை யுண்மையிற் புண்ணியபாபமும் மோக்ஷபந்தனமும் வருணுசிரமத்வமும் இல்லைவேயில்லையென்க. எனக்கனுதித்தன்மை யுண்மையானும் நிர்க்குணத்தன்மை யுண்மையானும் கர்மமும் அதன்பலமும் இல்லைவேயில்லை. ஆதலின் நான்பரமன் அத்வயன் ஆவேன். சர்வகதமாய நபமானது எங்ஙனம் லேபிக்கப்படுகின்றதில்லையோ அங்ஙனம் எனக்குச் சூக்குமத்தன்மை யுண்மையின் யான்றேககதனுயிருப்பினும் லேபிக்கப்படுகின்றேனில்லை. யான் சந்ததம் பூதங்களிற் சமன்யானீச்சுரன் க்ஷராக்ஷரங்களினின்றும் யான் விலக்ஷணன் விலக்ஷணனுதலினுனே யான் உத்தமன் பரமாத்ம தத்துவனும் யானே அங்ஙனம் அத்வயனுயிருப்பினும் அவித்தையால் விபர்யயமாக அபிமதமாவனென்க. யான் வியவதான ரகிதனுதலின், அவித்தையானும் அபிமானத்தானும் கர்மங்களானும் தீண்ட வொண்ணுதவனுகின்றேன் அதனுனே அதிநிர்மலனுவேன். கற்பித அந்தக்காண பரிணமரூப திருக்காதி

சக்தி சம்பந்தமுடையவனுய நான் அத்வயன். அம்பரமெங்ஙனமசலமோ அங்ஙனம் என் வடிவத்திலேயே திதனுயிருக்கின்றேன். 9

ஆத்மதத்வபரிஞானத்திற்குக்கைவல்யம் பலமெனல். 10-12

அகம்பரம் பிரஹ்மமென்னு மைபந்திரிபறு துணிபால் உளதாய ஆத்மஞான முடையோன் பின் பிறப்பதேயில்லையெனச்சுருதியின் கம்பீர வசனமிருக்கின்றது. வித்தழிந்துவிட்டபின்னுண்டாவதேயில்லையன்றே; எதனுன் மோகமின்றே அதனுற் சன்மமின்றென்பது பலமெனவுணர்க. எனது இது இத்தகைமைத்து அங்ஙனமேயிது இது போன்றது, அங்ஙனமே யானிவ்வண்ணத்தனுவன், அன்று, பானிவ்வண்ணத்தனுவன், அன்று. அல்லது வேறுவண்ணத்தன் எனக்குமூடத்தன்மை என்பனவாய ஜனங்களினிவ்வித கற்பனையானவை சந்ததஞ் சமமாய்ச் சிவமாயத்வயமாய பிரஹ்மத்தின் கண்ணணுவேனுமில்லவேயில்லை. அத்தியந்தம் நிர்மலமாய் ஐயந்திரிபற அத்வயாத்மாகாரமாகயாதொரு ஞானமுளதோ அஃதுளதாங்கால் மகாத்மாக்களுக்குச் சோகமோகங்களிலவாம்அவையிலவாங்காற் கர்மமேனுஞ் சன்மமேனும் பவியாதென்னுமிது வேதாந்தார்த்தங்களை யுணர்ந்தாரது சிறப்பாய துணிபாமென்க. 12

ஆத்மவித்தின் ஸ்வரூபம். 13-14

அவிதத்திற்குப் பாதிதத் தன்மையுண்மையின் யாவன் நனவின்கட்டுவிதத்தைக்கண்டுங் கண்டிலனே துயில்பவனைப் போலொன்றுங்காணுது அறிவாகவே காண்கின்றனனே அங்ஙனமாகயாவன் பயிக்காதி செய்யினும் நிஷ்கிரியனே அவனே ஆத்மவித்தாம் அன்னியனன்றென நிகமாந்தங்களில்

நின்மல நிச்சயமாம். இங்ஙனம் வேதாந்த விநிச்சிதமாயதும் மேலாயதும் ஆய இப்பரமார்த்ததரிசனம் எம்மாலியம்பப்பட்டது. இதன் கண்ணிச்சிதனுவனேல் அத்தியந்தம் பந்தத்தினின்றும் விடுபடுவன். மாதிரமதிப்பவீண்டு கர்மங்களால் லேபிக்கப்படானென்பதொரு தலையேயாம். 14

பத்தாவது திருசிஸ்வரூப பாமார்த்த
தரிசனப் பிரகாணம் முற்றும்.

---

## பதினென்ருவது ஈக்ஷித்ருத்வப் பிரகரணம்.

### கர்மத்திற்கேனுங் கர்மசகித ஞானத்திற்கேனும் மோக்ஷ ஹேதுத்வ சங்கா நிராசம். 1-3½

ஜந்துக்கட்குச் சேதனத்வம் ஸ்வதசித்தமாம். எதனுற் பேதத்தன்மை அஞ்ஞான நிபந்தனமோ அதனுல் நீ சத்தாயிருக்கின்ருயென்னும் வாக்கியத்தாலே பேதத்தன்மை நிவர்த்திக்கப்படுகின்றது.

இவ்வளவு மாத்திரத்தினுலே அமிருதத்வம் எனச் சுருதி புகல்கின்றது, சாஸ்திரமும் ஞானத்திற்குக் கிஞ்சித்தும் அன்னியசகாய அவாவின்றெனப் பிரதிபாதித்துச் சாதனசகிதகர்மத்தைப் பாதிக்கின்றது. சர்வப் பிராணிகளின் மனத்தின் சரிதத்தை அவிசேஷமாகக் காண்கின்றவனுய் நிர்விகாரமாயிராநின்ற வெனக்குக் கர்த்ருத்வாதி வடிவவிசேஷமெங்ஙனுண்டாம் மனத்தின் சீலத்தையும் மனத்தையும் நனவிற் கனவிற்போன்று காண்கின்றவெனக்கு எங்ஙன்ருன் கூறிய விசேஷமுண்டா மென்க. 3½

## துவிதாபாவமாங்காற்காட்சியாதி விரோதம்வர வதன் நிராகரணஞ்செய்தல். 3½-14

துயிலின்கட்டுவிதத்திற் கசத்வ மிருத்தலிற் சின்மாத்திரனும் சர்வகனும் அவ்யயனு மிருக்கின்றேன். எங்ஙனம் விழிக்குமுற் கனவுண்மையோ அங்ஙனமே ஆத்மசாக்ஷாத்கார பர்யந்தம் தேகாத்மத்வமுங் காட்சியாதிகட்குப் பிரமாணத்வமும் சர்வ வியவகாராங்கமாமென்க. சேனைப் பச் சர்வ பூதங்களிற் செறிந்ததும் அப்பூத தோஷங்களால் விவர்ஜிதமாயதும் சாக்ஷியும் சைதன்யமும் நிர்க்குணமும் சுத்தமுங் கேவலமும் ஆயபிரஹ்மமே யானுமிருக்கிறேன். நாமரூபக்கிரியைகளினின்றன்னியனுன், நித்தியமுத்த வடிவுடையோனுன், ஆத்மாவாய யானே பரப்பிரஹ்மம், சின்மாத்திரனுன் என்ஞான்றும் யானத்வயனே யாவன். அகம் பிரஹ்மாஸ்மி யென்பதுபோல் அகம் கர்த்தாஸ்மி அகம் போக்தாஸ்மி யென யாவருணர்வரோ அவர் ஞானகர்மங்களினின்றும் நஷ்டரேயாவர் நாஸ்திகருமாவ ரென்பதி லையமேயில்லை தர்மாதர்ம பலங்களோடு சம்பந்தமானது. அதிருஷ்டமாயிருப்பினும் எங்ஙனஞ் சாஸ்திரத்தாலே அங்கீகரிக்கப்படுமோ அங்ஙனம் இந்த ஆத்மாவிற்குப் பிரஹ்மத்வமும் ஞானத்தாலே முத்தியும் சாஸ்திரத்தாலே யங்கீகரிக்கத் தக்கதாமென்க, மாகாராஜனுதிசித்திரவத்திரங்கள் போன்ற வாசனைகள் யாவையோ அவைகளுக்காண்பவராற் காணப்படுகின்றனவே யெங்ஙனமாமோ அங்ஙனமீண்டத்திரிபுடியினின்றும் ஆத்மா அன்னியங் கேவலந்திருசி யெனவுணர்க. உறையினின்றும் வெளிப்படுத்திய வசியானது எங்ஙன முள்ளவாறு காணப்படுகின்றதோ அங்ஙனம் போத்தாவானது

கார்யகாரண விவர்ஜிதமாய்க் கனவிலுள்ளவாறு காணப்படு கின்றது ஆயினும் சுயம்பிரபையுடையதேயாம்.

புரட்டலாலெழுந்தோனுய துவம்பதார்த்தனுக்கியல்பா யுள்ள பரப்பிரஹ்ம பதமானது, கற்பிதத்தை நிவிர்த்திப்ப தாகிய நேதிநேதியென்பன முதலிய வாக்கியங்களால் நுதல ப்பட்டுளது. சனவின்சண் மகாராஜாதியுலக ரெங்ஙன மென் கண் மிகவுங் கற்பிக்கப்படுகின்றனரோ அங்ஙனமே வாசனை யோடு மூர்த்தாமூர்த்தங்களும் என்பாற் கற்பிதமெனவுண ர்க; வாசனைகளை நிரூபிக்குஞ் சீலமுடையதுந் தூல சூக்கும தேகாகாரமாயுழல்வதுமாய ஆத்மாவாற் கர்மங்கள் செய்யற் பாலனவாம்; எனக்கோ நேதிநேதியாற் கூறுமாத்மத்தன்மை யுண்மையின் யாண்டுங் கர்மஞ்செய்யத் தகாதென்க. 14

## கர்மத்திற்கு மோக்ஷ ஹேதுத்தன்மையின்கட் பொருந்தாமையைக் கூறல். 15-16

ஆதலினுற் கர்மத்திற்கு அஞ்ஞானவாயிலாயுளதாந் தன் மையுண்மையிற் கர்மத்தாலாசைவைத்தல் தகாது. முத்திக் கேதுவாந்தன்மை ஞானத்திற்குண்மையின் அஃதன்னியத் தையவாவுகின்றதில்லை யென்க. யாது அமிருதமோ அஃதப யமாம் ஆர்த்தமன்று நேதிவாக்கியத்தாற் பெறவுரியதும் எல் லாவற்றினும் பிரியமாயதும் யாதோ அதுவே யெனது வடிவ மாம் ஆதலினறைந்தவற்றினின்றும் யாது அன்னிய விபரீ தமோ அது கிரியையோடும் விடத்தக்கதேயாம். 16

பதினொன்றாவது ஈக்ஷித்ருத்வப் பிரகரணம் முற்றும்.

---

## பன்னிரண்டாவது பிரகாசப் பிரகரணம்.

### ஆபாச சகித அந்தக்கரண அவிவேகத்தா லாத்மாவின் யாதாத் மியத்தை யறியாமையைக் கூறல். 1-4

*பிரகாசத்தின் னனந்தலையின்கட் பொதிந்த புற்கலத்தை யெங்ஙனம் ஆலோக விசிட்டமா யுலகபிமானிக்கின்றதோ அங்ஙனந் திருஷ்ட்ராபாச சித்தத்தை யான் றிருஷ்டாவென அபிமானிக்கின்றது. விவகார பூமியின்கண்ணெப் பிராணு திகளனுபவிக்கப்படுகின்றனவோ அவற்றோடான்மாவிற்க பின்னத்வ முண்டாகின்றது ஆதலினுன் மூடன் மௌட்டிய த்தால் ஆத்மாவையறிகின்றானில்லை. தசமனுச்குத் தனது நவாத்மதத்தன்மைப்பிரதிபத்தி யெங்ஙனமோ அங்ஙனம் அறிவின்றிய இவ்வுலகானது திருசியங்களின்மாட்டே ஆத்ம மதியையாற்றுகின்றதேயன்றித் திருக்கின்கண் ணுத்மமதி யை யுஞற்றுகின்றதேயின்று. ஏகவிஷயத்திலேககாலத்து ண்டாவனவாய "நீசெய்" "நீயதுவே" என்னும் விருத்தப் பிரத்தியயங்கள் எங்ஙன முளவாம் நீயுக்தியானுதலுதி.* 4

### ஆத்மாவின் யாதாத்மிய ஞான சித்தியின் பொருட்டு அது நீயென்னுஞ் சுருதியை உபதேசித்தல். 5-15

*ஆகாபிமானிக்கேதுக்கம், இயல்பாயாகாபிமான மற்ற வனுக்கின்று. துயில்போல். ஆத்மாவிற்கதன் நிவாரணத்தின் பொருட்டு அது நீயென்னுஞ் சுருதியால் ஐக்கியமாத்திர மறிவிக்கப்படும். தர்ப்பணத்தில் முகச்சாயையொப்ப ஆத்மா வின்சாயை எதன்கண்ணுரூடமாமோ அந்தப் பிரத்தியயத் தைப் புருடன் பார்த்து ஆத்மா திருஷ்டமென அபிமானிக் கின்றனன். உபாதிபூதமாய அந்தப் பிரத்தியயத்தையும் மோ*

காத்மகமாய அவிவேகத்தையும் உபாதிகத ஆபாசத்தையும் யாவன்றிருசியமென் றறிகின்றானோ திருக்கின் சம்பந்தியென் றறிகின்றானில்லையோ அவனே யோகிகளினுப்பண் ணன்கறிந்தவனவன் இதரனன்று என்பதில் யாதொரு ஐயமுமில்லை. விஞ்ஞாதாவின் விஞ்ஞாதா யாதோ அதுவே நீ யென வேதனாற் சுருதியாலியம்பப்படுமோ அதனாற் சுருதி முதலிய பிரகார அனுபவமேதுவம் பதார்த்தத்தின் நல்லனுபவமாம், அதினின்று மன்னிய அனுபவம் மித்தையாம். எஞ்ஞான்றுந் திருக்குருவாய் நித்தியமாயிரா நின்ற என்னிடத்திற்றரிசன தரிசனங்க ளெங்ஙனுளவாம். ஆதலினால் வடிவத்தினின்று மன்னிய அனுபவம் வாஞ்சிக்கப்படுகின்றதின்று மென்க. இரவியின்றுப மிக்களேபரத்திலெப்பிரதேச ஸ்திதமாமோ அத்தாப மெங்ஙனம் திருக்கிற்கு விஷயமாமோ அங்ஙனமேயீண்டுத்தாபம் அந்தக்கரணத்திருப்பதாம் கூறியவண்ணம் அத்தாபம் திருக்கிற்கு விஷயமாம். இதமம்சமற்றதும் அறிவுருவாயதும் விண்ணிசுர்ப்பவேகரசமாயதும் அத்வயமாயதும் நித்தியமுக்தமாயதும் அங்ஙனமே சுத்தமாயதும் கேவலமாயதும் யாதோ அந்தப் பிரஹ்மமே யானுயிருக்கின்றேன். விஞ்ஞாதாவாய ஆத்மாவினின்றும் அன்னிய வியாபக விஞ்ஞாதா எதனாற் சம்பவிக்கின்றதில்லையோ அதனை லெஞ்ஞான்றும் நானே யெல்லாப் பூதங்களில் வியாபக விஞ்ஞாதாவாகின்றேன் அதனன் முத்தன். யான் பிரஹ்மவித்து என்பதையும் விடுத்து மறையமைறந்தவண்ணம் யாவன் ஆத்மாவிற்கு அனுப்ததிருஷ்ட்ருத் தன்மையையும் அங்ஙனமகர்த்ருத் தன்மையையும் உணர்ந்தானோ அவனே ஆத்மாவை யறிந்தவனவன் அன்னியனன்று வனென்றுணர்க யானறிஞனே யானறிபொருளன்று யான் சுத்தன் யானெஞ்ஞான்றும் முத்தன் என்னும்

*விவேகியின் விவேகவடிவ புத்திவிருத்தியும் சாக்ஷிபாசியமாத லின் நாசமுடையதேயாம் ஆதலினபிமானம் யாங்ஙனமா மென்க. ஆத்மாவின்றிருஷ்டியலுப்தமாம் இது காரகங்களால் உற்பாத்யமன்றுமாதலின் இதனது ஜன்யத்வமோ அன்னிய மாய திருசிய திருட்டியாற் கற்பிக்கப்பட்டதேயாம்.* 15

சிற்பிரகாசத்திற்கு நித்யத்வ உபபாதன பூர்வகமாக ஆத்மாவி ற்கு நியோஜ்ஜியத்வ அபாவப் பிரதிபாதனஞ் செய்தல். 16-19

*தேகாத்மபுத்தி பூர்வகத் தன்மையுண்மையிற் கர்த்ருத் வாதிகள் ஆத்மாவிற்கு மித்தையாம் யான் கிஞ்சித்துஞ் செய் கின்றேனில்லை யென்னும் புத்தியானது பிரமாணஜன்னியமா மாதலிற் சத்தியமாம். கர்த்ருத்வமோ காரகாபேக்ஷமாம் அகர் த்ருத்வமோ இயல்பாம் கர்த்தா போக்தாவென்னும் விஞ்ஞா னம் மித்தையேயென நன்குதுணியப் பெற்றுளது. இங்ஙனஞ் சாஸ்திர அநுமானங்களால் ஸ்வரூப சாக்ஷாத்காரமாங்கால் யான் நியோஜ்ஜியன் என்னுஞ் சத்தியபுத்தியாங்ஙனமுண்டா மென்க. எங்ஙனம் வியோமஞ்சர்வாந்தரமோ அங்ஙனம் யான் வியோமத்தினும் அப்யந்தரன், யான் நிர்விகாரன் யானசலன் யான் சுத்தன் யானஜரன் யான்முக்தன் எஞ்ஞான்றும் யான் அத்வயனேயாவன்.* 19

*பன்னிரண்டாவது பிரகாசப் பிரகரணம் முற்றும்.*

---

## பதின்மூன்றாவது அசக்ஷுஷ்ட்வப் பிரகரணம்

ஆத்மாவின் சுத்தத்வ அசலத்வாதியின் வியவஸ்தாபனம் 1-10

*சக்ஷுத்தன்மையின்மையி னெனக்குத் திருஷ்டியில்லை அங்ஙனமே சுரோத்திரமின்றிய வெனக்குச் சுருதி யெங்ஙன*

மாம்; வாக்குத்தன்மையின்மையினெனக்கு மொழிதலில்லை மனத்தன்மையின்மையினெனக்கு மதியெங்ஙனமாம். பிராண னற்ற வெனக்குக்கர்மமில்லை யெனக்குப் புத்தியின்மையின றியுந்தன்மையுமின்று அதனானே சின்மாத்திர சோதியாய் நித்தியமுக்தனாய்ச் சுத்தனாய்க்கூடஸ்தனாய்ச் சலனமற்றவ னாய் அமிருதனாய் அக்ஷரனாய் அங்ஙனமே யென்றுஞான்றும் அசரீரனாயிராநின்ற வெனக் கறிவறியாமைகளிலவாம் வியோ மம்போல் வியாபியாய வெனக்குச் சரீரத் தன்மையின்மை யின் பசியேனுந் தாகமேனுஞ் சோகமேனும் மோகமேனுஞ் சரையேனும் மரணமேனுமிலவாம் எனக்கஸ்பர்ஸத் தன்மை யுண்மையின் ஸ்பர்ஸஞானமும் அஜிஹ்வத்தன்மையுண்மை யின் ரசஞானமுமின்றும் நித்திய விஞ்ஞான வடிவமுடைய வெனக்கென்றுஞான்றும் ஞானஞ்ஞானங்களிலவாம். நேத்திர வாயிலாய்ச் சனித்தரூபாகாரமாய யாதொருமானச விருத்தி யுண்டோ அது என்னுடைய நித்திய திருஷ்டியினால் நித்திய மும் விளக்கப்படுகின்றது. இஃதனுபவசித்தமன்றோ. அங்ங னமே அன்னிய இந்திரியங்களோடு கூடிய விஷயாகார விருத் திகள்யாவையுளவோ அவையும் கேவல மந்தரத்திலுள்ள மன திலெழாநின்ற இராகாதி வடிவநினைவுகளும் எனது திருஷ்டி யினானே விளக்கப்படுகின்றன. மனோசம்பந்தமான கனவி ருத்திக ளெங்ஙனஞ் சாக்ஷி வேத்தியங்களாகின்றனவோ அங் ஙனமே நனவிருத்திகளுமா மென்றுணர்க. அதனானே திருஷ்டாவின்றிருஷ்டியானது நித்தியமுஞ் சுத்தமு மனந்த முங் கேவலமுமாமென்க. உபாதிபூதமாய திருசிய திருஷ்டி யோடு விவேகமின்மையின் ஈண்டு அந்நித்திய சுத்த ஆத்ம திருஷ்டியானது அநித்திய அவிசுத்தமாய்க் கிரகிக்கப்படுகின் றது அங்ஙனமேயான் சுகியென்றுந்துக்கி யென்றும் மூடத்

தான் மூடனென்றும் சுத்தத்தாற் சுத்தனென்றும் சம்சார மடையும்படி யிவ்வெல்லாவுலகும் நினைக்கின்றது. 10

## சம்சார நிவிருத்தி யுபாயத்தை யுபதேசித்துக்கொண்டு முமுக்ஷுவைச் சிக்ஷித்தல். 11-13

பிராணிகளினுப்பன் யாவன் முமுக்ஷுவோ அவன் "சபாஹ்யாப்யந்தரம் அஜம் நித்யமுக்தம் அசக்ஷுஷ்கம்" என்பனவாதிய வேதப் பிரதிபாத்யமாய தன்னைச் சந்ததஞ் சிந்திக்கக் கடவன். அசக்ஷுஷ்காதி சுருதியாலு மெஞ்ஞான்று மெனக்கு இந்திரியங்களிலவாம். இதற்கிணையாய் "பிராணனற்றது மனமற்றது சுப்ரமாயது" என்னும் முண்டக வசனமுங்காண்க எனக்கொலியாதிகளிலவாந்தன்மையுங் காடகத்திற் கேட்கப்படுகின்றது; எதனாற் பிராணனும் மனமு மெனக் கின்றோவதனாற் சந்தத மவிகாரியே யாவனென்க.

## அவிகாரித்தன்மை யுண்மையின் விக்ஷேபசமாதிக ளிலவென வியம்பல். 14-18

அவிகாரியாதலின் விக்ஷேபமெனக் கின்று விக்ஷேபமின்மையிற் சமாதியுமெனக்கின்று விக்ஷேபமேனுஞ் சமாதியேனும் விகாரியாய மனத்திற்கேயன்றி அமனஸ்கமாய்ச் சுத்தமாய வெனக் கவ்விரண்டு மெங்ஙனமாமென்க. அசரீரியாயும் வியாபியாயு மிராநின்ற வெனக்கு மனமற்ற தன்மையும் விகாரமற்ற தன்மையும் பொருந்துமென்றுணர்க சந்ததம் நித்யமுக்த சுத்த புத்தனாய வெனக்கு மெத்துணை இந்நித்திய முக்தாதி விஷய அஞ்ஞான மிருந்ததோ அத்துணை சமாதி செய்யத்தக்கதாயிருந்தது; இப்பொழுதில்லை. என்னையே தியானித்தும் உணர்ந்தும் முமுக்ஷுக்கள் கிருதகிருத்தியராகின்

றனர். ஆதலினெனக்குச் சமாதியேனு மசமாதியேனு மன்னியமேனுஞ் செய்யத்தக்கன வெங்ஙனமாமென்க. எஞ்ஞான்றும் யான் பிரஹ்மமாயிருக்கின்றேன் சந்ததஞ் சர்வமும் யானுயிருக்கின்றேன் சததஞ் சுத்தனுயிருக்கின்றேன் எக்காலும் புத்தனுயிருக்கின்றேன் ஆதலிற்பந்த வினனுனேன் எவற்றினின்று மெனக்குச் சன்மமும் க்ஷயமும் இல்லவேயில்லை யான் ஜரையற்றவனும் அமிருதனுமா யிருக்கின்றேன். 18

## ஆத்மாவிற்குப் பூரணத்தன்மையைப் புகலல். 19-24

சர்வபூதங்களிலறிபவ னென்னினன்னியனெவனுமில்லை யானே கர்மாத்யக்ஷனும் சாக்ஷியும் சேதனனும் நித்தியனும் நிர்க்குணனும் அத்வயனுமாவேன். காண்கின்ற பூதத்திரயமும் யானல்லேன் காணவொண்ணுத பூதத்வயமும் யானல்லேன் உபயவடிவவுடனும் யானல்லேன் யானெவ்விசேடமுமற்ற கேவலன் யான் முக்குணமுமற்ற சிவமேயாவேன். எக்காலுந் திருக்குருவாயிருக்குமெனக்குச் சந்தியையுமில்லை யல்லுமில்லை பகலுமில்லை. எங்ஙனம் புட்கரஞ்சர்வ மூர்த்திவிலக்ஷணமாயுஞ் சூக்ஷ்மமமாயும் அத்வயமாயும் உளதாமோ அங்ஙனம் பிரஹ்மமும் பூரண சூக்ஷ்ம அத்வயமாம் அதுவே யான், விண்ணையும் விட்டொழிந்த சித்தமாய பிரஹ்மமே யானுயிருக்கின்றேன். எங்ஙன மொன்றுயவானுக்குச் சித்ரபேதத்தாற் பேதம் விகற்பிக்கப்பட்டதோ அங்ஙனம் என்னுடையவடிவம் பிரஹ்மம் தன்னுடைய வடிவம் பிரஹ்மமென்னும் பேதமானது ஒன்றுயவெனக் குபாதியால் விகற்பிக்கப்பட்டதாம். ஒன்றுய வென்னிடத்திலே பேதம் அபேதம் ஏகம் நானுஞேயம் ஞாதா பலம்பலப்பிராப்திகர்த்தாவென்பன விகற்பிக்கப்பட்டன; இவையாவு முய்த்துணருங் காலுளவாத

லேயிலவென்க. யானவிகாரியாதலி னெனக்குத்தள்ளத்தக்க துங் கொள்ளத்தக்கதும் ஐயமின்றியின்று சந்ததம்யான்முக் தன் அங்ஙனமேசந்ததம் யான் சுத்தன்புத்தன் நிர்க்குணன் அத்வயன். 24

### அகம் பிரஹ்மாஸ்மி யெனச் சந்தத மனுசந்தானஞ் செய்க வெனமுமுக்ஷுவை மிகவுமுற்சாகஞ் செய்வித்தல். 25-27

இங்ஙனங் கூறியயாவற்றையுஞ் சித்தத்திற்றரித்த முமுக்ஷுவானவன் எஞ்ஞான்றும் ஆத்மாவை யறியக்கடவன் தன்னுடற்கண்மன்னுமென்னையுணர்ந்து துருவமா யிருஷியும் முத்தனுமாவன், இவ்வண்ணந் தத்துவார்த்தத்தை யாவனறிவனோ அவன் கிருதகிருத்தியனுஞ் சித்தனும் யோகியும் முக்தியப் பிராஹ்மணனுமே யாவன். கற்றுமறியாதவனோ தன்னைக்கொன்றவனே யாவன் எம்மாற் சமாசமாக இங்நிச்சித வேதார்த்தமாயது நுதலப்பட்டது இதனைச் சாஸ்திர ஆசார்யர்களால் அனுசிஷ்ட புத்திமானான குரவனாற் சாந்தர்களாய சந்நியாசிகளின் பொருட்டு நன்குபதேசிக்கத்தக்கது. 27

பதின்மூன்றாவது அசக்ஷுஷ்ட்வப் பிரகரணம் முற்றும்.

---

## பதினான்காவது ஸ்வப்னஸ்மிருதிப் பிரகரணம்.

### அந்தக்கரணத்தி னபரோக்ஷத்தன்மையும் அதன் பலமும் பகரல். 1-10

கனா ஸ்மிருதிகளிற் கடாதிகளின் ஆகாராவபாசமனுபவிக்கப்படுகின்றதெதனாலோ அதனால் கனாவவஸ்தையினும் அனுபவாவஸ்தையினும் அவசியங் கடாதியாகார அந்தக்கரண விருத்தியானது புலப்பட அனுபவிக்கப்படுகின்ற

தென் றனுமிக்கப்படுகின்றது. துயிலுந்துறவிக்குக் கனவி லிரந்துண்டுலவக்கண்ட எவ்வாக்கை யுண்டோ அது சுய மெங்ஙனமன்றோ அங்ஙனங் காண்போனுந்தன்மை யுண்மை யின் நனவிற் காணப்படு மாகத்தினின்றும் ஆத்மா அன்னிய மேயாம். உட்டுவாரமுற்ற மட்பிரதிமை யூடு உருக்கியதா மிரம் புகட்டப்பட் டெங்ஙனம் அச்சமான வடிவத்தை யடை கின்றதோ அங்ஙனந் சித்தமும் ரூபாதிகளை வியாபித்து அவ் வடிவத்தை யடைகின்றதென்ப தொருதலையாம். வியஞ்சகங் களாய அயவாகனனும் ஆலோகமும் வியங்கியங்களாய அய மட்கல முதலியவற்றி னாகாரங்களை யெங்ஙன மடைகின்றன வோ அங்ஙனம் சர்வார்த்த வியஞ்சகத்தன்மை யுண்மையின் மதியும் அர்த்தாகாரமாய் நன்கு புலப்படுகின்றது. அர்த்த வடிவ புத்தியே புருடனுன் முன்னமுங் காணப்பட்டதாம். அங்ஙன மன்றாயிற் கனவிலெங்ஙனங் காணக்கூடும் ஸ்மரிப் போனுக்குத்தா னாகிருதி யெங்ஙனங் கூடுமென்க. இப்புந்திக் கு ரூபாதியாகாரமாகத் தரிசன யோக்யதாபத்தி யாதுண் டோ அதுவே விஷய வியஞ்சகத்வ மாமென்றுணர்க அங் ஙனமே திருக்கிற்குக் காண்போனுந் தன்மையும் புத்திவிருத் திக ளுற்பன்னமாங்கால் அவ்வடிவமாக ஸ்புரணமேயாம்; பரிணமமன்றென்றுணர்க. சர்வ சரீரங்களின்கண் ணுளவா ன சர்வ மதிகளுஞ் சின்மாத்திர ஜோதியாய வென்னாலே தனுற் பிரகாசிக்கப்படுகின்றனவோ அதனுற் சர்வத்தி னுத் மாயானே. கரணமுங் கர்மமுங் கர்த்தாவுங் கிரியையும் பய னுங் கனவிற் புந்தியேயாம் இங்ஙனம் நனவிலு மெதனுற் காணப்படுமோ வதனுற் காண்போனய் ஆத்மா மதியின் வண்ணத்தினின்று மன்னியவண்ணமாய சத்திய வகண் டைகரசமாம் தள்ளக்கொள்ளத் தகும் வடிவத்தான் மதியாதி

கட்கனாத்மத்தன்மை சித்திக்கின்றது தள்ளுங்கொள்ளுங் கர்த்தாவாய ஆத்மாவோ தள்ளவுங்கொள்ளவுந் தகாததாமென்க. பாகியாப்யந்தரத்தோடு கூடியதும் பாகியாப்யந்தர மாயதும் ஆத்மாவே யன்னியங் கிஞ்சித்துமில்லை ஆத்மா சுத்தமாயது ஆத்மா பிரஞ்ஞானைகரசமாயது ஆத்மா விஞ்ஞானகனமாயது இத்தகைய ஆத்மாவின்கண்ணெங்ஙனம் ஹேயோபாதேயங்கள் கற்பிக்கப்படும். 10

## ஆத்மாவினிடத்தில் ஹேயாதியினின்மை யானது அனுபவத்தாலு மறியப்படுமேன வறையல். 11-15

நேதிநேதியென அன்னிய நிவாரணத்தா லெவ்வாத்மா சேஷிக்கப்பட்டதோ அதுவே பிரஹ்மவித்தின் வடிவமாயிஷ்டமாமேல் அதன்மே லெங்ஙன மெத்தனிப்பன் கிருதகிருத்தியத் தன்மையுண்மையினென்றுணர்க. நிரந்தரம் ஷடூர்மிரகிதப் பிரஹ்மமாகவே யிருக்கின்றேன், யானெங்ஙனங்காரியவானாவேன், என இவ்வண்ணம் துரிதமாய்ப் பிரித்தப்யசிக்க. நதியினக்கரை கடந்தோன் எங்ஙன மக்கரையிலிருப்போனாயே அக்கரையையே யடைய விரும்பானோ அங்ஙனம் ஆத்மஞானியுமீண்டு வேறுகாரியமியற்ற விச்சியானென்க. ஆத்மஞ்ஞனாய எவனுக்கேனும் ஹானோபாதானத் தன்மையுளதாமேல் அவன் மோக்ஷார்ஹனேயல்லனென்றுணர்க அவன் நிச்சயமாய்ப் பிரஹ்மத்தால் வாந்தனேயாவன். ஆதித்தனோடிவ்வகில மெதனாற் பிராணனாய இரணியகருப்பனோ அதனாற் பிராணனேயானென்றறிந்தோனுக்கும் அற்பகல்களே யிலவாமெனிற்றுவித ரகித வடிவமாயிருக்கும்போது பிரஹ்மவித்துக்கவை யெங்ஙனமாமென்க. 15

### மோக்ஷத்தின் பொருட்டு ஸ்மிருதி செய்யத்தக்க தெனக்கடாவ விடையளித்தல். 16-19

அலுப்தசித்தாதலினாத்மா ஆத்மாவை ஸ்மரிக்கின்றது மில்லை விஸ்மரிக்கின்றது மில்லை மனம் ஸ்மரிக்கின்ற தென்னும் ஞானமும் அஞ்ஞானஹேதுஜமாம். பரமாத்மா ஞாதாவிற்கு ஞேயமாமேல் அது ரச்சுசர்ப்பம் போல் அவித்யாகற்பிதமென வித்வான்களாலறியப்படும். ஆத்மவித்தையாற் பரத்வ ஞேயத்வாதிகள் பாதிக்கப்படுங்கால் ரச்சுவிற் சர்ப்பம் போலாத்மா அத்வயமேயாம் கர்த்ருகர்மபல பேதமின்மையின் சபாஹ்யாப்யந்தர அஜமேயாத்மாவாம், ஆதலினாத்மாவின்கண்யான் எனதென்னும் பாவம்யாது பிரதீதியாகின்றதோ அது யாருக்கெங்ஙனமுண்டாமென்க. ஆத்மா ஆத்மீயமென்னு மிப்பாவமானது அவித்தையாற் பிரகற்பிதமாம் ஆத்மைகத்வமாங்காலஃதின்றாம் பீஜாபாவ மாங்காற் பலமெங்ஙனமென்க. 19

### பிரஹ்மத்திற் கக்ஷரத்தன்மையைப் பிரதிபாதித்தல். 20-22

காண்போன் கேட்போன் அங்ஙனமே நினைவோன் அறிவோன் எனப்பிரசித்தமாய பிரத்தியக்குயாதோ அஃதக்ஷரமேயாம். அக்காண்போனாதிய தன்மைவாய்ந்த பிரத்தியக்கானது அக்ஷரத்தினின்றுமெதனால் வேறன்றோ அதனாற்காண்போனாய யானக்ஷரமேயாவன் காண்போனாந்தன்மையாதிய கிரியா சம்புக்தமாய ஸ்தாவரஜங்கமம் யாவுமக்ஷரமேயாம் ஆதலின் யானக்ஷரமாவேன் சர்வத்தின் வடிவமுமாவேன் கர்த்ருத்வமற்றதும் கிரியாவடிவங்கிரியா பலமென்னு மிவ்விரண்டினன்னியமும் மமகாரமற்றதும் அகங்காரமற்றதும் ஆயவாத்மாவை யாவன் நன்குகாண்பனோ அவனே தத்துவதரிசியாவன். 22

## ஆத்மவித்துக்குச் சபலங்கர்மமென்னுஞ் சங்காவாரணம். 23-26

மமகார அகங்காரயத்னேச்சைகள் ஆத்மாவின்கண்ணி யல்பாயின்மை யனவேயாம். ஹே முமுக்ஷுக்களே! இங்ஙன நீவிரறிவீராயின் ஸ்வஸ்தர்களாயிருமின்! கர்மங்களாலென்? யாவன் யான்கர்த்தாவெனவும் வேத்தாவெனவுந் தன்னையறிந் தானே அவன் ஆத்மஞ்ஞனேயல்லன்யாவனகர்த்தா அஞ்ஞா தாவெனத்தன்னை யறிவானே அவனேயாத்மவித்தாம். தேகாதிகளினின்றும் ஆத்மாவிற்கன்னியத்தன்மை யிருப்பினும் அக்காய முதலியவற்றோடு தாதாத்மியமெங்ஙனமிஷ்டமாமோ அங்ஙனம் அகர்த்தாவி னவிஞ்ஞானத்தால் ஆத்மாவிற்குப் பலகர்மாத்மத்தன்மை யிஷ்டமாமென்க. திருஷ்டி சுருதி மதி ஞாதியென்பன கனுவிலுலகராலெஞ்ஞான்றுங் காணப்படுதலி னானும் அவற்றிற்காத்ம ஸ்வரூபத்தன்மை யுண்மையினானும் ஆத்மா அன்னியமாம் அங்ஙனமாதலினாத்மாவிற்கு நித்திய அபரோக்ஷப் பிரஹ்மரூபத்தன்மை துணியப்பெறு மென்றுணர்க. 26

## ஆத்மஞ்ஞனுக்குப் பலங்கூறல் 27-29

யாவனுக்குப் பரலோக பயமும் மரணபயமு மின்றோ ஆத்மஞ்ஞனாய அவனுடைய இரக்கத்திற்குப் பிரஹ்மேந் திராதிகள் சர்வைஶ்வர்ய சம்பன்னத்தா லீஶ்வரரா யிருப் பினும் விஷய மாகின்றனர்; அவன்றானாத்ம வித்தெனவறிக. சர்வ தைன்யோற்பவமாய் அசுபமா யிராநின்ற திருஷ்ணையா னது மூலத்தோடு சின்னமாயிருக்குமாயின் அவனுக் கீஶ்வர த்தன்மையாற்றானென் மற்றும் பிரஹ்மேந்திரத் தன்மையாற் றானென். யானென்னு மாத்மபுந்தியும் எனதென்னும் ஆத்

மீய புந்தியும் எவனுக்கெக்காற் பிரயோஜன மற்றனவாமோ அவனக்காலாத்ம வித்தாவன். 29

## ஆத்மாவிற்ககார்யசேஷத் தன்மையை யறையல். 30-40

நனுக்கனுக்களிற் புத்தியாதி யுபாதிகளிருக்குங்காலும் அங்ஙனமே துயிலிலில்லாக்காலும் எவனுடைய ஆத்மாவிற்க விசேஷத்தன்மையறியப்படுமோ அவிசேஷ ஆத்மஞ்ஞனை அவனுக்குக்காரிய மெங்ஙனம் பவிக்கும். வியோமசதிரு சமாபுந் தோஷரகிதமாயும் விமலமாயும் பிரஞ்ஞானைகரச மாயும். அத்வயமாயுமிருக்கும் பிரஹ்மத்தின்கண்ணுத்ம புந் தியாவனுக்குற்பன்னமாமோ அவனுக்கு வேறென்னகாரியம் அங்கீகரிக்கத்தக்கது விளம்புவீராக. சர்வபூத ஆத்மபூதமாய தனக்கும் அமித்திரனைக்காண்பான் யாவனவாவுகின்றனனோ அவன் விபாவசுவைக்குளிர்விப்பான் வேட்கையுற்றவனே யாவன். மதியையும் பிராணனையும் உபாதியாகவுடையதும் சலப்பிரதிபிம்பம்போல் இந்திரியத்திடத்தும் அவ்வாயின் மேய விருத்திகளின்மாட்டும் பிரதிபிம்பித்ததுமாய ஆத்மா அவ்வவிவேகத்தாற் செய்வது போலு மென "தியானவியா பாரஞ் செய்வதுபோல்" என்னும் மறையாலறையப் பட்டு ளது, சுயமாயவ்வாத்மா சுத்தமும் முக்தமுமாம். பிராணனற் றவனும் அமனஸ்கனும் அங்ஙனமே அசம்சர்க்கியாயும் திருக்காயும் வியோமத்தை யொப்ப வியாபியாயு மிராநின்ற வெனக் கெங்ஙனங்காரியம் பவிக்கும், நிர்விகாரப் பிரஹ்மமாய வெனக்கசமாதியையுங்கண்டிலேன்; எஞ்ஞான்றும் விசுத்தனு ய்ப் பாபமற்றவனுயிராநின்ற வெனக்குச் சோதிக்கத்தக்கதை யும் வேறுகண்டிலேன். சர்வகமாயசலமாய வெனக்குக் கமன த்தையுங் காணவே காணேன்; அங்ஙனமே அகுணத்தன்

மையுண்மையின் நிஷ்களனுய வெனக்கு மேல்கீழ்குறுக்கு முதலியவற்றைக் காணவே காணேனுதலின் அடையத் தக்கதையுங் காணவே காணேன். சின்மாத்திர ஜோதித் தன்மையுண்மையின் ஆத்மாவின்கண்ணித்தியந்தமசின்றும் இக்காணித்தியமுக்தனேயாய வெனக்கு என்ன காரியமிருக்கின்றது அமனஸ்கனுய வெனக்கு என்ன சிந்தையிருக்கின்றது இந்திரியமற்ற வெனக்கென்னகிரியைதானிருக்கின்றது. "பிராணனற்றது மனமற்றது சுப்ரம்" என்னும் எழுதாமொழியின் றிருமொழி யுண்மையேயன்றே திக்குத்தேசகால நிமித்தமாதிய யாவுமாத்மாவிற்கின்மையிற் சந்ததமாத்மாவைத் தியானிப்போனுக்குக் காலாதிகளினபேக்ஷை யில்லவேயில்லையென்றுணர்க. எப்பிரஹ்மாத்மஞான தீர்த்தத்தில் தேவர்களும் வேதங்களும் மற்றெல்லாப் பவித்திரங்களும் ஏகத்வத்தையடையுமோ எதன்கண்மூழ்கி யமிருதத்வத்தையடையலாமோ அம்மானச தீர்த்தமே சம்சாரபாபமூல அவித்யா தாரகமாம். 40

## ஆத்மாவிற்காகமிரண்டின் விவிக்தத் தன்மையை விளம்பல். 41-50

ஒலியாதிகள் தாமாய் விளங்குவனவன்று ஒன்றொன்றாலேனும் விளக்கிக்கொள்வனவுமன்று ஆதலினெங்ஙனம் வேறால் விளக்கப் படுவனவேயாமோ அங்ஙனமே தைகிக இரதாதிகளும் வேறால் விளக்கப்படுவனவேயாம் திருசியத் தன்மையுண்மையினுனே யென்க. அகங்காரமுங் காமம் முயல்வு கர்த்ருத்வ போக்த்ருத்வ சுகதுக்க மோகதுவேஷாதிகளும் எனதெனதெனவுளவாம் மனோவிருத்திகளும் ஆகியவையீண்டு நன்கு காணப்படலாந் தன்மையுடையனவாதலின் உரைத்த

வொலி யாதியை யொப்பத்தாமாய் விளங்குவனவன் றென்ற றிக. அவையொன் ரொன்றாலேனும் திருசியத் தன்மையை யடைவனவன்று ; திருசியத் தன்மையின் யோகத்தாலே அவற்றினின்றும் ஆத்மாவன்னியமாம். சகர்த்ருகமும் கர்ம பலத்தோடு கூடியதுமாய யான் எனதென்பன வாதிய சமஸ்த விக்கிரியைகளும் சித்துருவத்தால் யாண்டும் அருக்கன்போல் எதனால் விளக்கப்படுகின்றனவாமோ அதனால் ஆத்மாவிற்க சிதத் தன்மையானது துணியப் பெறுமென்க. எதனாலாத்மா எல்லாத் தேகிகளின் மனங்களைச் சித்துருவத்தாலே வியா பித்துப் புட்கரம்புரைய அவஸ்திதமாமோ அதனால் அவ் வாத்மாவினின்றும் அபரஜீவனாய அறிபவனுமின்றாம் அங்ங னமே யவ்வாத்மாவினின்றும் அன்னிய ஈஸ்வரனாய அறிபவ னுமின்றாம் ஆதலினாத்மாவொன்றே. தூலசூக்கும தேகங்கட் கன்னிய சித்தாற்றிருசியத் தன்மை பகர்ந்தபடி சித்திக்குங் கால் நிராத்மவாதங்களாயவை யெம்மால் நன்கு நிராகரிக்கப் பட்டனவேயாம். ஆகவே ஆத்மா அவிசுத்த கர்மத்தினின் றும் அன்னியமும் அதனாற் சுத்தமும் சுநிர்மலமும் சர்வகத மும் அசிதமும் அத்வயமுமாம். நின்மதத்திற்றன்விருத்தி களால் அளவறுவிதம் பாவிருத்தமாய கடாதி விஷயாகார மனமானது அன்னிய ஆத்மாவால் விளக்கப்படுவதன்றாயின் மதிக்கெங்ஙனமசுத்தி அசித்துருவம் விகாரம் முதலிய தோ ஷத்தாலுளதாய துட்டத்தன்மை நீக்கவொண்ணாததாமோ அங்ஙனமாத்மாவிற்கும் நீக்கவொண்ணாததா மென்றுணர்க பரிணாம விக்கிரியாமலாகிதமும் அபரிச்சின்னமுமாயககன மெங்ஙனஞ் சம்பந்திப்பதில்லையோ லேபிக்கப்படுவதில்லை யோ அங்ஙன மிவ்வாத்மாவும் மதியாதிகளிற் சம்பந்திப் பதுமில்லை அனவரதமும் அவற்றின்றோஷத்தால் லேபிக்கப்

படுவதுமில்லை இவ்வாத்மா சமஸ்த பூதங்களிற் சததஞ் சமமெதனுலாமோ அதனுல் அஜரம் அமரம் அபயமேயாம் திருசிஸ்வரூபத்தின் சம்பந்திகளாய அமூர்த்த மூர்த்தங்களும் கர்மவாசனையும் மூடமதியினரால் அவித்தையால் ஆத்மாவின்கண்ணே கற்பிக்கப்பட்டனவா மாதலின் நேதி நேதி வாக்கியத்தால் யாவற்றையும் ஆத்மாவினின்றும் வெளிப்படுமாறு நூக்கிக் கேவலந் திருசியே அவசேஷிக்கப்பட்டுளது விஷய சம்பந்தத்தாலுளதாய மனத்தின் விஷயாகார விருத்திரூபம் யாதோ அது ஸ்மிருதியிலும் தயின்றேன் கனவிலும் விஷயாகாரமாகவே காணப்படுகின்றது அங்ஙனமே திருசியத் தன்மையுண்மையின் சரீரமும் மனமுமாய இரண்டு தேகங்களும் இவ்விரண்டன் வாதனைகளும் ஆத்மாவினின்று மன்னியமேயாமென்க. தூயவியல்பதுவாயககனத்தின் கட்கனுதிமலம் பொருந்தியபோதும் பொருந்தாதபோதும் எங்ஙன மவிசேஷத்தன்மையே யுளதாமோ அங்ஙனங்ககனுபமமாய் வேதத்தால் பாதிக்கப்பட்டதுவித த்தையுடையதாயிராநின்ற சித்துருவ ஆத்மாவின்கட்சந்ததம் அவிசேஷமேயுளதெனவுணர்க. 50

பதினுன்காவது ஸ்வப்னஸ்மிருதிப் பிரகரணம் முற்றும்.

---

## பதினைந்தாவது வேறுவேருகாப் பிரகரணம்.

இயல்பாயசுத்தமேய ஆத்மாசாதன விசேஷத்தாற் றூயதாகின்ற தென்னுஞ் சிற்சிலர் கோள்கையை நிராகரித்தல். 1-3

வேருயசீவன் வேருய பிரஹ்மம் எதனு லாவதின்றே அதனுற் கிஞ்சித்தும் அன்னியம் பிரஹ்மமெனச் சிந்தியாதொழிக.

அன்னியமாய ஜீவனுக்குத் தன் விருத்த வியல்பினை யுடைய பிரஹ்மத்தின்கண் ணேகீபாவமாங்கால் அச்சீவனுக் கு நாசம் நிச்சயமா யுண்டாமென்க, முற்கண்டதை ஸ்மரிப் போனுடைய எச்சித்தத்தில் வாசனாரூபம்பட்த்தி லர்ப்பிக்கப் பட்ட சித்திரம்போலும் காணப்படுகின்றதோ எவனாற்றான் காணப்படுகின்றதோ, அது சத்வமென்னும் நாம மியையப் பெறும் அவன் க்ஷேத்ரஞ்ஞன் என்னும் நாமமியையப்பெறு வன் எனவறிக. சுகாதிபலாவசானத்தை யுடையதும் கர்த்ரா திகாரகங்களோடு கூடியதுமாய எத்துவிதம் முன்ன மனுப விக்கப்பட்டதோ அது இஞ்ஞான்று ஸ்மரிக்கத்தக்கதாய்த் திருசியநிஷ்டமாய்க் காணப்படுகின்றது ஆதலின் முன்ன மும் அது ஆத்மாவிற்குத் திருசியமேயாம். 3

ஆத்மாவிற்குச் சாக்ஷித்தன்மையைச் சாற்றல் 4-6

திருசியமெஞ்ஞான்றுங்காண்போனி னன்னியமேயாம் திருசியத்தன்மை யுண்மையின் கடம்போல்; மேலும் திரு சியத்தினுங் காண்போன் அசஜாதீயனே யாவன்; அங் ஙனமன்றாயிற் புந்திபோற் சாக்ஷித்தன்மை பொருந்தாதென் றுணர்க. இச்சாதியாதிகள் தன்பாலாத்ம ஆத்மீய அபிமான வடிவ மித்தியாபுத்தியை யபேக்ஷித்து எங்ஙனம் என்மாதா என்பிதாவென அத்யாசானுசாரமாய்ச் சமஸ்காரப் பிரயோ ஜகஞ்சவமாமோ அங்ஙனம் விதிகளின் பிரயோஜகங்களாம் அவ்வேதுவாற் சவமேபோற் சாதியாதிகள் ஆத்மதர்மங்க ளன்று அங்ஙனமன்றேல் ஆத்மாவிற் கனாத்மத்தன்மை யுண்டாம். அதேகத்வம் மோக்ஷமாம் அது கிரியாபலமன் று கிரியாபலமோ சுகதுக்கங்களாம் அவை அசரீரனுக்கின் றெனச் சாந்தோக்கியத்திற் கூறியிருத்தலினென்க. கிரியை

யை யேதுவாயுடையது தேகயோகமேயாம் ஆதலின் வித்வான் கிரியைகளை த்யாகிக்கக்கடவன். 6

## வித்வானுக்குக் கிரியாத்யாகத்தையும் ஸ்மரிக்கத்தக்க ஆத்மவடிவத்தையுங் கூறுதல். 7-18

கர்மங்களின்கண்ணாத்மா அதிகாரியாமேல் அவற்றின் நிவிர்த்தியினு மங்ஙன மங்கீகரிக்குக. பலமும் அகார்யமுமாய அதேகத்வத்தை யறிவனேற் கிரியைகளை யெங்ஙனமிபற்றுவன். மதிமானனவன் கர்மங்களின் நிமித்தமாய ஜாதியாதிகளை நன்கு பரித்யாகஞ்செய்து கர்மஹேது விருத்தமா யெச்சொரூபமுளதாமோ அதனை நூலின் நுதலியவண்ணஞ் சிந்திக்கக்கடவன். சர்வபூதங்களில் யான் ஒருவனே ஆத்மா; அந்தப்பூதங்களும் கம்மிலெங்ஙனமோ அங்ஙனம் என்னிடத்திலே கற்பிதங்கள். ஆத்மா, வானம்மான யாண்டும் வியாபித்துளது ஆத்மாவால் யாவும் வியாபிக்கப்பட்டுளது சுக்ரம் என மறையறைதலிற் பிரகாச சுபாவமாய்ச் சுத்தமாயது யாதோ அதுவே யெனது வடிவென அங்கீகரிக்கப்படும்; காயநாடிக ளிலவென மறையறைதலிற் றூலதேகம் நம் வடிவன்றெனத் தள்ளத்தக்கதாம்; இராகாதி தோஷமற்றது புண்ணியபாபமற்றது அதனானே சுகதுக்காதி லேபமற்றது அகாயமுற்றது என மறையறைதலின் லிங்கதேகமும் நம் வடிவன்றெனத் தள்ளத்தக்கதேயாம். ஸ்ரீகிருஷ்ண பகவானனவர் அஸ்வத்தத்தினிடத்தினுந் தந்திருமேனியினும் எங்ஙனஞ் சமமாய்த் தம்மைத் திருவாய்மலர்ந்தருளினரோ அங்ஙனம் யாவன்றன்னைச் சமமா யறிகின்றனனோ அவன் பிரஹ்ம வித்தமனவன். அன்னியவாகங்களிலெங்ஙனம் மமதையையும் அகந்தையையும் ஆற்ற இச்சிக்

கின்றதில்லைபோ அங்ஙனமிவ்வாகத்தினும் ஆற்ற இச்சிக் கத்தக்கதன்றும் என்னை, புத்திசாக்ஷித்தன்மையவிசேஷமா யிருத்தலினென்க. இராகத்வேஷங்கள் நீலாதிரூப சமஸ் காரத்தோடு துல்லிய ஆசிரயமுடையனவாம் பயம் யாதுள தோ அதுவும் ஆண்டையதேயாம் ஆகவே மதியை ஆசிரித்த அம்மூன்றும் ஆத்மாவாற் கிரகிக்கப்படுகின்றன வாதலின் ஞாதாவெக்காலும் சுத்தனும் அபயனுமாம். எத்தேவதை யின் மாட்டெவன் மனம் நிலைபெறுமோ அவனம்மயமாவன், தியானிக்குந் தேவதைக்கும் அன்னியத்தன்மை யிருப்ப தோடு தியானக் கிரியைக்கு ஆண்டு அர்த்தவத்வசம்பவ மிருத்தலினென்க. ஆத்மாவினடையின் நிமித்தம் ஆத்மா வின் கட்டியானுதிக் கிரியைகளின் அபேக்ஷையின்றும் பிரஹ்மத்திற்காத்மத்தன்மை யிருப்பதோடு அதற்குச் சதுர் விதக் கிரியாபல விலக்ஷணத் தன்மை யுண்மையிற் கிரியைக் கனபேக்ஷத்தன்மை யுண்மையினும் மோகமாத்திர விய வதான மிருத்தலினதன் பொருட்டுக் கிரியையி னபேக்ஷை யின்மையினுமென்க. கிரியாசாபேக்ஷமாமேல் அது ஆத்ம வடிவமேயன்றும். மாதிர மதிப்ப ஞப்தியானது ஏக ரசமும், அவிபக்தமும் அஜரமும் அமலமுமாம், சக்ஷுராதி யுபாதிசம்சர்க்கத்தாலது விபரீதமாய் விபாவிக்கப்படுகின் றது யானென்னும் இப்பிரத்தியய மானது ஆத்மாவின் றரும மன்று திருசியத்தன்மை யுண்மையின் கடாதி கடுப்ப. அங் ஙனமே தோஷமயமாயவேறு பிரத்தியயங்களும் அனாத்ம தன்மங்களேயாம் ஆதலின் ஆத்மா அமலமேயாம் சர்வப் பிரத்தியய சாக்ஷித்தன்மை யுண்மையின் அவிகாரியும் சர்வக முமாம் ஆத்மாவாம். காண்போன்விகாரியேல் மதியாதிகண் மதிப்ப அற்ப வித்தாவன். நேத்திராதி வாயிலாய திருஷ்டிக

ளெங்ஙனம் லோபத்தையே செறிகின்றனவோ அங்ஙனங் காண்போன்றன் றிருட்டிலோபத்தைச் செறிகின்றதின்று; அத்திருட்டிக்கு நித்தியத்தன்மையும் "காண்போன் றிருட்டிக்கு விபரிலோபத்தன்மையுளதாதலின்றவிநாசித்தன்மை யுண்மையின்" என்னும் மறையாலறையப்பட்டுளது ஆதலிற் காண்போ னெஞ்ஞான்று மேகரூப திருஷ்டி யியல்பினனே யாவன். 18

பிரஹ்மஞானத்தின் பொருட்டு முமுக்ஷுவானவன் பதார்த்த விவேகஞ் செய்க வெனச் செப்பல். 19-21

பூதங்களின் சங்காதம் யானுயிருக்கின்றனனு அல்லது தங்ஙனமே கரணங்களின் சங்காதம் யானுயிருக்கின்றனனு அல்லது தனித்தனி யானுயிருக்கின்றனனு அல்லது அன்னியதமம் யானுயிருக்கின்றனனு அன்னியதமம் யானுயின் அதுயாது? என விசாரிக்க.

பூதமும் இந்திரியமும் சமஸ்தமாயேனும் வியஸ்தமாயேனும் யானன்றுகின்றேன், கடாதி கடுப்பரூபத் தன்மையுண்மையினானும், குடாராதியுறழக் காரணத் தன்மையுண்மையினானுமென்க. அவற்றினின்றும் ஞாதா அன்னியனென விவேகிக்க. ஆத்மாக்கினிக்கிந்தனம் புந்தியாம் இஃதவித்யா காமகர்மங்களாற்றகிக்கப்பட்டதாய்ச் சுரோத்திராதிவாயில் களால் வெளிப்போந்ததாய்ப் பிரகாசமான மாகின்றது. 21

நனவாதி யவத்தைகளையும் அவற்றின் சான்றுய ஆத்மாவையும் புகலல். 22-35

தக்ஷிணாக்ஷிப் பிரதானமாயவற்றி லெக்காற் புந்தியானது அவித்தாளீய விஷயங்களாற்றீப்யமானமாய் விசேஷமாய்ச் சேஷ்டிக்கின்றதோ அக்காலாத்மாக்கினிதூலவிஷய

போக்தாவாம். ரூபாதி விஷயக்கிரகண சமயத்தில் இராகத்வேஷமியற்றாது இவ்வவிகள் எழுநாவாய வென்பால் ஆகுதி செய்யப்படுகின்றனவென ஸ்மரித்துக்கொண்டியான் நனுத் தோஷங்களால் லேபிக்கப்படமாட்டேன். மானசவில்லத்திலபிவியக்தமாய அவ்வியான் அவித்தையாற் பிரயுக்த கர்மோற் பூத விஷயாகார வாசனையைக்கண்டு கொண்டு தைஜசனென அறிஞரா லறையப்படுவன். அக்கால்யானே சுயஞ் சோதியாய்ச் சான்றாயிருக்கின்றேன். எக்கான்மதியின்கண் விஷயங்களேனும் வாசனைகளேனும் கர்மங்களாலுற்பவிக்கப் படுகின்றனவின்றோ அக்காலாத்மாவை அனன்னியதிருக்காய பிராஞ்ஞனெனவறிக. பொறிமனம் புந்திகளின் எவ்வவத்தைகளுளவோ அவை கர்மோற்பவங்களாம். கதிரவனுற் கடாதிகள் கடுப்பச் சைதன்யத்தாலே பிரகாசிக்கப்படுகின்றன. ஆத்மாவின்கண் ணிங்ஙனமாங்கால், ஆத்மாவின் சுகதுக்கப் பிரதிபாசார்த்தமாய அப்புத்தியைத் தனது சைதன்யாபாசத்தால் அவபாசித்துக் கொண்டாத்மா அவற்றிற்குக் கர்த்தாவென மூடரானே மொழியப்படும். அதனானே யாவற்றையுந்தன் ஹொளியாலொளிர்வித்துக் கொண்டாத்மாவிற்கு முற்றறிவுடைமையும் அங்ஙன மெத்தொழிற்குமேதுவாதலின் ஆத்மாவிற்குச் சர்வகர்த்ருத்வமும் பொருந்துமென்க. இங்ஙனஞ் சோபாதி யாத்மாநுதலப்பட்டது, யாது நிருபாக்யமோ அஃதனுபாதிகமாம் அது நிட்களமும் நிர்க்குணமுஞ் சுத்தமுமாம்; அதை மனதும் வாக்கும் அடைகின்றனவின்றாம். ஆத்மா அசேதனமே யென வேதம்விண்டாரும், சேதனமே யென வேதங்கொண்டாரும் பகர்வர் அவ்வீற்றவருள்ளுஞ் சிலர் ஆத்மா கர்த்தாவெனவும் அகர்த்தாவெனவும் வியாபகமெனவும் அவ்வியாபக மெனவும் பத்

தன்சீவனெனவும் முத்தனன்னிய வீசனெனவும் ஏகமென வும் அநேகமெனவும் சுத்தமெனவும் வேறுவிதமாமெனவும் புகல்வர். குணமின்மையினுனுங் கிரியை யின்மையினுனும் விசேஷணங்களின் கூட்டுறவின்மையினுனும் மனோவிருத் திகளோடு கூடவே வாணியுமடையாமலே திரும்புகின்றன. சர்வமூர்த்தங்களால் யாண்டும் வியோஜிதமாயும் வியாபக மாயும் வியோம மெங்ஙனமாமோ அங்ஙனமே சாமமுடிச் சமயத்திற் சுத்தமாயஆத்மாவைப் பரமாத்மாவாய பிரஹ்ம மெனவுணர்க. திருட்டத்தைவிடுத்து அதன்கண் மிருதியை யும் விடுத்து யாவற்றையும் விழுங்குந் தமத்தையும் விடுக் குக; சவிதாசார்வரத்தை விழுங்கி விளங்குவதை வியப்பச் சருவதிருக்குஞ் சோதியோடுற்றதா யஞ்ஞானத்தை விழுங்கி விளங்கும். ரூபஸ்மிருதி யந்தகார விடயப் பிரத்யயங்கள் எத னது கோசரங்களாமோ அஃதேசமமாயும் எல்லாப் பூதங் களிற் காண்போனுயுஞ் சர்வகமாயுமுள்ள ஆத்மாவாம். ஆத்ம புத்தி மன சக்ஷுவிஷயாலோக சங்கமத்தால் அஞ்ஞானோ பாதி நிபந்தனமாய புத்தியின் பிரத்தியயம் விசித்திரமா யுண்டாகின்றது. 35

## முமுக்ஷுவிற்குக் கர்த்தவ்யோபதேசம். 36-39

சுத்தமும் பரமபதமாய பிரஹ்மமும் சர்வபூதங்களிற்றி தமாய்க் காண்பதுவும் சமமும் சர்வபயங்களையுந் தணந்த னமாய தன்னுத்மாவைப் புத்தியாதிகளினின்றும் பிரித்தறிக. பின்னையுந்தன்னைச் சர்வகமும் சாந்தமும் விமலமும் வியோம மொப்ப விருப்பதும் நிஷ்களமும் நிஷ்கிரியமும் நித்தியமும் துவந்துவங்களினின்று விவர்ஜிதமுமாய பிரஹ்மமெனவுண ர்க. சர்வப்பிரத்தியய சான்றாய ஞானைக வியல்பதாக யாது

றுதலப்பட்டதோ அஃதெத்தகைய தெனவாராய்க; என்னெ லறியத்தக்கதா அல்லதறியத்தகாததா அறியத்தக்கதாமா யினும், ஞானகர்மமா அல்லதில்லையா வெனவாராய்ந்தாத்ம தத்துவத்தையறிக. "அதிருஷ்டம் த்ரஷ்ட்ர விஞ்ஞாதம் அற்பம்" என்பனமுதலிய வேதசாசனத்தாற் பரப்பிரஹ்ம தத்வமானது ஞானகர்மத் தன்மையானே என்றேலேனும் அன்னியயாவராலேனும் அறியத்தக்கதேயன்றாம். 39

## சுயம்பிரகாசத் தன்மையையும் ஞேயத்வா பாவத்தையும் நிகழ்த்தல். 40-54

ஸ்வரூபாவ்யவதானங்களானும் ஞானேலாக ஸ்வபாவத் தன்மையினானும் அன்னிய ஞானபேக்ஷத் தன்மையினும் எஞ்ஞான்று மென்றற் பிரஹ்மதத்வமானது ஞாதமேயாம். இரவியின் வடிவையிலக்குவிப்பான் வேறொளியாற் காரியமில்லாததேபோற் போதத்தின் வடிவைப் பொலிவிப்பான் றற்போதத் தன்னிய போதேச்சையின்றெ மெண்க. எதற்கெது வடிவமாமோ அதற்கன்னியத்தினதபேக்ஷையே யின்று; மேலும் யாதொன்று பிரகாச வடிவமாயுளதாமோ அது பிரகாசாந்தா திருசியமேயன்றாம். பிரகாச வினைத்திற்குப் பிரகாசவடிவ சமாகமத்தால் அபிவ்யக்தியுண்டாம் ஆதலிற் பிரகாசம் அருக்கனது காரியமாமென்னும் வசனம் பொய்யாம் யாது முன்னுளதாதலிலதாய்ப் பின்னெதினின் றுமுளதாமோ, அஃததன் காரியமெனை அங்கீகரிக்கப்படும். இரவியின் வடிவத்தன்மையுண்மையின் ஒளியான துளதாதலிலதா யுளதாவதன்றாம். பிரகாசத்தின் சன்னிதி சத்தாமாத்திரமாங்காற் கடாதியபிவியக்தியின் றரிசனத்தாலாதித்யாதி பிரகாசத்தின் கர்த்தாவெனை வங்கீகரிக்கப்படுவதுபோற்

போதாத்மாவின் மாட்டு மங்கீகரிக்குக. பிலத்தினின்றுங் கட்செவிநிரியாணமாங்காற் பாற்கரன் முயல்வின்றியே பிரகாசிப்பித்துப் பிரகாசகனெனப் பிறங்கப்படுகின்றது போல் அறிவுருவத் தன்மையுண்மையின் ஆத்மா முயல்வின்றியே அறிபொருளை யறிவித்து ஞாதாவென நவிலப்படும். தாகிய சன்னிதியின்கண் உஷ்ணவடிவ அனலுக்குச் சத்தாமாத்திரத் தாற்றாககத் தன்மையுளதாவதுபோல் ஞானவடிவ ஆத்மாவிற்கு ஞேய சன்னிதிமாத்திரத்தால் ஞாதுருத் தன்மையுளதாம். பிலத்தினின்றுங் கிளம்பிய உரகோபாதி யுணரப்படுங்கான் மாத்திர மொளியோன் பிரகாசகனென வுரையாடப்படுவன் அங்ஙனையொப்ப விஷயோபாதி யுணரப்படுங்கான் மாத்திரம் ஆத்மா ஞாதாவென நுதலப்படுமாதலின் ஞாதுருத்வ மௌபசாரிகமெனத் தெற்றெனத் தெரியற்பாற்றும். அறிவுருவ ஆத்மாமுயல்வின்றியும் ஞாதாவென நவிலப்பட்டதுபோற் பிராமகனுய என்றாமேழ்ப்பக்கர்த்தாவெனக் கழறப்படும்; ஆதலினுத்மா சுயம் அசாதாரண வியல்பானே ஞேயமும் அஞ்ஞேயமும் ஞாதாவுமஞ்ஞாதாவும் கர்த்தாவுமகர்த்தாவுமன்று மென்றுணர்க. விதிதாவிதிதங்களாய காரியகாரணங்களினின்றும் வேறாய ஆத்மதத்துவம் பிரஹ்மமென்னும் வேதசாசனத்தாற் காரியகாரண தருமவிலக்ஷண வியல்பதே யிவ்வாத்மா வெனத்துணியப்பெறும்; பெறவே ஆத்மாவின் மாட்டறிவோனுந்தன்மை நிகரப் பந்த மோக்ஷாதிபாவங்களுங்கற்பிதங்களாம். பிரபாரூபா விசேஷத்தாலிரவியினிடத்திரவும் பகலும் இலாதவே போற் போதரூபா விசேஷத்தாலாத்மாவின்பாற் போதா போதமின்றென்றுணர்க. இது காறு மியம்பிய ஹானோபாதான வர்ஜிதமாய பிரஹ்ம தத்துவத்தைப் பகர்ந்த பதார்த்த சோதனப் பிரகாரமாய்

யாவனுணர்வனே அவன் உண்மையாயுற்பவிக்கவே உற்பவி யான். ஜனனமரணப் பிரவாகத்திற் பதிதனுய எவனும் இப் பிரவாகத்தினின்றும் ஞானத்தின்வேறுய உபாயத்தாற்றன் னைக் கரையேற்ற வாற்றலுடையானல்லனேயல்லன். என்னை? "பராவரமாய அந்தப் பிரஹ்மத்தைச் சாக்ஷாத்கரிக்குங்கால் இச்சீவன்முத்தன்றன் இருதயக்கிரந்தி பேதிக்கின்றது எல் லாவையங்களுஞ் சேதிக்கப்படுகின்றன கர்மங்கணசிக்கின் றன" எனத் திருமறை முரசறைதலினென்க. தேகத்வய சம் பந்தசூனியமாய பிரத்யக்தத்வம் அம்பரோபமமாய பிரஹ்ம மெனச் சுருதியுக்திகளால் நன்காராய்ந்து நிலைநிறுத்தப்பெ ற்றவிதன்கண் ணத்தியந்தம் எனது யானென்னு மிதனை நூக் கி யெம்மனுஷ்யன் நிச்சிதமதியுடையனுவனே அவன் வீட டைவனென்பதிலையமே யில்லை. 54

பதினைந்தாவது வேறு வேருகாப் பிரகாணம் முற்றும்.

---

## பதினருவது பார்த்திவப் பிரகரணம்.

### தூலதேகாத்மவாதிமத நிராகரணம். 1

காயத்திற் கடினதாது பிருதிவிமயம் நெகிழ்வோ அம் மயம் எனவறிஞரா லறியப்படும்; பாகஞ் சேஷ்டை யவகா சம் என்பன வன்னிவாய்வம்பரோற்பவங்களாம். 1

### இந்திரியாத்மவாதிமத நிராகரணம். 2-3

கிராணுதி இந்திரியங்களும் அவற்றின் விடயங்களும் முறையாய்ப் பிருதிவியாதிகளின் குணங்களாம். ரூபாலோ கம்போற் சஜாதீயார்த்த மிந்திரியமென விஷ்டமாமென்க. இக்கிராணுதிகள் ஞானகரணங்களெனவும் வாக்குப் பாணி

யாதிகள் வசனாதிகளின் பொருட்டாமெனவும் பெரியார் பகர்வர்; அவற்றின் விகற்பத்தின்பொருட்டுட் டிதமாய மனம் பதினொன்றுவதாய்ப் பவிக்கும். 3

## மதியாத்ம வாதிமதநிராகரணம். 4-14

மதி, நிச்சயம்பயப்பதோர் கரணமாம் சர்வார்த்தானுபாவினியாய அப்புத்தியைச் சந்ததம் ஆத்மா தன் வடிவ வொளியா லொளிர்விப்பதாய் ஞாதாவென நவிலப்படும். வியஞ்சகமாய ஆலோகமானது வியங்கியமாய கடாதிகளின் ஆகாரத்தை யடைந்ததாய் வியதிகீர்ணமாயினும் அசங்கீர்ணமே யாவதுபோ லறிவுருவாத்மாவுஞ் சந்ததம் பிரத்தியயங்களோடு கூடியுங் கூடாததேயாம். திதமாய தீபமானது முயல்வின்றிப் பிராப்தமாய யாவற்றையு மொளிர்விப்பதை யொப்பப் பிராப்தமாய ஒலியாதியாகார விருத்திகளை யறிவுருவாத்மாக் காண்கின்றதென் றுணர்க. சுகாதிகள் சரீராதி சங்காதத்தி லாத்மத்தன்மையானே பிரசிருத்தமானதும் நித்திய ஆத்மச் சோதியாற் றீப்தமானதுமாய மதியைத் துன்புறுத்துகின்றன. சிரோதுக்காதியாற் றன்னைத் துக்கியாயிருக்கின்றேன் யானெனக் காண்கின்றனன். திருசியமாய துக்கியினின்றும் காண்போ னன்னியனேயாவன்; காண்போனுந்தன்மை யுண்மையானிவன் றுக்கியேயன்று. துக்காகாரப் பரிணாமவானாய அந்தக்கரணத்தில் யானென்னு மபிமானத்தாற் றுக்கியா மேலாகுக துக்காகாரப் பரிணாமவான் றரிசனத்தாற் றுக்கியாதல் யாங்ஙனமென்க. அங்காதிகளா லாகத்திலுளதாம் வேதனையின் சான்றாயவவன் வேதனாவானேயல்லன். அற்றேல், நேத்திரத்திற் காதரிசவழித்தாய்க் கர்மத்தன்மையும் ஆனனவழித்தாய்க் கர்த்ருத்

தன்மையும் காணன்மான வாத்மாவிற்குங் கர்மகர்த்ருத்வங் கூடுமெனின்? அற்றன்று, அஃதநேககாரமே யாதலினு னும் சேர்க்கைத் திரவிய மாதலினுனுமென்க. ஆதலிற் காண்போனுந்தன்மை யுண்மையின் ஆத்மா கர்மத்தன்மை யை யடையாதென வுணர்க. அறிவு முயல்வு முதலிய அநேகத்தன்மை யுண்மையின் ஆத்மாவிற்குங் கிராகியகிரா ககத் தன்மை யிஷ்டமாமெனின் அஃதொவ்வாததேயாம் ஞானைக ஸ்வபாவத்தன்மை யுண்மையின் ஒளியொப்ப அதற் குங் கர்மத்வமின்றாம்.

சுடருக்குச் சுடர்விக்கு மியல்பதாந்தன்மை யிருப்பினுஞ் சுடராந்தன்னைச் சுடர்வித்தலைக் கண்டிலாததேபோல் அம்ச பேத கற்பனை கூடினும் அறிவுருவாத்மா சைதன்ய ஸ்வபா வாவிசேஷத்தா லாத்மாவை விஷயஞ் செய்கின்றதே யில்லை எப்பதார்த்தம் எத்தர்மவானுமோ அத்தர்மத்திற்கே யப்ப தார்த்தம் விஷயமாந் தன்மையை மருவுவதில்லை; அழற்றன் னையழற்றலுங் கிளர்த்தலு மின்றன்றோ ஆங்கே ஆத்மாவுந் தன்னைத்தான் பிரகாசியாதென் றுணர்க. புத்தியின்வடிவத் தின்கிரகந்தியாய தன்னாலே கூடுமென்னும் பௌத்தபக்ஷ முங் கூறியவாற்று னிராகரிக்கப்பட்டதாம்; அம்சமும் வழங் கியவண்ணம் சமத்தன்மை யுண்மையினுனும் நிர்ப்பேதத்தன் மை யுண்மையினுனும் பொருந்தாதென் றுணர்க. 14

## சூனியாத்மவாதி மதநிராகரணம். 15-21

இங்ஙனஞ் சூனியத் தன்மையும் பொருந்தாததேயாம் ஆதலிற்கடங்கடுப்ப வேறுற்புத்தியின் கிராகியத்வங்கூடும்; மேலுமிப்புத்தியின் விகற்பத்தின் முன்னமே அதன் சாக்ஷி

சித்தித்திருத்தலினென்க. எது விகற்பத்தின் முன்னுளதா மோ விகற்போற்பத்தி ஹேதுத்தன்மையுண்மையின் எது எதற்கே காரணமாமோ அஃதவிகற்பமாயே யிருக்கிறது. சம்சாரத்தின் கற்பனாமூலமும் நியாமகமுமாய அஞ்ஞான த்தை விடுத்துத் தன்னைச் சந்ததம் பூன்ற முக்தவபயப் பிர ஹ்மமாக வனுசந்திக்குக, சாக்கிர சொப்பனங்கள் சம்சார மாம் அவற்றின் பீஜஞ் சுழுப்தியெனப் பெயரிய தமோமய மாம்; ஒன்றன்க ணொன்றின்மையினாலும் திருசியத் தன்மை யுண்மையினாலும் இம்மூன்றையு மின்றெனத் தியாகிக்க. தேகபுத்திமன சக்ஷு ஆலோகார்த்தாதி சங்காதத்தாற் கிரி யைகளின் சமுற்பவத்தால் ஆத்மாவிற்குக் கிரியையென மய லுளதாகின்றது. கோளகத்தானத்தி லெங்கிமீலனோன்மீல னங்களுளவாமோ அவை வாயுவின்காரியங்களே யன்றிப் பிரகாசத் தன்மையுண்மையின் நேத்திரத்தனவன்று. இங்ங னம் பிரகாசத் தன்மையுண்மையினானே மனத்தின்மாட்டும் புத்தியினாடுஞ் சுயஞ்சலனாசலனங்களிலவாம். சங்கற்ப அத்தியவசாயங்கண் முறையே மனோபுத்திகட்காம், இத ரேதர தர்மத் தன்மையின்றுதலின் யாவு மாத்மாவின்கட் கற்பிதமாம். 21

## திகம்பரமத நிராகரணம். 22

பொறிகட்குத் தேகாவயவ கோளக ஸ்தானவச் சேத த்தானுபலம்பமுண்டாம்: உண்டாகவே பொறியோடு கூடிய புற்கலதாதாத்மியத்தைப் புத்தியடையும் அப்புத்தியைத் துலக்கிக்கொண்டறிவுருவாத்மா தேகபரிணாமாவச்சின்னம் போன்மயலானுணரப்படும். 22

## சாக்கியமத நிராகரணம். 23-29

ஞானமும் ஞேயமும் க்ஷணிகமெனத் துணியப்பெறும், ஸ்வாசபங்குரமும் வஸ்துமாத்திரமும் நைரந்தர்யமா யுற்பத்யமானமுமாம்; தீபம்நிகர்ப்பச் சாதிருசியத்தா லஃதே யிஃதென்னும் மதியுளதாம், அதன் சாந்தி புருஷார்த்தமாம். ஸ்வாகார அன்யாவபாச ரூபாதி பாகியவஸ்துக்கள் எப்பௌத்தர்கண் மதத்திலுளவோ, எவர்மதத்தில் ஞானத்தி னன்னியமாய பாகிய ரூபாதியிலவோ, எவர்மதத்திற் சூனியமே யாவுமாமோ, அவற்றுட் பாகியபதார்த்த சத்வவாதத்தி னசங்கதி பகரப்படும். ஞப்திக்கேபாகிய வஸ்து வாகாரத் வப் பிரசங்கம் வருதலின் முதலது கூடாததேயாம். அனுபவிக்கும் க்ஷணிகத்தன்மை யுண்மையின் சந்ததம் ஸ்மிருதியின் அபாவமாம், ஆதாரத்திற் கசத்வ மிருத்தலினானும் ஸ்மிருதியி னபாவமாம். துல்லியத்தன்மையி னிமித்த மின்மையிற்பிரத்தியபிஞ்ஞையும் பொருந்தாததேயாம். நிலைபெற்ற காண்போனுண்டாயின் க்ஷணிகத்துவத்தி ஞனியுண்டாம் அஃதுன்னு லங்கீகரிக்கத்தக்க தன்றன்றே. சாந்திக்கு முயல்வின்றிச் சித்திக்குந்தன்மை யுண்மையினானும் ஒன்றொன்றிற் சமாப்தத்தன்மை யுண்மையினானும் சாந்திக் கன்னியா னபேக்ஷத்வஞ் சித்தமாம். ஆதலி னதற்குச் சாதனவிதானம் பயனில் கூற்றுமென்க. அத்தியந்தம் பின்னமாய கீரத்தின் கட்டதியினபேக்ஷ யேற்பாசந்தானத்தினுந்ததியினபேக்ஷ ஸ்வீகரிக்கத்தக்கதேயாம்; ஆகவே மணன்முதலியவற்றினின்றுந் ததியுண்டாருக வென்னு மதிப்பிரசங்கமுண்டாம். யாவருக்கும் வாஞ்சிதகாரிய காரண பாவமாய்த்திதமான பாற்றயிராதிகளில் க்ஷணிகமிருப்பினும் யாண்டோ

சிறிது சீதத்தில் யாதோ சிறிது தகியின் வேட்கையே யன்றி யாண்டும் அஃதின்றென்னும் உலகப்பிரசித்தியால் அதிப்பிரசங்கமன்றெனின்? அற்றன்று, அங்ஙனமாயினும் க்ஷணிகபக்ஷத்தி லன்னியானபேக்ஷைத் தன்மையே துணியப்பெற்றதாமென்க. சமசமயசமுற் பூதங்களாய்ப் பரஸ்பரம் சம்பந்திகளாயிராநின்ற பர்ஜன்யாங்குரங்கள் யாவையோ அவற்று ளெவ்வங்குரம் பர்ஜன்யயோகத்தால் அதிசயத்தை யடையப்பெறுமோ அஃதன்னிய உபகாரியையவாவுவான்றகுதியதாம்; க்ஷணிகமன்றும், 29

சூனியமத நிராகரணத்தின் பொருட்டுத் தன்மத சாமஞ்ஜஸ்யஞ் சாற்றல். 30–48

யாண்டுக் கர்த்ருத்வாதி யத்தியாசம்மித்தையாய்த் தோற்றுறுமோ ஆண்டையதன்நாச மாத்மவித்தையாலாமென்பதெங்கள் சம்மதமாம்.

சர்வநாசமே யெவனுக்கு மோக்ஷமாமோ அவனுடைய மதத்திற் சர்வநாசமாங்கால் யாவனுக்குப் பலனும் நீ செப்புதி. சுயமுண்டென்பது யாவருக்கும் அவிவாதமேயாம்; அது ஞானம் அல்லதாத்மா அல்லது வேறாய சூனியமே யென விகற்பிக்கப்படும்; படவேயதற்குச் சூனியத்வம் பிராமாணிகமன் றென்பதொருதலையாம்; என்னை? பாவாபாவங்களை யுணருந்தன்மை யுண்மையினென்க. எதாற் சூனிய மறியப்படுமோ அதுசத்தாம், அஃதங்ஙனம் பவியாதெனின், உலகத்தின் பாவாபாவ அனபிஞ்ஞத்வமாம், ஆருகவெனின், அஃதங்கீகரிக்கத் தக்கதன்று மென்க. சாக்ஷிஸ்வரூபமுஞ் சகத்தும், சத்து அசத்து சதசத்ரூபம் எனவும் எவ்விகற்ப

விவாத மூளதாமோ அதன் முன்னமேயாது அங்கீகரிக்கப்பட்டுளதோ சமத்தன்மையுண்மையின் அஃதத்வைதம் நித்தியம் விகற்பத்தினின்று மன்னியமாம். விகற்ப வடிவமாயுண்டாந் தன்மையுண்மையிற் சொப்பன திருசிய மொப்பத் துவிதத்திற்கிருப்பின்மை யங்கீகரிக்கத்தக்கதாம். சத சத்வாதி விகற்பனையின் முன்னமிருப்பின்மையானுமென்க. "வாசாரம்பண" சுருதியாலும் விகாரங்கட் கபாவத்தன்மையுளதாம் "மிருத்புவினின்று மவன் மிருத்யுவை" என்பது முதலிய சுருதியானும்; "என்மாயை" என்னும் ஸ்மிருதியானுங் காண்க. துவிதத்திற்கநித்தத்தன்மையுண்மையானே ஆத்மாவிற்கு விசுத்தியுளதாம், அதுயாதினுல் விகற்பத்தினின்றும் விலக்ஷணமோ அதனுனே கொள்ளத்தள்ளத்தக்கதன்றென்க. மேலும் அன்னியங்களாலகற்பிதமாம் மார்த்தாண்டன் மாட்டுச் சோதி சுபாவத்தா லப்பிரகாச மில்லாததேபோல், நித்திய போதஸ்வரூபத் தன்மையுண்மையின் அஞ்ஞானமான்மாவின் மாட்டில்லை. அங்ஙனமே, அவிக்கிரியாரூபத் தன்மையுண்மையின் ஆத்மாவிற் கவஸ்தாந்தரமில்லை; அவஸ்தாந்தர வத்வமாமே விதற்கு நாசம் ஐயமின்றியாம். யாவன் மதத்தில் மோக்ஷம் அவஸ்தாந்தரமாமோ அவன்மதத்தில் மோக்ஷம் கிருதகமேயாம் ஆதலினஃதநித்தியமாம். பிரஹ்மத்தின் சம்யோகமேனும், பிரகிருதியின் வியோகமேனும் மோக்ஷமென்பது எவ்வாற்றானும் பொருந்தாதென்க; என்னை? சம்யோகத்திற்கோ அநித்தியத் தன்மையுண்மையின் அங்ஙனமேவியோகத்திற்குமாதலினென்க கமனுகமனங்களும் மோக்ஷமென்னல் பொருந்தாததேயாம். ஸ்வரூபமோ நசிப்பதேயின்று என்னை? ஸ்வரூபத்திற் கநிமித்தத் தன்மையுண்மையினென்க

அன்னியங்களோ சநிமித்தங்களாம், ஸ்வரூபமென்பது யாது தன்னாலேனும் அன்னியத்தாலேனும் உபார்ஜிக்கப் படவாவது தியாகிக்கப்படவாவது கூடாதோ அஃதாம். அன்னியமாயும் யாவற்றிற்கும் வடிவமாயு மிருத்தலினாலும் விஷயத்தன்மையின்மையினாலும் வேற்றுமை யுண்மையினாலும் ஆத்மா தள்ளக்கொள்ளத்தகாததாம் ஆதலினித்தியமாம். யாவற்றிற்கும் ஆத்மார்த்தத் தன்மையுண்மையின் ஆத்மாநித்தியமேயாம் கேவலமுமாம் ஆதலின் முத்திவித்தானவன் சாதனத்தோடு கூடிய சர்வகிரியைகளையும் தியாகிக்க. "ஆத்மலாபம் மேலான லாபம்" என்னும் ஸ்மிருதியுபபத்திகளுள; அகங்காராதிகளின் மாட்டபேதமாயாம் ஆத்மஸ்புரணவடிவ அன்யாத்மலாபமான தலாபமாம் ஆதலினனாத்மாபிமானங்களைத் தியாகிக்க. குணங்களின் சமபாவத்தின் ப்ரம்சமானது பொருந்தாததாம் அக்காலவித்யாதிகட்குப் பிரசுப்தத்தன்மையிருத்தலி னேதுத்தன்மைகூடா. அபசித்தாந்தப் பிரசங்கம் வருதலின் அன்னிய பரமேஸ்வரனு மேதுவாக வோத லொண்ணாது. குணங்கட்கிதரேதர ஹேதுத்வமாமேற் சததம் பிரவிருத்தியாம் அல்லதின்றாம். பிரவிருத்திகட்கு நியாமகன் குணங்களினாலேனும் ஆத்மாவின் பாலேனும் சம்பவியாததாற் சததம் பிரவிருத்தி யேனும் அப்பிரவிருத்தியேனுமாம். பிரதானத்திற்குப் புருஷார்த்தத்வமாங்காற் பத்தமுத்தர்கட்கு விசேஷம் பொருந்தாது. அர்த்தார்த்திகளாய சேஷசேஷிகட்கு உபகார்ய வுபகாரகபாவசம்பந்தமுஞ்சாராது; அசங்க அறிஞன் அர்த்தியாதலனாகாது சடப்பிரதான மர்த்தியாதலுங் கூடாதாம். புருஷனுக்கவிகாரத்தன்மை யுண்மையிற் பிரதானத்திற்குப் பரார்த்தத்தன்மை பற்றாது, விகாரமெனக் கொள்ளினும்

பொருந்தாதாதலிற் சாங்கியனூலின் கண்ணும் பும்புத்தி மூலத்வமிருமென்க. 48

பிரதான புருஷர்களின் சம்பந்தாபாவப் பிரபஞ்சனம். 49-50

பிரகிருதிக்கும் புருஷனுக்கும் பரஸ்பரம் சம்பந்தங்கூடாமையாலும் பிரதானத்திற்குப் புருஷார்த்தத்வம் யுக்தி சூனியமாம் சடத்தன்மையுண்மையினென்க. புருஷனிடத்துக்கிரியோற்பத்தியுளதாமேல் விகாரித்வமாம். ஞானமே கிரியையெனின் முன்போல் ஜன்னியமாயின் விகாரியாதலினாலும் அஜன்னியமாயிற் பிரதானத்தின் சுவாமியாதல் கூடாமையாலும் பொருந்தாதென்க. பிரதானத்தின் வியாபாரம் நிர்நிமித்தமாயின் அநிர்மோக்ஷப் பிரசங்கமாம். 50

வைசேஷிகமதப் பிரக்கிரியாதூஷணம். 51-57

எங்ஙனமேகாஸ்ரயத் தன்மையுண்மையின் உஷ்ணத்வமானது அனலின்கட் டிதமாய வொளியாலொளிர்வதின் றேமோ அங்ஙனமே கணாதிநெறியினர்மதத்தே சுகாதிகள் ஆத்மாவின்சட் டிதமான ஞானத்தால் ஏகாசிரயத் தன்மையுண்மையின் அக்கிராகியங்களாம். சுகவிஞ்ஞானங்கட்கு யுகபற்சமவேதத்வமும் பொருந்தாது, சமவாயமென்பதும் பொருந்தாது மனோயோக ஏகவேதுத்தன்மையுண்மையின் சுகத்தின் கிராகியத்வம் பொருந்ாதென்க. சம்யோக விபாகங்களோ பொருந்தவே பொருந்தா. அங்ஙனமேயன்னிய குணங்கட்கும் பின்னத்தன்மையுண்மையின் யுகபற்சன்ய மங்கீகரிக்கப்படுகின்றதின்றென்றுணர்க. அற்றேற் குணங்களின் சமவேதத்வம் ஞானமெனின்? அற்றன்று, விசேஷணத் தன்மையுண்மையின் ஞானத்தால் விசேஷியத்தன்மையுண்மையானே ஞானப்யத்வம் சுகாதிகட்குச் சுவீகரிக்கத்தக்கதாம். சுக

மென்றுணரப்பட்டதாமென விவ்வண்ணமுண்டாம் ஸ்மி ருதியினுலுஞ் சுகாதிகள் ஞாணப்யமென வுணர்தற்பாலதாம். நின்மதத்தில் யாவும் அஞ்ஞாணத்மகத் தன்மையுடையதாயி ருத்தலினென்க. ஆத்மாவிற்கு விகாரித்தன்மைமநும்மதத் தின்மையின் சுகாதிகட்காத்மதர்மத் தன்மை சம்பவியாது.

பேதமுண்மையின் விவஸ்தையும் பொருந்தாது பேத மின்மையின் ஆத்மாந்தரத்திற்கேனும் மனத்திற்கேனுஞ் சுகாதிகளெங்ஙன் குணங்களாகா. ஞானம் ஞேயத்தன்மையை யடையுமாயின் அஞ்ஞான்றபரிகார்ய ஞானமாலையுண்டாம் அநேககண விலம்பத்தாலுண்டாமுத்தரஞானம் பூர்வஞான த்தை யொளிர்வித்தல்தானெங்ஙனமமையு மென்க. மேலும் ஏகசம்யோகத்தால் ஏககாலத்தவ்விரண்டுமுற்பத்தியா மென் றங்கீகரிக்கிலோ, அச்சம்யோகத்தானே யஞ்ஞான்றே மற் றைய ஞானங்கட்கும் உற்பத்தி யங்கீகரிக்கத்தக்கதன்றே வாம். ஆத்மாவிற் கனவஸ்தாந்தரத் தன்மையுண்மையின் ஆத்மாவின்கட் பந்த முத்திகளின்றெனவுணர்க. அசங்கத் தன்மையுண்மையின் அசுத்தியுமின்று "அசங்கனே"யென மறையறை தலினென்க. 57

பந்தத்திற் கஞ்ஞாணத்மகத்தன்மையைக் கூறல். 58-61

மனோவாக்ககம்யத்வம், அத்விதீயத்வம், நிர்விசேஷத் வம் முதலிய ஏதுக்களால் ஆத்மா நித்தியசுத்தமேயாம். "லேபிக்கப்படமாட்டா" தென்னுஞ் சுருதியாலு முணர்க. இங்ஙன மாத்மா நித்தியசுத்தமாமேல் எவ்வாற்றானும் பந் தமின்மையின் முத்தியு மின்றாமன்றே; அங்ஙனமாகவே மோக்ஷோபாயநூற்கள் பயனில் கூற்றைமருவுமே யெனின்? அற்றன்று புத்தியின் மயலைப் பந்தமெனவும் அம்மயலொழி

நலை மோக்கமெனவுங் கொள்ளப்படுதலினென்க. அஃதியா தோவெனின் முற்பகர்ந்த அஞ்ஞானமே யன்றி வேறன்று மென்றுணர்க. போதாத்மச் சோதியாற் பிரகாசிக்கப்பட்ட புத்தியானது அன்னியபோத்தாவின்றெனத் தன்பாற்போ தத்தைப் போத்தாவென நினைகின்றது; அவ்விம்மயற் புத் தியின்கண்ணதே போதத்திற் காத்மஸ்வரூபத்தன்மை யுண் மையின் நித்தியப்புத்தியின் கண்ணஃத விவேகத்தா லுபசரிக் கப்படுகின்றது. அறுதியாய அவிவேகமும் இச்சம்சாரமே யன்றி வேறென் றங்கீகரிக்கத்தக்கதன்றுமென்க. 61

## மோக்ஷஸ்வரூபம். 62-67

அதன் நாசமே மோக்ஷமாம். வேறன்று, பொருந்தா மையின்; யாவர் மதத்தில் வஸ்து வந்தரவாபத்தியே மோக்ஷ மென அங்கீகரிக்கப்பட்டுளதோ அவர்களால் ஆத்மநாசமே மோக்ஷமென வங்கீகரிக்கப்பட்டதாம். ஆத்மாவிற் கவிகாரித் தன்மையுண்மையின் இங்ஙன் அவஸ்தாந்தரமும் பொருந் தாததே விகாரியாமென விளம்பிறெ சாவயவத்தன்மை சாரும்; அதனாற் குடாதிநிகர்ப்ப நிதனமாம். ஆதலிற் பந் தமுத்திகண் மயன்மாத்திர மென்பதே சுருதியின் றுணிபொ ருளாம் அன்னிய சாங்கிய காணத பௌத்தர்களின் விசார விருத்தமாய பந்தமுத்திகளின் கற்பனைகளும் அவற்றின் சாதன கற்பனைகளும் நூலூகவிகீனத்தன்மையை யுடைத் தாயிருத்தலின் ஒருக்காலும் ஆதரிக்கத்தக்கனவன்றும். என் னை ? அவற்றிற்கு நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காக வும் தோஷங்கள் நம்மனோரால் நுதலக் கூடுமாதலினென்க. மேலும் "வேறுவேறாய் வேற்றோரா லியற்றிய வேதவிருத்த வேறுவேறாய சாஸ்திரங்கள் யாவையோ" என்பதனால், நிங்

தைமொழி பொருந்தலினும் ஆதரிக்கத்தக்க தன்றுமென் றுணர்க. ஆதலி னன்னிய சாஸ்திரோக்திகளை விடுத்து அனுர் ஜவம் யாவும் விடுத்து ஸ்ரீ வியாசபகவானுக் கபிமதமாய வே தாந்த தத்துவார்த்தத்தின் கண்ணே சிரத்தாபக்தியோடும் மதிமான்றிட மதியைச் செய்துகொள்க. 67

## பிறர்மத நிராகரணத்தைத் தோகுத்துத் தன்மதத்தை முடிபுசெய்தல். 68-74

இந்தப்பிரகாரம் பேதவாத கற்பனைகளும் நிராத்மவாத கற்பனைகளும் யுக்திகளால் நிராகரிக்கப்பட்டன; யாதின் பொருட்டோவெனின்? முமுக்ஷுக்கள்பரசாஸ்திரங்களின் பிரா மாணிகத்வ சங்காரகிதர்களாய் மறைமுடியமறையும் ஞானமார் க்கத்தில் நிலைபெற்றவராகுக வென்பதின் பொருட்டேயாம். ஸ்வசாக்ஷிகமாயும் ஞானமயமாயும் அத்தியந்த நிர்மலமாயும் விகற்பங்களினின்றும் விபரீதமாயும் அகண்டவஸ்து மாத்திர ஆகாரமாயும் நன்றாகவடைந்து துணியப் பெறுவனேல், அஞ் ஞான வதன்காரிய சம்பந்தரகிதனாய்ச் சாஸ்வதமாய அகண் டானந்தானுபவ ஸ்வரூபாவிர்ப் பாவத்தைப் பெறுவன். இஃ திரகசியமுஞ் சர்வோத்தமமும் பரமகதிவடிவுமாம். இதனை நன்றாகத் திடஞ்செய்து இந்திரிய பகிர்முகதோடமும் பாண் டித்யாதி யபிமானதி தோடமும் இல்லாத அதிகாரிகளாற் சர்வசமப் பிரஹ்மாத்மதத்துவத்தின்கண் ணிஷ்டையைச் சந் ததஞ் சாதிக்கத்தக்கது. யாவனொருவன்றனக் கன்னியத்தின் கண் மதிசெய்வனோ அவன்றத்துவ திருஷ்டியன்று. அநேக ஜன்மாந்தர சஞ்சிதங்களாய அஞ்ஞான நிமித்த பாதகங்களி னின்றும் நரன்விடுபடுகின்றான். பரமபாவனமாய இஃதையு ணர்ந்து அம்பரம் போலீண்டுக்கர்மங்களால் லேபிக்கப்படமா

ட்டான். பிரசாந்த சித்தனும் ஜிதேந்திரியனும் சர்வதோஷ மற்றவனும் நானுதலிய நெறியே புரிபவனும் வித்யாவினயார் ஜவாதிகுணயுக்தனும் நெடுங்காலம் நிரந்தரம் தேசிகர் திருவுள்ளங் குளிரச் சேவைசெய்து கொண்டிருப்பவனுமாய முமுக்ஷுவின் பொருட்டு இவ்வான்ம ஞானந் தேசிகரா லுபதேசிக்கத்தக்கதாம். பரன் காயத்திற் பரனுக்கபிமான மில்லாதது போற்றே காதிரிக்த ஆத்மதத்துவத்தை நோக்கியும் அதனை யறையு மருமறை முடிபுகளை நோக்கியும் அபிமானமற்று இவ்விஞ்ஞானத்தை நன்கு பெற்றவனுய் அஞ்ஞான்றே அஞ்ஞான மதன்காரிய சமஸ்காரமற்றுப் பரமானந்தானுபவ பிரஹ்மாத்ம ஸ்வரூபனுய்ப்பவிக்குக. ஆத்மதத்துவஞானத்தினும் மிக்கதிகலாபம் யாண்டும் யாதுமின்றும். அந்தலாபமானது இந்தவேதாந்த வாக்கியத்தாலே யுளதாகின்றது அன்னிய எந்நூலானு மாகாதாதலின் முயல்வாற் சிடனைப் பரீக்ஷியாது ஆத்மதத்துவ ஞானத்தை யருளாதொழிக இது இந்திரனுடைய ராஜ்யத்தினுமதிகமாம். 74

பதினாறாவது பார்த்திவப் பிரகரணம் முற்றும்.

---

## பதினேழாவது நன்மதிப் பிரகரணம்.

### குருதெய்வவணக்கம். 1-3

ஆத்மாஞேயமும், அன்னியமின்மையின் ஆத்மாஞேயத்வ தர்மரகிதமும் சாமானியமாய்ச் சர்வத்தையு முணர்வதும் விசேஷமாகச் சர்வத்தையு மறிவதுஞ் சுத்தமுமாம் அவ்வாறுய ஞேயாத்மாவின் பொருட்டு நமஸ்கரிக்கின்றேன். பதவாக்கியப் பிரமாணங்களை யறிந்தவர்களும் சர்வார்த்தப் பிரகாசக தீப பூதமானவர்களு மாய எத்தேசிகேந்திரர்களான்

மறையின் மாட்டொழிந்துள்ள பிரஹ்மம் பிரகாசிக்கப்பட்டதோ அவர்களுடைய பாததாமரைகளை யானனவரதம் வணங்குகின்றேன். எவருடைய வாக்கருண கிரணத்தால் அஞ்ஞானகல்மஷமாயது நன்கு வீழ்த்தப்பட்டு நன்கு நசிப்பிக்கப்பட்டதோ அத்தேசிகேந்திரரை வணங்கிப் பிரஹ்ம வித்தையிற் பெருந்துணிவுளதாவான் வேண்டும் நியாய விசேஷத்தை விளம்புவாம். 3

ஆத்மலாபத்தின் மேன்மைத்தன்மையை மிழற்றல் 4-9

யாதின்பொருட்டு வேதவசனங்களும் ஸ்மிருதி வசனங்களுமாமோ, மேலும் யாதின்பொருட்டுச் சுருதி ஸ்மிருதி விகிதக் கிரியைகளாமோ, அவ்வாறுய ஆத்மலாபத்தினும் வேறு மேலாய லாபம் யாதொன்றுமின்று. யாதொருலாபமின்பத்தின்பொருட் டிட்டமாமோ அதுவும் ஆத்ம சுகார்த்தமே யென்பது கண்கூடேயாம். ஆபினு மது விபரியயமாயுங் காணப்படுதலின் ஆத்மலாபம் மேலானதென்று பிரஹ்மவித்துக்களால் நித்தியத்தன்மை யுண்மையின் நிகழ்த்தப்பட்டது ஸ்வயம் லப்த சுபாவத்தன்மை யுண்மையின் ஆத்மாவின் லாபம் அன்னிய நிமித்தத்ததன்று. யாதொருலாபம் அன்னிய அபேக்ஷையை யுடையதோ அஃதன்னிய திருஷ்டி சமுற்பவமாம். அன்னியதிருஷ்டியு மவித்தையாம் அதனழிவு வீடென விளம்பப்படும். அஃதும் விரோதித்தன்மை யுண்மையின் ஞானத்தாலேகூடும்; அவிரோதித்தன்மை யுண்மையின் கர்மத்தாற் கூடாதென்க. அவித்யாகாமகாரண கர்மகாரியமாயதநித்தியமேயாம். ஈண்டு ஞானத்தினடைவில் வேதமே பிரமாணமென வேதவித்துக்களால் விளம்பப்பட்டுளது ஞானமாய முக்கியபலப் பிரதிபாத்தியத் தன்மை

புன்மையின் அவ்வேதத்தை ஏகவாக்கியமாக வாக்கியப் பிரமாண வித்தா லுணரப்படும். ஞானத்தா லாத்மாவி னேகத்வமே ஞேயமாம், ஞானப்பிரகாரமும் வாக்கியார்த்தப் பிரதிபத்தியாலாமென்க. 9

## ஆத்மாவிற்கும் பிரஹ்மத்திற்கும் ஏகத்தன்மையையியம்பல். 10-21

வாச்சியபேதத்தால் வாசக பேதங்கற்பிக்கப்படும் வாச்சியமும் அவ்வாசகத்தாலேயாம் ஆகவே அன்னியோன்னிய ஆசிரயம்வரும். அற்றேல், "திரயமாய இந்நாம ரூபகர்ம" மென்னுந் திருமறையாலாத்மாவிற் கன்னியரூபமும் நாமமும் கர்மமும் புகலப்படுதலின் ஏகத்வம் வேதார்த்தமன்றெனின்? நன்று சொன்னுய், இம்மூன்றும் அன்னியோன்னியத் தாற் கற்பிதமாதலி னசத்தேயாமன்றோ!. ஒலியாற்கேட்ட வர்ணமாய இந்திராதி ரூபவிசேஷ சகஸ்ராக்ஷவஜ்ரபாகுத்வாதிகள் புத்தியானிராகரிக்கத் தக்கனவாம், பாகியகுட்டியாதிகளிற் சித்திர வடிவமா யமைத்திருப்பது கற்பிதமாவதே போலுமென்க. பித்தியாதிகளிற் காணப்பட்டதேவதாவடிவமும், அதுபோற் சமஸ்காரம் புந்திக்குவந்து சப்தவ்யபதேசத்தின் பொருட்டாகின்றது அஃதொப்ப இவ்வெல்லாவுலகும் மயன் மதியால் விகற்பிக்கப்பட்டதாம். இவ்வியாவுங்கற்பிதமாமே லசத்துளதென்றன்றோ பொருந்துமென வினவாதொழிக; என்னே? சச்சின்மாத்திரங் கற்பிதமன்றன்றோ! தத்துவமாயவதுவேமுந்தியதாம், அப்பூர்வசித்த ஆத்மாவேதமாயினும் சுருதிகுருவடிவத்தால் வேதனஏது மாயையான் மலர்கின்றது வேறுவிசேஷம் யாவுங்கற்பிதமாம். கனவின்கட்டிதமாய ஆத்மா எதனாற்கனுவிடயங்களை புணர்கின்றதோ அதுவே வேதமாம்.

ஆண்டெச்சர்வ வேத்தியங்களுளவோ அவையும் மாயையாலதுவேயாம். கனவின்கட்டிதமாய ஆத்மா எதனாற் காண்கின்றதோ அது சக்ஷுவாம் எதனாற் கேட்கின்றதோ அது சுரோத்ரமெனச் சொல்லப்படும் எதனால் வசனிக்கின்றதோ அது வாக்காம் எதனன் முகர்கின்றதோ அதுகிராணம் எதனாலிரசிக்கின்றதோ அஃதிரசனம் எதனால் ஸ்பரிசிக்கின்றதோ அது ஸ்பர்சனம் எதனன் மனனிக்கின்றதோ அதுமனம் மற்றவற்றையு மிங்ஙனேயுணர்க. உபாதி பேதத்தாலொருமணிக்குப் பேதமாதலே போலுங் கற்பிதமாய உபாதிகளாலே இஞ்ஞானமனேகப் பிரகாரமாகப் பின்னமாம். சொப்பன மொப்பவிவன் நனைஞானத்திற்கும் பேதம் விகற்பிக்கப்பட்டுளது. மயலாற்றிருஷ்ணுற்பவக்கிரியையுடையோன் மயலாற் புந்தியிற் பொதிந்துள்ளதே யான வர்த்தத்தை வியவரிக்கின்றான் கனவிற் பகிரந்தர்ப் பாவங்களைக் கிரகித்துக்கொண்டு வியவகரிப்பதே போலும் பிரபோதத்தினும் வியவகரிக்கின்றனன். மேலும் ஆலேக்ய அத்தியயனங்களாய விரண்டும் உள்வெளிப்பாவத்தாற் பரஸ்பராபேக்ஷ புத்தி ஜன்னியமாவதே போலுமென்க. எஞ்ஞான்றிவ் வாத்மா பேதத்தைக் கற்பிக்கின்றதோ அஞ்ஞான்றதன்கட் காமமுடையதா யிதையான் செய்வேனெனத் துணிகின்றது. எக்காமமக்கிருதுவாய் எக்காம சாதன கர்மமாற்றியதோ அதானுளதாய அப்பலத் திதியை யடைகின்றது. அவித்யாவானலெதனாற் கிரகிக்கப்படுகின்றதோ துயிலின்கட் கிரகிக்கப்படுகின்றதேயின்றே அதனாலிவ் வெல்லாவுலகும் அவித்யாவிஜ்ரும்பிதமாய அபரமார்த்தமேயாம். பிரஹ்மாத்மைகத்வபுத்தி வித்தையாம் அதன்பேத புத்தி யவித்தையாம் இவ்விரண்டும் நம்மனோருணர்வான்மறையா லறையப்பட்டுள்ளன; ஆதலின்

அத்தியாரோப அபவாதப் பிரபந்த நிர்மாணாதி சர்வப் பிரய த்னங்களாலும் சாஸ்திரத்தில் வித்தை பிரதிபாதிக்கப் படுகி ன்றது. 21

தபாதிகளாற் சித்தத்திற் சோதனஞ்செய்ய வேண்டுமேன்பது. 22-26

முமுக்ஷாமோக்த சுத்தசித்தத்தில் வித்தை பிரகாசித்த லின் சித்தசுத்தி யிபற்றத்தக்கதாம். இயமநியமங்களாலும் மகங்களாலுந் தபங்களாலுஞ் சித்தத்தின் சோதனஞ் செய் யத்தக்கதாம். மனத்தூய்மையின் பொருட்டு மனுதிசமாதா னமும் அவ்வவ்விருதுக்களி லுளவாம் சிதோஷ்ண வர்ஷ வாதசகனத்தாற் றேக கிருசீகரணமுமாய உத்தமசரீராதி தபஞ் செய்யத்தக்கதாம். மனத்தின் இந்திரியங்களின் ஏகா க்ரத்தன்மையே மேலாய தபமாம்; அஃதறிந்த விருத்தர் அத் தர்மம் மற்றெல்லாத் தர்மங்களினின்றும் மேலென மிழற்று வர். பாகியேந்திரியங்களாற் பாகியார்த்த உபலம்பனமாய திருஷ்டஞ் சாகரிதமாமெனவும், அஃதையே ஸ்மிருதம் சொப்பனமாமெனவும், இவ்விரண்டனபாவமே சுழுப்தமா மெனவுமுணர்க. இம்மூன்றற்குஞ் சான்றாந்தன் ஆத்மாவை யே பரமபதமெனவுணர்க. சொப்பனப் பிரபோதங்கட்குப் பீஜமாய சுழுப்தியெனப் பெயரிய தமோஞ்ஞான மானது சுவாத்ம போதவெழுநாவால் நன்கு தகிக்கப்பட்டதாம் எங் ஙனந் தகிக்கப்பெற்ற வித்துக்காரியோற்பாதகமாகாதோ அங்ஙனமே யஞ்ஞானமுமா மென்க. 26

ஆத்மாவின்னுத்வம் மாயாகற்பிதமேன மலரல். 27-32

அவ்வொன்றேயாய மாயா பீஜமானது துயிலாதிக்கிரம த்தானும் நனவாதிமுறையானும் மூவிதமாமென வுணரத்தக்

கதாம் மாயாவியாயு மவிகாரியாயு மிலங்குமாத்மா ஒன்றாயினும் நீரவிநிகர்ப்பப்பலவாம் அவித்தைமாயை யெனப் பெயரிய ஓரேபீஜம் அவ்வியாகிருதகனா நனாவாதி யவத்தைகளாற் பேதிக்கின்றதே போல் ஆத்மாவும் நீர்நிலா நிகர்ப்பக் கனா நனாக்காயங்களாற் பேதிக்கும். ஒரு மாயாவியானவன் மாயா விபத்தின்மாட்டாரூடனாயிட்டம்போற் கமனாகமனாதிகளைச் செய்வதேபோலும் ஆத்மாவும் அவ்வியாகிருத சொப்பனாதிகதமாயிருப்பினும்அசலமேயாம். கைப்பகடுமின்றி அதன்மேலாரூடமுமின்றி மாயாவியன்னியனாய்த் திதனாவதேபோல் பிராணாதியுமின்றி அதைக்காண்போனு மின்றியறிஞனன்னியனா யெஞ்ஞான்றுந் திருசியாயேயிருக்கின்றான். கட்கட்டுப்பட்டிலானுக்கும் மாயாவிக்கும் மாயையின்றாம் கட்கட்டுப்பட்டானுக்கேயம் மாயையாதலின் அமாயாவியேயாகுக; இங்ஙனமே அனாவிருதசிற் சுபாவனுக்கும் மாயாவிக்கும் மாயையின்றாம் ஆவிருதசிற் சுபாவனுக்கே யம்மாயையாம் ஆதலினமாயாவியேயாகுக. "சாக்ஷாத் ஆத்மா" வெனச் சுருதிபிரதிபாதித்தலின் பிரஹ்ம ஞானத்தாற்றேவனவனென நன்கறிதற்பாலதாம்; "இருதயமுடிச்சவிழ்கின்றது" என்னுஞ் சுருதியால் விஞ்ஞானலாபமும், "அறியானேல்" என்பதாதிசப்தத்தாற் கேன சுருதியால் அவிஞ்ஞான ஆனியுங் கூறப்படுகின்றது. 32

## புத்தியின் மாட்டாத்மாவின் கிரகணமும் அதன் நித்யத்வாதிகளும். 33-42

இவ்வாத்மாவிற் கசப்தாதித்தன்மை யுண்மையின் பொறிகளாற் கவரக்கூடாததேயாம். அங்ஙனமே சுகாதிகளினின்றாம் வேற்றுமை மேவலின் புத்தியாற்றான் கிரகித்தலெங்ஙன்

கூடுமெனின். இராகு அதிருசியமா யிருப்பினும் சந்திரமண்டலத்திற் சம்பந்தித்துக் காணப்படுகின்றதே போலும் நீரின்கண்ணிலவின் பிம்பங் காணப்படுகின்றதே போலும் சக்ஷுராதியகோசரமாய்ச் சர்வகமாயிருப்பினும் அவ்வாத்மா தத்துவமசியாதி மகாவாக்கிய சமஸ்கிருத புத்தியினூடே பிரதிபிம்பிதமாய்க் கவரப்படுகின்றது ஆதலிற் கூடுமென்க. நீரத்தின்கண் ணிலவைப்பட்ட பிம்பமும் ஔஷ்ண்யமும் பானுவினதேயாமன்றி யம்புவினதாகாது அதுபோற் புந்தியிற் புரணமாம்போதம் புந்திதருமமன்றாம், என்னை? விபரீததர்மமுண்மையினென்க. விழியின் வாயிலாய் வெளிப்போந்த மதியின் •விருத்தியாதோ அதனை யிலக்கிக்கொண்டலுப்த திருக்காய ஆத்மா திருஷ்டிக்கு த்ரஷ்டாவாகின்றது அங்ஙனமே சுருதிக்குச் சுரோதாவாகின்றது. மனதின் கேவலவிருத்தியை விளக்கிக்கொண்டு விகாரரகிதமாய ஆத்மா மதிக்கு மந்தாவாகின்றது அலுப்த சிற்சக்தித் தன்மை யுண்மையின் விஞ்ஞாதாவாம் "இல்லை த்ரஷ்டாவின் றிருஷ்டிக்கு" என்பது முதலிய விச்சுருதிகள் கூறியவற்றிற்குப் பிரமாணமெனக் கொள்க. "தியானஞ்செய்வதே போலும், சலனஞ்செய்வதே போலும்" என்னுஞ் சுருதிகளா லாத்மாவிற்கு அவிகாரித்வமும்; "ஈண்டுத் திருடன், தொடர்புண்ணான்" என்னுஞ் சுருதிகளா லாத்மாவிற்குச் சுத்தத்தன்மையுஞ் சித்தமாமென்றறிக. ஆற்றற்கழிவின்மையிற் றுயிலினுமறிவுருவமே யாத்மாவாம் நஞுக்கஞுக்களினும் அவிகாரத்தன்மை யுண்மையின் அறிவுருவமே யாத்மாவாம்; ஞேயத்திற்கேவிசேஷமாம்; "யாண்டு அன்னியமன்னவாம்" என்னுஞ் சுருதிமொழியாலிது துணியப்பெறுமென் றுணர்க. அநாத்மாக்களாய கடாதிவிஷயங்களைக் கிரகிக்கும் நேத்திராதி யுலகதிருஷ்டிக்

குத் தேயத்தானுங் காலத்தானும் தடை யுண்மையிற் பரோக்ஷத்தன்மை கண்கூடாம் அங்ஙன மாத்மாவின் றிருஷ்டிக்குத் தடையின்றும் திருஷ்டிக்கு ஆத்மஸ்வரூபத்தன்மை யுண்மையின் ஆத்மாவிற்கே பிரஹ்மத்தன்மை யுண்மையின் அந்தப் பிரஹ்மமும் தானே யெஞ்ஞான்றும் பிரத்யக்ஷமெனப் பிரஹ்ம வித்துக்களாற் பிரதிபாதிக்கப் பட்டுளது. தீபப்பிரகாசனத்தின் கட்டபாந்தராபேக்ஷயின்றும் போற்போதத்திற் காத்மஸ்வரூபத்தன்மை யுண்மையின் ஆத்மாவிற் கன்னியபோதாபேக்ஷ யின்றுமென்க. சுருதிவிரோத மாதலி ஞத்மாவிற்கு விஷயத்தன்மையேனும் விகாரித்தன்மையேனும் நாநாத்தன்மையேனும் அங்கீகரிக்கவொண்ணது அன்னியத்திற் கசத்வமுண்மையினுனுஞ் சடத்வமுண்மையினும் அன்னியத்தாலேனுந் தன்னுலேனும் ஆத்மா தள்ளக்கொள்ளத்தகாததாம். 42

கர்மங்களின்றியாஜ்ஜியத் தன்மையைக் கூறல். 43-51

சபாகியாப்யந்தர மஜீர்ணம் ஜன்மமிருத்யு ஜரையற்றதுவாய ஆத்மாயான் எனயாவனறிவனே அவன்யாண்டுத் தொடர்புற்றச்சமுறுவன். அஸ்தூலாதி சாஸ்திரங்களாற் கர்மாதிகார வேதுவாயவர்ணித்வாதிகளினபோகனத்தாலும் தத்வமேயென்னும் வாக்கியத்தாற் பிரஹ்ம ஸ்வரூபத்வ நிச்சயத்தாலும் இவ்வாத்மதத்வப் பிரதிபாதனத்தினின்றும் முன்னமே "சாங்காறு மெரியோம்புக" வென்னுமக்கர்ம விதிபொருந்துமே யன்றிப் பின்னன்றென்றுணர்க. பூர்வ புறகல பரித்யாகமாங்காற் சாதியாதிகட்கு நாசம்பொருந்துதலின் ஆகமாபாயிகளான அவை ஆத்மதர்மங்களன்று பின்னரோ; சாதியாதிகளாகத்தினுக்கே யுரியனவாம் இங்ஙனமாகமா

பாபித்தன்மை புண்மையானை தேகத்திற்கு மனாத்மத்தன் மையைப் பொருந்தும். ஆதலிற் சரீராதி யனாத்மாக்களில் என து யானென்னு மபிமான மவித்தையாம் அஃதாத்மஞானத் தாற் றள்ளத்தக்கதாம். "அசுரர்களுடைய" என்னுஞ் சுரு தியாற் றேகாத்ம திருஷ்டியை நிந்தித்திருத்தலினென்க. பரி வ்ராஜத்தன்மையை யடைந்திருக்குங்காற் றுறவிக் கெங்ஙனந் தசதின ஆசௌச கார்யங்களின் நிவர்த்தனமாமோ அங்ங னமே ஞானத்தினடைவுண்டாங்காற் சாதியாதிகர்மங்களின் நிவர்த்தனமாம். எக்காலமக்கிருதுவாயியற்றியவற்றை யஞ் ஞனடைகின்றனன்; எக்காற் சுவாத்மதிருக்கின் காமங்கள் நன்கு விடுபடுகின்றனவோ அக்காலமமிருதமாகின்றான்.

ஆத்மரூபாவதாரணமுங் கிரியாதிகளினின்று நிவர்த் தியுஞ் செய்யத்தக்கதாம்; ஆத்மாசாத்தியமுஞ் சாதனமுமன்று, "ஆத்மாநித்தியதிருப்தம்" என்பது ஸ்மிருதியின்சம் மதமாம். உற்பாத்யமும் ஆப்யமும் விகார்யமும் சம்ஸ்கார்ய மும் கிரியாபலமாம்; அதனினும் வேறுகருமத்தாற் செய்யத் தக்க தின்றாம், ஆதலினுற் சாதனத்தோடுங் கர்மத்தை முமு க்ஷுவானவன் றியாகிக்க. யாதொருபாகியப் பிரியமுண்டோ அதற்குத் தாபாந்தத் தன்மையுண்மையினானும் அநித்தியத் தன்மையுண்மையினானும் ஆத்மார்த்தத் தன்மையுண்மையி னானும் அந்தப் பிரீதியை ஆத்மாவின்கண் ணுபசம்ஹரித்து நித்திய புருஷார்த்தியாய ஸ்ரீ தேசிகரையே சரணாகதியாய டைதற்பாற்றாம். 51

குருவினடைவைக் கூறல். 52-53

சாந்தராயும் பிராஞ்ஞராயும் பாறியபந்தம் பற்றாதபடி முத்தரானவரும் இகபரக்கிரியை யற்றவரும் ஸ்வஸ்வரூபா

னந்தானுபவத்தால் யாவற்றினு முதாசீனருமாய ஸ்ரீ தேசிக ரையே சரணாகதியாக வடைதற்பாற்றும்; இதன் கட் பிரமா ணமே:—"ஆசிரியவானறிவன்" என்னுஞ் சுருதியினானும் அதனையறிவா, யென்னும் ஸ்மிருதியினானுமுணர்க. அத்தே சிகர், சமாகிதனும் சீடர்க்குரிய அமானித்வாதி குணங்க ளோடு கூடியவனுமாய சீடனையதிசீக்கிரம் ஸ்வாந்தத்வாந்தம கோததியினின்றும் பிரஹ்மவித்தையாய நாவாயாற்கடத்துக.

## பதப்பொருள் விவேகம். 54-56

திருஷ்டி ஸ்ப்ருஷ்டி, சுருதி, கிராதி, மதி, விஞ்ஞாதியே, முதலவாய அன்னிய சக்திகள் சித்ரூபத்தன்மையனவாயி னும் உபாதிகளின் வேறுபாட்டால் வேறுபடுகின்றன. இரவி யானது தன்னுற்பத்தி நாசவான்களாய கிரணங்களாற் பிரஹ் மாண்டத்தை நித்தியமிலக்கிக் கொண்டொன்றேயவிகிருத மாயிருப்பதையொப்ப ஆத்மாவுங்கனது உற்பத்திநாச மு டையனவாய் விருத்தியாற் பேதித்த சிற்சத்திகளாலனவரு தம் விசேஷமாய்ச் சர்வத்தையுமறிவதாயுஞ் சாமான்யமாய்ச் சர்வத்தையு மறிவதாயுஞ் சர்வகதமாயும் நிர்விகாரமாயு மிருக்கின்றது. அவித்தையாலாகத்தின் மாட்டிருப்பவனாய் அத்துணை மாத்திரத்தகமெனவபிமானித்தோனாய் அன்னிய திருஷ்டியனாய் ஜலேந்துவாதியுபமானங்களால் அத்தருமங் களைப் பொருந்தினேனாயும் விபாவிக்கப்படுவன். 56

## பிரதிபுத்தனாய முமுக்ஷுவினனுசந்தானப் பிரகாரத்தைக் கூறல். 57-81.

பாகியமாய யாவற்றையுங் காண்போன் காட்சியன்வய வியதிரேகங்களாலும், காரியகாரண அன்வய வியதிரேகங்க ளாலும் ஆலோசித்து அதன்பின்னவ் வியாவற்றையுங்காண்

போனிடத்திற் காண்பவற்றையும் காரணத்தினிடத்திற் காரியத்தையும் பிரவிலாபித்துப் பின்னர் அந்தத்தூலோபாதியாவற்றையுஞ் சூட்சுமபூதசகிதவாசனாமய லிங்கத்திலடக்கி வாசனாமயமாய தன்மாத்திரங்களாலேனைச் சிந்தித்து.

அந்தவாசனாமய லிங்கசரீரத்தையும் தன்மாத்திரைகளிலடக்கி அவற்றையும் முறையே அஞ்ஞானத்தடக்கி யதன் பின்னாதனையும் விசாரத்தாற் பாதித்துப்பின்றைத்ம திருஷ்டியைத்திறந்துலவா நின்றமாபுருடன் பிரஹ்மமேயாகின்றான் அர்ச்சராதி மார்க்கத்தை யடைகின்றானில்லை யென்றுணர்க. இங்ஙனமே தூலாதி மூன்றையும் விடுத்து அஞ்ஞானமகோததியைத்தாண்டினேன் யாவன் அன்னோனே ஸ்வாத்மஸ்தனும் அர்ச்சிராதி மார்க்கமற்றவனும் தற்கட்சகல குணங்களையும் பிரவிலாபித்தவனும் நிருபாதிகனும் புத்தனும் இயல்பாகவே முத்தனுமாவன். யான்பிறப்பற்றவன் யான் மரணமற்றவன் யான் மிருத்யுவற்றவன் யான் சரையற்றவன் யான் பயமற்றவன் யான் சர்வஞ்ஞன் யான் சர்வதிருக்கு யான் சுத்தன் எனச்சிந்தித்து யாவன் றன்னைப் பிரஹ்மமாகவே யிருக்கின்றேன் யானெனவுணர்ந்து அஞ்ஞான நித்திரையினின்றும் விழிக்கின்றனனோ அன்னோன் பின்னராகத்தை யெடானென்றுணர்க. முன்னுதலிய எத்தமோவித்துளதோ அஃதென்ஞான்று மில்லாததே யெனத் திரமாய்த் துணியத்தக்கதேயாம்; அஃதிலாதொழியிற் பிரஹ்மைகத்வத்தைப் புலப்பட வுணர்ந்தானுக்குப் பிறப்புண்டாவது யாண்டையதென்க.

க்ஷீரத்தினின்றும் பிரித்தெடுத்த நவநீதத்தைப் பின்னரக் க்ஷீரத்தின் மாட்டிடினும் முன்போலெங்ஙனம் பற்றாதோ

அங்ஙன மசத்தியங்களாய புத்தியாதிகளினின்றுந் தன்னைச் சித்துருவனெனப் பிரித்தறிந்தான் முன் போற்றேகி யென ப்பவியான், சத்திய ஞானானந்த முஞ் அன்னமயாதி பஞ்ச கங்களினின்றும் பரமும் அநிருசியாதி மறையாலறையப் பெற்றதுமாய பிரஹ்மமே யானுயிருக்கின்றேனெனவுய்த்து ணர்ந்து அச்சமற்றவனுவன். அத்தியாத்மங்களாய வாக்கு மனுதிகளும் அவைகட்கதி தெய்வங்களாய பாவகாதிகளும் அல்லது வாயுவினன் பாவகாதிகள் எதனாற் பிதியுற்றனவா ய்ப் பிரவர்த்திக்கின்றனவோ அவ்வாத்மானந்த தத்துவத்தை யறிந்தோன் யாண்டு மச்சமுறானென்றுணர்க. உத்தரோத் தரமுயர்ந்ததெனக் கேட்கப்பெற்ற நாமவாங்மனுதி பிராணு ந்தங்களினின்றும் பரமும் அத்வயமும் ஸ்வாராஜ்யமுமாய பூமாவின் கண்ணகம் பூமாவாய பிரஹ்மமாயிருக்கின்றேனெ ன்றிருப்பவனுய ஆத்ம ஞ்ஞன் அக்கால் யாரை நமஸ்கரிப்பன் அக்காற் கர்மத்தாற் செய்யத்தக்கது யாதொன்று மவனுக் கின்றென்றுணர்க. நனவில் விஸ்வைவஸ்வானரர் என்றும் கனவில் வாசனாமய விஷயங்களைத் தரிசிக்கும். இரண்ய கர் ப்பதைஜசர் என்றும், யாவும் பிரவிலீனமாயதுயிலிலோ அவ் வியாகிருத பிராஞ்ஞர் என்றும் சொல்லப்படும். துயிலாதி கட்கு வாசாரம்பணத் தன்மையுண்மையின்றுயிலாதி மூன் றுமசத்தாம், சாக்ஷியோ பரமாத்மாவாம் அதுவே யானு மென விங்ஙனஞ் சந்ததஞ் சிந்திப்போன் அனுயாசமாய்ப் பந்தத்தினின்றும் விடுபடுவன் பானுவிற்குப்பிரகாச வடிவத் தன்மையுண்மையிற் பகலிரவில்லாததேபோலெனக்குஞ் சித் துருவத் தன்மையவிசேஷமாயிருத்தலின் ஞானுஞ் ஞானங் களின்றும். சாஸ்திரத்தைக்கடந்து சங்கிக்கக்கூடாததலின் யானனவரதம் பிரஹ்மமே யாவன் பிரஹ்மமாய வென்றனக்

ருக் கொள்ளவேனுந் தள்ளவேனும் ஒரு சிறிதுங்கிடை யவே கிடையாதென்று நன்கு சிந்திக்க. சுபநருப்பநானே யெல்லாப் பூதங்களிலு மேகனுயிருக்கின்றேன் என்பா லெல் லாப்பூதங்களுமிருக்கின்றன வெனவிங்ஙனங் கண்டுகொண் டிருப்போன் பிறப்பதேயில்லை. "அபாஹ்யாந்த" வருமறை யால், உள்ளேனும் புறமேனும் நடுவேனும் உளதாவதின்று வேறுசுபமாகயாண்டு மெதுவுமுளதாவதின்று ஆதலிற்சுத் தமாம் ஸ்வயம்பிரபையுடையதாம். "நேதி நேதி" என்பது முதலிய சாஸ்திரங்களாற் பிரபஞ்சோபசமன் அத்வயனும்; அவிஞ்ஞாதாதி சாஸ்திரங்களால் ஞேயமேயன்று ஆதலின் வேறே. "ஆத்மா இவர்களுக்"கென்னுஞ்சுருதியால், யாவ ன் யாவற்றினுத்மாயானெனப்பரப்பிரஹ்மத்தை யறிவ னே அவனெல்லாப்பூதங்கட்கு மாத்மாவாம் பரமாத்மாவா ய்த் தேவனுயிராநின்ற ஸ்வாத்மாவை யெச்சிவனெல்லையிலு ணர்கின்றனனே அத்தேவர்களா லுபாசிக்கத்தக்கவவன் தேவர்களின் பசுத்வத்தினின்றும் நிவர்த்திக்கின்றனன் யா னே சச்சித்வடிவன் அம்பரம்போ லன்னியங்களாற் சூனிய னென்றிங்ஙன முண்மையனுசந்தான முண்மையின் அநிரு தஅபிசந்திரகித தஸ்கரனெப்பப்பந்தானர்த்தஹீனனுவன் யாவர்பரப்பிரஹ்மத்தை விளம்பியபடியன்றி விபரீதமாயறி வரோ அவர்கிருபணரேயாவர் யாவன் அபேததரிசியோ அவ ன்ஸ்வராட்டாய் ஸ்வஸ்தனுயிருக்கின்றான் அவனுக்குத்தே வர்கள்வசமுடையவர்க ளாகின்றனர்கள். ஜாதியாதி சம் பந்தங்களை விடுத்துக்கர்மங்களோடு மனுத்மவிஷயவாக்கு களையும்நீத்துச் சர்வாதாரமாயும் நிர்விசேஷமாயுமிராநின்ற ஆத்மாவைச் சந்தத மோமென்றிங்ஙனந் தியானித்தடையுங் கள். சருவவருணுசிரமாதி வியவஸ்தைகட்குச் சேதுவாயும்

அஹோராத்ராதி வர்ஜிதமாயும் குறுக்குமேற் கீழ்யா ண்டு மேகஜோதியாயும் அநாமயமாயும் தர்மாதர்மங்களி னின்றும் பூதபவ்யங்களினின்றுங் கிருதாகிருதங்களினின் றும் விநிர்முக்தமாயும் சர்வ பந்தங்களினின்றும் விமுக்த மாயும் பரமாயுமிராநின்ற தன் வடிவத்தை யுணர்க. யாவுஞ் செய்யாததாயுஞ் செய்வதாம் சுத்தமாம் நிலைபெற்றிருப்பதா யும் அதிவேகமாய் மனம்பிராணாதிகளைக் கடந்து செல்வதாம். பிறப்பற்றதாயும் பகுவிதமாய்ப் பிறப்புற்றதாம் இவையாவுஞ் சர்வசக்தித் தன்மையுண்மையின் மாயையாற் கூடுமென்க. இராஜனைப்போற் சாக்ஷிமாத்திரத் தன்மை யுண்மையின் சான்னித்தியத்தாற் பிராமகனைப்போன்று பிரமிப்பித்துக் கொண்டு சகதாத்மாவாய யான் கிரியையற்றவனும் அகா ரகனும் அத்வயனுமாவன் நிர்க்குணமாயும் நிஷ்கிரியமாயும் நித்தியமாயும் நிர்த்வந்தமாயும் நிராமயமாயும் சுத்தமா யும் புத்தமாயும் முக்தமாயும் யாதொரு பிரஹ்மமுளதோ அதுவே யானாகின்றேனென்று சந்ததஞ் சிந்திக்க. 81

## உரைதந்த பிரகரணத்தி னுபசம்ஹாரஞ்செய்தல். 82-89

பந்தத்தையும் முத்தியையும் முன்மொழிந்தவண்ணம் இவ்விரண்டற்கு மேதுவாய ஞானஞ்ஞானங்களையு முணர்ந் து காரண காரியங்களாய எஞ்ஞேயமுளவோ அவையாவற் றையும் பாத்தியமென வுணர்ந்து ஞேயத்தினின்றும் நன்கு வேறுபிரிக்கப்பட்டதாய் நிரதிசயமாய் விசுத்தமாய் ஏகமாய் வேதாந்தங்களிலதிகதமாய்ச் சுருதிவாக்கியத்தாற்குருபரா னுபதிஷ்டமாயிராநின்ற பரமார்த்தப் பிரஹ்ம தத்துவத்தை

யுந் தன் வடிவமாயுணர்ந்து சோகமோகங்களைக் கடந்தோ ஞைப் சர்வமாய பிரஹ்மத்தை யறிந்தோனைப் யாவற் றையுந் தன்பாலேகம்புரிபவனைப் பவபயாகிதனைப் முக்கிய விருத்தியாற் பிராஹ்மண சப்தாபிதேயனைப் சர்வகிரியா பலன்களையு மடையப் பெற்றோனைப் விளங்குவன். தானே யாத்மா தனக்கு ஹேயகமுமன்றுபாதேயமுமன்று அன்னி யமுந் தனக்கு ஹேயகமுமன்றுபாதேயமுமன்று இங்ஙன மே அன்னியத்திற்குந் தான் ஹேயகமுமன்றுபாதேயமு மன்று என விங்ஙனமாய நிஷ்டையையே நன்மதியென முதி யோரான் மொழியப்பட்டுளது. ஆத்மாவைப் பிரஹ்மமாக உணருமாறு செய்யுமிந்த நன்மதி சர்வ வேதாந்தகோசாமாம் அவ்வாறாய விதனை யடையப்பெற்றுச் சர்வசம்சார பந்தனங் களினின்றும் நன்கு விடுபடுவர். சர்வவேதங்கட்குஞ் சர்வ தேவதைகட்கு மிக ரகசியமும் சர்வோத்தமமும் பாவனமும் பரமபுருஷார்த்த ரூபமுமாய எந்நன்மதி யுளதோ அவ்விதனை யீண்டு நன்கு புலப்படுத்தினேம் இந்தக் கோபனீயமாய உத் தமோத்தம ஞானத்தை அசாந்தன்பொருட் டுபற்பாலதன் று விரக்தனும் வெகுகாலம் பின்றொடர்ந்து சேவிப்பவனு மாய சீடன்பொருட் டுயற்பாலதாம்; எதனை லாத்மஞானத் தை நிஷ்கிரியமாய் அருளுமாசிரியனு மன்னியமாயுளனு காதேனை அதனற் சீடகுணங்களாற் சந்தத மலங்கரிக்கப்பெற் றானைய் ஞானத்தைச் சம்பாதித்துக்கொண்டு சம்சாரத்தைத் தாண்டக்கடவன். ஞானமும் ஞேயமும் ஞாதாவும் எதனைல் வேறுளதாவலவோ யாது சர்வஞ்ஞமாயும் சர்வசக்தி மத் தாயுமுளதோ அத்தகைய ஞானத்மாவின் பொருட்டு நமஸ் காரம். ஜன்மமிருத்தியு மஹோததியையும் அஞ்ஞான சங் குலத்தையும் எவர்களால் வித்தையாற் றாண்டினரோ சர்வ

ஞர்களாய அந்தத் தேசிகேந்திரர்களின் பொருட்டு நமஸ்காரம் நமஸ்காரம்.

பதினேழாவது நன்மதிப்பிரகாணம் முற்றும்.

---

## பதினெட்டாவது தத்துவமசிப் பிரகரணம்.

குருநமஸ்காரவாயிலாகச் சம்பிரதாயசுத்தியைச் சாற்றல். 1-2

விருத்திகள் துயிலிலெவ்வடிவமாய் விலீனமாகின்றனவோ நனவாதியிலெதன் வியாப்தமாய் உற்பவிக்கின்றனவோ அத்தகைய சாபாசபுத்தி விருத்திகளினத்தியாச அதிஷ்டானமாய நித்தியஞான வடிவத்தின்பொருட்டு நமஸ்காரம். வஜ்ஜிரோபமமாய யுக்திகள் பேதிக்கக்கூடாதனவாய் நிறைந்துள்ள சுருதிவசன வசிகளாற் அத்வைத ரத்னுபகாரிகளான சோரரை வேரோடறுத்தெறிந்து எந்த அப்ரதிஹத தீர்க்கபுத்தியானவர் வேதாந்தார்த்த நிதியாய பிரஹ்மதத்துவத்தை நன்கு ரக்ஷித்தாரோ அந்த யதீந்திரராய பரமகுருவின் பொருட்டு நமஸ்காரம். 2

தத்துவமசியாதி வாக்கியத்தாலே அபரோக்ஷஞானமும் அனர்த்த-நிவர்த்தி வடிவபலமும் உண்டாகின்றன வேன வுரைத்தல் 3-8

சத்தேயான் யானே சத்தாயுளன் நித்தியமுக்தன் என்றிங்ஙனமாயின் அவ்வபரோக்ஷ மதியானது வேதாந்த வாக்கியத்தாலுளதாகாது, ஆகவே இங்ஙனந் தத்துவமசிதத்துவமசியெனச் சுருதிமாதா மாதாவை மானும் யாதின் பொருட்டாதரவோடு மடிக்கடி கேட்பிக்கவேண்டும். அகமென்ப

தில் அகம்சப்தலக்ஷியத்தால் அபரோக்ஷமாக ஸ்வதசித்த ஆத்மாவின் சகாசத்தால் பாரக்கர்த்த அகங்காராதி உத்தியோடொன்றுந் தத்வமென்பது முதலிய சாசனங்களாற் கயிற்றிற் கட்செவிகடுப்ப நிஷேதிக்கப்படுகின்றன. சாஸ்திரப் பிராமாண்யத்தாற் றர்மாதிகட் கிருப்புண்மையுணர்தல் போலும் பிரஹ்மத்திற்கே ஆத்மத் தன்மையானே யிருப்புண்மை சாஸ்திரப் பிராமாண்யத்தாலே யுணர்தற்பாலதாமென்க, கருடக்தியானாதியா லக்கணமே கடுநிவர்த்தியுண்டாத லொப்பவாக்கியத்தாலாத்மாவகதியுண்டாங்கணமே அவித்தையாதியனர்த்த நிவர்த்தியுண்டாத லொருதலை யென்றுணர்க. யான் பிரஹ்மமாயுளன் யான் புரிகின்றேன் என ஆத்மசாக்ஷிகங்களாய பிரத்தியயங்களுள; அவற்று ளஞ்ஞானஜன்னியத்திற்கே நீக்கம் முற்றினும் பொருத்தமென்பதுடன்பாடாம். யான் பிரஹ்மமாயுளன் என்பது பிரமாணத்தாற்றுணியப் பெற்றதாம். யான் கருத்தனென்னு மதியோ பிரமாணுபாசோற்பவமாம், திக்குப் பிரமாதிக ளொக்கக்காட்சியாதி கடுப்பனவும் பாதிக்கப்படுகின்றன செய், போக்தா, வென எச்சாஸ்திரம் லோகபுத்தியனுவாதியாயுளதோ அது அனதிகதார்த்த போதகமன்று யான் பிரஹ்மமாயுளன் என்னும் புந்தியோ அனன்னியசித்தார்த்த சுருதியின் சகாசத்தாற் சாதமாம் ஆதலின் யான் பிரஹ்மமாயுளன் என்னும் புந்தியாலே யன்னியமதி பாதிக்கவேபடுகின்றது. 8

பிரசங்க்யானவாதி மதத்தைக் கிளப்பல். 9-18

சத்தாகவே நீயுள்ளா யெனப்புகன்றுழி யாத்மாவிற்கு முக்தத்தன்மை திரமாயாகாதாதலிற் பிரசங்க்யானம் பிரவிர்த்திக்கப்படுகின்றது உத்தியோடு நன்குசிந்திக்க. எவ்வாக்கி

யார்த்தஞ்ஞனும் ஏகவாரமியம்பியதைக் கவரலேலாதென்க; ஆதலினுனே வேறு சககாரியவாவப்படுகின்றது அவ்வாக்கியானுசிந்தனத்தையும் யுக்தியாலோசனத்தையும் முன்யாம் மொழிந்துள்ளேம். வாக்கியமாத்திரத்தாலைக்கியத்தின் சாக்ஷாத்கிருதத் தன்மையின்மையின் எத்துணைப்போது சம்வேத்யத்வந் திரமாகவில்லேயோ அத்துணைப்போது நியோகமவிருத்தமாம்; அந்நியோகங்கர்மங்கட் கெங்ஙனமோ வங்ஙனமாமென்க அநியுக்தமா யடையப்படுமேல் அநுஷ்டிதமாயயமாதிகண் மித்தையாமன்றே ஆதலிற்றிடமான ஆத்மசாக்ஷாத்கார பரியந்தம் பிரசங்க்யானஞ் செய்யத்தக்கதாம் வாக்கியத்தானுளதாய சத்தாயிருக்கின்றேனென்னும் விஞ்ஞானத்தைத் துணிபாய்த்திட சமஸ்காரத்தோடுள்ள காட்சியுணர்ச்சியாதிக்கும்; அதனுன் முமுட்சு வெளிமுகப்படுவனுதலிற் பிரசங்க்யானம் விரும்பற்பாலதாம் சுருத அனுமான ஜன்மானங்களாய பிரத்யயங்கள் சாமான்ய விஷயங்களாதலின் விசேஷார்த்த அக்ஷஜமாய தவசியம்பாதிக்கத்தக்கதாம். வாக்கியார்த்த ஞானமாத்திரத்தால் யாவனுங் கிருதகிருத்தியனுகப் புலப்படக்கண்டிலேம்; வாக்கியார்த்த சிரவணமாத்திரத்தா லோரொருவன் கிருதகிருத்தியனுயிருப்பக் கண்டுளோமெனின் அவன் அதீத ஆகங்களிலனுஷ்டிதப்பிரசங்க்யானனென் றனுமிக்கப்படுவனென்க. மேலும் நம்மனோர்க்குரிய பரமஹம்ச ஆசாரமாயது அசாஸ்த்ர சம்வேத்யமாம் அங்ஙனமாகவேயஃதகிட்டமாம். நீசற்பிரஹ்மமாயுள்ளாயெனப்பயனைப்பகர்ந்து சாதனம் விதேயமாமாதலிற் பிரசங்க்யானிக்கக்கடவன்; பிரசித்தார்த்தாபிவ்யஞ்ஜன சமர்த்தமாயசாதனம் யாதோவது பிரசங்க்யானமேயாம் பிரசங்க்யானத்தினன்னியம் வேதாந்தங்களில் வேண்டப்படுகின்றதின்

றும். ஆதலிற் சமனுகிமானுயவன் சாதனவச் சாத்பவிருத்த
மாய கருமநிஷ்டத்தகைமையை நூக்கியனுபவத்தின் பொ
ருட்டேமுயல்வாற் பிரசங்க்யானிக்கக் கடவன். 18

## தமது சித்தாந்தத்தைத் தரிசிப்பித்தல். 19–23

நேதி நேதியெனத் திருசிய நிஷேதவாயிலாய் அதன
வதி மாத்திரமாய பிரஹ்மாத்ம வடிவத்திற் பரியவசானங்கா
ண்டலின் உபநிடதவாக்கியங்கட்கு விதியின் பொருட்டதாந்
தன்மை யேலாதென்க. கிரியா சாத்பபலமோ முற்காண்டத்
திற் சிராவியமாம் உபநிடதங்களின்று; ஈண்டுக் கேட்கப்ப
டும் மோக்கமோ நித்தியசித்தமாதலின் கிரியாசாத்யமன்று
தந்தையான் மைந்தன் றுன்பந் துன்பமில்லாத் தனதாத்மா
வின் கண்ணெங்ஙன மத்யசிக்கப்படுமோ அங்ஙனமென் றுந்
துன்பந்துன்றுத் தனதாத்மாவின் கண்ணகங்கர்த்தா வென்
றத்தியசிக்கப்பட்டதாம். அவ்வத்தியாசமாயது நேதிநேதி
யெனப் பிராப்தவத்பிரதிஷித்திக்கப்படும் மிகவும் அத்யா
சவிதி யாதும் யாண்டு மெவ்வாற்றானும் பொருந்தாதென்
றுணர்க. ஆத்மாவின் மாட்டாக ஜாமரணுத்யாசமும் அங்
ஙனமே, அதன் பிரதிஷேதமும் எங்ஙன் கூடுமோ எங்ஙன்
றன் அபுதரால் மாகத்தின்மாட்டு மலாத்யாச நிஷேதங்க
ளியற்றப்படுகின்றனவோ அங்ஙனம் அவிஷயமாய பிரத்தி
யக்காத்மாவின் கண்ணும் சம்சார அத்யாச நிஷேதங்க
ளியற்றப்பட்டனவாம் பிரமாணசித்தமாயிற் சம்சாரம் பிரா
ப்தவத் பிரதிஷித்தமாம் ஆயிற் சம்சாரபந்த நிவர்த்தி வடிவ
மோக்ஷத்திற்கு ஆகந்துகத்தன்மை யுண்மையிற் சத்திய
மாய் முத்தி யநித்தமாம் ஆதலிற்றிவத்திற் றீச்சயனுதிபோ
லும் அப்ராப்த நிஷேதமாமிது. 23

ஆத்மாவிற்குப்பிரத்யய அகோசரத்தன்மையையறையல். 24-27

சப்தமேனும் பிரமாணாந்தர ஜன்னியப் பிரத்யயமேனும் கோசரிக்கத்தக்க விஷயத்திற் சம்பாவ்யமாம்; விஷயத்வ அயோக்கியத்தானத்தின்கட்டகாததாம். ஆத்மாவின்கட் சம்பவிப்பனவன்று. மேலும் பிரமாணத்வாபிமதமாய சப்தப் பிரத்யயங்கட்கும் அங்ஙனமே பிரமாத்ருத்வாபிமதமாய அகங்கர்த்தா வென்பதற்கும் பிரஹ்மாத்மத் தன்மையுண்மை யின் அவற்றின் கோசரத்வங் கூடாதென்றுணர்க. சேதன வடிவ ஆத்மாவின்கட் சாபாசாந்தக்காண அவிவேகத்தா லெக்கர்த்ருத்வாதிகளாரோபிக்கப்படுகின்றனவோ அவை யாவும் நேதி நேதியெனச் சாபாச அந்தக்காண அவிவேகத் தோடும் நிஷேதிக்கப்படும். சாக்ஷாத், சர்வாந்தரம், சாக்ஷி, சேதா, நித்தியம், நிர்க்குணம், அத்வயம், எனச்சுருதியறை தருதலின் ஆத்மா உபலப்தி சுயஞ்சோதி திருசி பிரத்திய க்கு, சந்ததங்கிரியையற்றதாம். அகங்காரமானது சததஞ்சி தாத்மாவின் சந்நிதியிலிருப்பதாற் சைதன்ய வொளியொடும் விரவியதாய் அவ்வாகாரத்தையடையும் ஆதலின் ஆத்மாத் மீய மிரண்டும் அகம்மமகோசரமாம். 27

சப்தாகோசரத் தகைமையைச் சாற்றல். 28-33

ஜாதிகன்மாதிமத்துவத்தாலே சாபாச அகங்காரத் தின் மாட்டொலிகள் பிரவிர்த்திக்கின்றன தனதாத்மாவினு டம்பின்மையின் எவ்வொலியுங் கோசரிப்பதின்று யாண்டா பாசம் ஆண்டே ஒலிகளிருப்பனவாய்ப் பிரத்தியக்குத் திருசி யை லக்ஷணையால் ஞாபிக்கின்றன; அதைச் சாக்ஷாத் கோச ரிக்குமாற்ற லெவ்வாற்றானுமின் றென்றுணர்க. அஜாத்யாதி மானுய வொருபொருள் ஒலிகளானிரூபிக்கப்படுவது யாண்

டுங்கண்டிலேம். ஆத்மாவைப் போலிலங்குகின்றது எங்ஙனம கங்காரமாமோ ஆத்மசப்தங்களாலங்ஙனம் நுவலப்படும் அக்கினியர்த்தங்களாய உன்முகமழற்றுகின்றது அயமழற்றுகின்றதெனப்பிரபோகிக்கு மௌலிகள் சாக்ஷாத் துன்முகாதிகளில் பரியவசானம் பெறுகின்றதின்று, பார்த்தத்தன்மையுண்மையின் இஃதொப்ப அகங்காரத்தின் கண்ணுங்காண்க. ஆனனப்பிரதிபிம்பம் ஆடியின்றொடர்புடையதாதலால் ஆனனத்தினன்னியமாம்; ஆனனமும் ஆதரிசத் தொடர்புடையதன்றாதலால் இங்ஙனம் பிரதிபிம்பத்தினன்னியமேயாம் அகங்காரத்தின்கண் ணாத்மாபாசமாயது ஆனனாபாசம் போலுடன்பாடாம் ஆனனமுறழ ஆன்மா அன்னியமென அறியப்படும் ஆத்மாத்மாபாசங்கள் ஆனனானனாபாசங்களிகல உண்மையில் அவிவிக்தங்களாம் ஆபாசாஸ்ரய அந்தக்கரணமு மவிவிக்தமென்பது முய்த்துணர்க. 33

ஏகதேசிமதங்களைத் தூஷிப்பான் றொகுத்தல். 34-36

எவ்வகங்கிருதியினாபாசம் நம்மனோரா றப்பிறிதாய்ப் பிறங்கப்பெறுமோ அசம்சாரி யென்றிங்ஙனஞ் சிலவர் சிந்திக்கின்றனர். சாயைபரமார்த்தமாம் ஸ்மிருதி யுண்மையின், மாதுரியாதி வேறுகாரணமுமுளது. சிச்சதானந்த பரமாத்மாவின் ஏகதேசம் சம்சாரியெனச் சிலரும் பரமாத்மாவின் விகாரம் சம்சாரியெனச் சிலரும் சிதாத்மாபாச விசிஷ்ட அகங்காரமே சம்சாரியெனச் சிலரும் நான் கர்த்தாவே சம்சாரி சுவதந்திரன் எனச் சிலரும் பகர்வர். அகங்காராதி சந்தானஞ் சம்சாரி எவ்வன்வயியும் அன்றென்றிங்ஙனஞ் சௌகதர் சொல்வர் ஆண்டு நியாயம் யாதோ அது விசாரித்துணர்தற் பாலதாம். 36

## ஆபாசநிரூபணவாயிலாகச் சிச்சாயாவாதி முதலியோர் மதங்களை நிராகரித்தல். 37-50

சம்சாரிகளின் கதைசாலும், பிரகிருதத்தை யிப்பொழுது பேசுவாம், ஆதரிசத்தின்மாட் டெவ்வத்திராபாச முளதோ அஃதிரண்டிலொன்றன் றருமமன்று இரண்டிலொன்றன்றருமமாயின் இரண்டிலொன்ற னீக்கமாங்காற் பவிக்க வேண்டும். முகாபாசமென முகத்தால் வியபதேசஞ் செய்தலின் அது முகத்திற்கேயென வுடன்படினோ, ஒவ்வாது, ஆதரிசானுவிதானத்தால் மேலும் முகமிருப்பினும் அதரிசனத்தாலென்க. அற்றேல், இரண்டினிடத்தினுமே யெனின்? அற்றன்று, இரண்டினும் புலப்படாமையின், வித்ய மானமாய்ப் புலப்படாம லிராநின்ற இராகுவிற் கிரவிமதி யுபாதியுளதாமோ ரொருகாற் புலப்படல் புரைய ஆபாசமு முண்மையாய் வேறெனின், நூலளவையா லிராகுவிற்கு முன்னமே வத்துத்துவஞ் சித்தமாம், சிலவர் செப்பும்பூநிழற்பக்ஷத்திலோ முன்னுத்திப்படியதற்கவத்துத்துவமாமென்றுணர்க. நிழற்றண்டலின் நிஷேதமாய விஃதோ வத்துத்துவ சாதகமன்று அர்த்தாந்தரநிட்டமாய் அர்த்தாந்தரத்தை வாக்கியம்வழங்குவதன்றன்றோ; மாதுரியாதி யெக்காரியமுளவோ அவை யுஷ்ணத்திரவியாதிய சேவனத்தாலுண்டாம், சாயையினதன்று, அங்ஙனங் காணுமையின் அப்பின்கண்ணே காண்டலினென்க. இங்ஙனம் ஆனனுபாசாஸ்ரயம்போல் ஆத்மாபாசாஸ்ரயமும் விவகாரதிருட்டியால் விலக்கணமாம். சாத்திர யுத்திகளால் ஆபாசாசத்வமே புலப்படுகின்றது சம்சாரித்தன்மையானது திருக்கிற் கவிகாரித்தன்மை யுண்மையினுனின்று, ஆபாசத்திற்கவஸ்துத் தன்மை யுண்மையினு

னின்று, அகங்காரத்திற்குஞ் சடத்தன்மை யுண்மையினு னின்று, பின்னெதற்குத்தான் பசிக்குமெனின்? நன்றுவினவினுய், ஆதலிற் சம்சார மவித்தை மாத்திரமே யாகுக; ஆத்மரூபா விவேகத்தாற் சம்சாரம் ஆன்மதன்மம்போற் பொலிகின்றது கூடத்தரிடத்திலத்தியவ்ஸ்தமாய்க் கூடத்த வடிவொடு மயலுறக்குலவி நித்திய மச்சத்தையுடையதாம்; கயிற்றரவு கயிற்றொடுங் கலந்து சாத்மகமாய் விவேகத்தின் முன் விளங்குதல் விபப்ப இஃதவத்துவாயிருப்பினுங் கூடத்தவடிவொடுமயலுறக்குலவுமென்க. ஆத்மாவே ஆத்மாபாசாப்ரயமாம் தனது பிரத்தியபங்களால் விகாரவானும் சுகியுந் துக்கியுஞ் சம்சாரியுமாம்; ஆயினும் நித்தியமேயாமெனச் சிலவர் செப்புவர். ஆத்மாபாசங்களின் யாதாத்மியமாய பரிஞான மின்மையின் விமோகிதராய்ச் சாபாசாந்தக் கரணத்தையே யாத்மாவெனச் சிந்திக்கின்றனர். ஆதலினவர் ஆகமாகசியபரிசய சூனியரேயாவரென்றுணர்க. கர்த்ருபோக்த்ருத்வவடிவ சம்சாரம் அவர்கட்கு வாத்தவமாகவே பசிக்கும்; ஆத்மாபாசாப்ரய அஞ்ஞானத்தாலுண்டாம் பேதாக்கிரகத்தாலுழல்கின்றனர். மதிக்குச் சைதன்யாபாசத்வமும் ஆத்மாவிற்குச் சைதன்ய ஸ்வரூபத்வமுமாமே லஞ்ஞான்று ஞானுதிசத்தங்களாற் பிரதிபாதிக்கின்றதாத்மாவை வேதமென்பது பொருந்தும். 50

## ஆத்மாவின்கண் ஜானுதியாதியாய சப்த வியவகாரம் பொருந்தாதெனச் சங்கித்தல். 51-56

எவ்வேற்றுமை மேயதொழிற் கர்த்ருத்வப் பொருள் வாய்ந்த பகுதி விகுதிகளுளவோ அவை யேகாப்ரயங்க

ளாம். செய்கின்றது செல்கின்றது என்பதாதிகளிற் றிருட்டங்களாம், அஃதொப்ப உலகப்பிரசித்தியானே அறிகின்றதென்பதாதிகட்கு மாத்மைகாஸ்ரயத்வங் கூடும். இவைகட்கு த்வயாஸ்ரயத்வம் உலகப் பிரயோகங்களிற் கண்டோமில்லை அங்ஙனம் வியாகரணத்தினுங் கண்டோமில்லை. ஆதலி னறிகின்றதென்னு மர்த்தங்களில் ஆத்மா விகுதியர்த்தாஸ்ரயமெனவும் புத்திபகுதியர்த்தாஸ்ரயமெனவும் த்வயாஸ்ரயத்வவுடன்பாட்டில் யாதேதுக் கூறுவீரெனின்? கேள்! ஆத்மாபாசமோ விகுதிவாச்சியமாம் புத்தியின் விருத்திரூபக்கிரியை பகுதியின்பொருளாம் இரண்டன தவிவேகத்தான் மித்தையாகவே யறிகின்றதென்று நுதலப்படுகின்றது. புத்திக்கோ சித்திமென்னி புணராது ஆத்மாவிற்கோ தொழிற்றொடராது ஆதலினிரண்டி லொன்றிற்கேனும் அறிகின்றதென்பது கூடாததேயாம். ஆதலிற்றாதுவினர்த்த சாமான்ய வசனத்தால் ஞப்தி ஞானமெனப் பாவவியுற்பத்தி செய்பினும் ஞானசப்தப்பிரயோகம் ஆத்மாவின் மாட்டனுகாதென்க. ஆத்மா நித்தியமெனச் சுருதிசாசன மிருத்தலின் ஆத்மா விக்கிரியாமாத்திரமன்று மதிக்கின்றதிதனென மதி, யென்னும் வியுற்பத்தியாற் புத்தி சத்தவாச்சியத்துவம் புத்திக்காம் ஆன்மாவிற்கின்றாம்; காணமகர்த்ருகமென யாண்டுங் கண்டிலேம். இங்ஙனமே அறியப்படுகின்றதென ஞானமென்னுங் கன்மசத்தங்களாலும் ஆத்மா நிரூபிக்கப்படுகின்ற தின்று. 56

இதன் பரிகார மியம்பல். 57-66

யாவர் மதத்தொரேயாத்மா வெக்காலுந்துக்கமுங் கிரியையுமற்றதாமோ அவர்மதத் தெப்போதும் ஆத்மாவிற்

கஞ்ஞேயத்தன்மையும் சத்தவாச்சியத் தன்மையின்மையும் பரமார்த்தத்தாற் கூடுமென்க. எஞ்ஞான்றகங் கர்த்தாவிற் காத்மத்வமாமோ அஞ்ஞான்று சப்தார்த்த முக்கியத்வமா மெனின்? சுருதியிலதற்கு அசனுயாதிமத்வ முண்மையின் ஆத்மத்வ உடன்பாடேயின் றென்க. அந்தோ! ஆயின் எவ் வாற்றானும் முக்கியார்த்தமுங் கௌணமுமன்றும் அங்ஙன மாயினும் அறிகின்ற தென்பதாதி சப்தங்கட்குக் கதிகழறற் பாலதாமெனின்? சப்தங்கட்கயதார்த்தத்வமாங்கால் வேத த்திற்கு மப்பிரமாணத்வமாம். வேதத்திற்கே யாத்மாவின் கட் பிரமாணத்வ விட்டமாதலின் அஃதநிட்டமாம் ஆதலினித ன்கதி வெளிப்படையாயே கவரத்தக்கதாமென்க. மூடவுல கின் வெளிப்படையைக்கவரினே நிராத்மத்வலோகாயதிக சித்தாந்தமாம், அஃதநிட்டமாய்ப் பொருந்தும். அபியுக்தப் பிரசித்தியேன் முன்போலாத்மாவிற்கா அல்லது புத்திக்கா ஞாத்ருத்வ மெனப் பிரித்தறிய வொண்ணு தென்றறிக. கதி சூனியமின்று இவ்வேதம் பிரமாணத்தையே பகர்கின்றது. ஆதரிசத்திற் காணுமானனத் தோடானனத்திற் கேகத்வம் மானவரானுடன்பட்டதேயாம் ஆனனத்தின் பிரதிபிம்பமல் லவா ஆனனுகாரமாய்ப் புலப்படுகின்றது. யாண்டு யாதினு பாசமோ ஆண்டவற்றின் அவிவேகத்தானே அறிகின்ற தெனக்கிரியையை யெல்லாவுலகு மியல்பானே யியம்புகின் றது, மதியின் கர்த்ருத்வத்தையத்யசித்து ஆத்மா அறிகின்ற தென அறையப்படும் அங்ஙனமே சைதன்யத்தையத்யசித்து ஞத்வம் புந்திக்கீண்டு புகலப்படும். ஞானமாத்மாவின் வடி வமாம் சோதிச்சுருதியிருத்தலின்; நித்தியமே யெதனுலத னுன் மதியாலேனும் ஆத்மாவாலேனும் அன்னியத்தாலே னும் எஞ்ஞான்றும் ஞானமியற்றப்படுவதின்று. 66

புத்தி விஷயத்திற் றார்க்கிக சௌகதாதிமத நிராசம் 67-74

ஆகத்தின் மாட்டகம் பிரத்யயமுண்டாத லொப்பப்புத்திக்கு ஞானகர்த்ருத்வம் லௌகிகர் கூறுவர். அங்ஙன மாத்மாவிற்கு மென்றுணர்க. சிந்திபங்களாய்ப் புத்திப்பிரபவங்களாயியற்றப்பட்டனவாய விருத்தி விசேடங்களான் மோகிதராயதார்க்கிகர் ஞானமுண்டாகின்றதென வுரையாடுகின்றனர், ஆதலின் அறிவாபாசமதிகளினவிவேகத்தால் அறிகின்ற தென்பது முதலிய வொலிகளும் பிரத்யயங்களும் அதன் ஸ்மிருதிகளும் பிரவிர்த்திக்கப் பட்டனவாம், ஆனனு பாசத்தின் ஆதரிசானுவிதாயித்வம் ஆனனத்திலத்யசிக்கப்படுகின்றதேபோலும் சிதாபாசன்றன் புத்திதர்மானுகாரித்வம் ஆத்மாவினிடத்தத்யசிக்கப்படுகின்றது, ஆதலிற் புத்தியின் பிரத்யயங்கள் ஆத்மாபாசத்தாற்றீப்தங்களாய்க் கிராககங்களொப்பக்கிளர்கின்றன; உன்முகாதிகடகிக்கின்றனபோலு மென்றுணர்க. பிரத்யயங்கடாமே யிலங்குகின்றன; தாமே கிராககங்களாகின்றன வென விவ்வண்ணங்கிராகக விருப்புண்மையைச் சௌகதர் பிரதிஷேதிக்கின்றனர். அந்தப்பிரத்யயங்கள் அன்னியக்கிராகியங்களன்றெனச் சௌகதர்யாது கூறுவரோ அதன்வாரணம்யாது நுதலுவீராகவெனின்? பிரத்யயங்களின் பாவாபாவங்கள் இயல்பாயுள்ள சான்றின் வேறாற் கவர்வனவாயினும் எக்காற் பிரத்தியயங்களின் பாவாபாவங்கள் சோகமென்னும் பிரத்தியபிஞ்ஞையின் பலத்தால் அவற்றான் கிராககமாய அன்வயிஸ்தாயி ஆத்மாத்துணியப்பெறுமோ வக்காலாபாசகற்பனையா லென்பயனென்க. பிரத்தியபிஞ்ஞான சித்தமாயினுங்கிராகக வடிவம் பிரத்தியயசமஞ்சடமேயாம், அசிதித்தன்மைக்குத் துல்லியத் தன்

மையுண்மையின் வேறு கிராககமுளதாங்காற் கிராகிய கோடிப்பதிதத் தன்மையுண்மையானே ஜாட்டியாபரிகாரத்தாற்றானே யசித்தமாய தென்னைம் பிரத்யயங்களின் கிராககமாமென் றுணர்க. 74

## ஆபாச விஷயத்திற் சங்காபரிகாரங்கள். 75-90

அற்றேலத்யக்ஷத்தின் சமீபமாங்காலன்றோ சித்தியாம் என் றுடன்பாடாமெனின்? அற்றன்று அத்யக்ஷத்தின்கண்ணனுபகாரித் தன்மையுண்மையினானும் மற்றைய விடத்தும் பிரசங்கம் வருதலினானு மென்க. யாவன் றுக்கித் தன்மையானும் மோக்ஷார்த்தித் தன்மையானும் பிரசித்த தேசிக வுபதேச சுரோதாவோ அவனேயத்யக்ஷனா? மற்றையனா? அத்யக்ஷத்திற்குத் துக்கித்தன்மையும் அர்த்தித்தன்மையும் நின்மதமன்றன்றோ கர்த்ருத்வாதி தர்மகனாய் விகாரியாய சுரோதாஜடவர்க்க பதிதனாதலின் சத்தகமத்யக்ஷனாயுளன் எனச் சதாதிசத்த நிர்த்திஷ்டப் பிரஹ்மாத்மக்கிரகத்தின்பொருட்டு யோக்கியனேயன்றாம் சத்தாகவேயுள்ளாயென மித்யோக்தி சுருதிக்கும் பொருத்தமாயதன்றாம், ஆபாசவாயிலாய் விவேகாபன்னமாய ஆத்மாகங்கார மிரண்டையும்பிரித்துணராது அர்த்தித்வாதிமையயார்ந்து சுரோத்ருத்தன்மையோடு மிராநின்றான் பொருட்டுத் தத்வமசியெனச் சுருதி யாத்மதத்துவத்தை நுவல்கின்றதெ்தன வுடன்படிலோ அக்காலங்ஙனஞ் சுருதிகூறிய தின் கிரகணங்கூடும். பிரத்தியக்குச்சைதன்யத்தினின் றும் அகங்காரத்தைப் பிரித்தே நீயேயெனப்பிரத்யயான்வயநிஷ்டத்வம் புகலுமாயினக்கான் முன்னுவன்ற வெழுதாமொழியின் மித்யோக்தித்வப் பிரசங்க வடிவதோடம் வருமென் றுணர்தற்பாற்றாம். நீயென்னும்

பதம் அகங்காரவாசகமா யத்தியக்ஷத்தைப் போதிப்பிக்கு மேல், அகங்காரத்தியக்ஷங்கட் கெங்ஙன் சம்பந்தமின்றிக் கூடும்; ஆதலி னெச்சம்பந்தத்தால் நீயென்னும் பதம் அத்யக்ஷத்தை லக்ஷயிக்குமோ அச்சம்பந்த மீண்டுகூறவே தக்கதாம். காண்போன் காண்பொருட்டன்மைச் சம்பந்தமுள தெனின்? அக்கிரியமாய வத்தியக்ஷத்தின்மாட் டஃதியாங்ஙனமேலுமென்க. அக்கிரியத்வமாயினும் தாதான்மியம் அத்தியக்ஷத்திற்குப் பவிக்குமெனின் எனக்காத்மா அத்தியக்ஷமா யிருக்கின்றதெனச் சம்பந்தக் கிரகண மிலதாங்காற்றுதான்மிய தீ யுளதாகாதென்றுணர்க. சம்பந்தக் கிரகணம் நூலாலெனமதிக்கின் அஃதொவ்வாது. அகங்காரத்திற்குச் சடப்பான்மை யுண்மையிற் சம்பந்தக் கிரகித்ருத்தகைமை பொருந்தாது நிர்விகாரத்தகைமை யுண்மையின் அத்தியக்ஷத்திற்கு மின்றென விருதோடங்கள்; சடத்தின்பொருட்டுச் சுருதிக்குப் போதகத்வாசம்பவ மூன்றாவது தோடமென முத்தோடங்களாம். கிரகணமாங்காலும் எனக்கத்தியக்ஷ மிருக்கின்றதென்று கோடற்பாற்றே யன்றி யானே அத்தியக்ஷனுயுளனெனக் கோடற்பாற்றன்றாம். உண்மையின் எனக்கத்தியக்ஷ மிருக்கின்றதென்பதாலும் பொருந்தாதென்க. அதிருசியாய மதியாயது திருசிவடிவமாயெக்காற் சந்ததமிலங்கு மெனவுடன்பாடோ அக்காலப்புந்தியின் விருத்திகளும் தப்தாயவிஸ்புலிங்கங்கட் கெரியுருப்பான்மை யேய்ப்பத் திருசிவடிவங்களாம். அவதி பூதமாய சிதாத்மாவின் சகாசத்தானே உலகின் ஆபாசம் பிரத்யபமுமதனதபாவமுமாம் உத்திபொருந்தலின்; அயலாற்றாலன்றென்க. எனவே ஆபாசவுடன்பாடின்றேற் பாதகமும் ஆபாசவுடன் பாடுண்டேற் சாதகமுமாம்; மதிக்குமான்மக்கிரகம் யானுள

னெனவேனும் இங்ஙனமாமே லயப்பிண்டத்திலனற் சங்க்ராந்தியொப்ப மதியின்பாற்றிருசி சங்க்ராந்திவிசாரமாமெனின் இச்சோத்தியத்தை ஆதரிசத்திலானனுபாசம் போலென்பதான் முன்னமே நிராகரித்துள்ளேம். கிருஷ்ணவர்ணமயம் லோகிதவர்ணமாய்த் திகழ்கின்றதென்னுமித் துணைமாத்திரஞ் சடபுந்தியின் சைதன்யாபாசத்தன்மையிற் றிருட்டாந்தமாம் திட்டதாட்டாந்ததுல்லியத்வம் யாண்டுமுற்றினும் ஒவ்வாதென்றுணர்க. அங்ஙனமே சேதனுபாசமார்ந்த சித்தமானது சைதன்யம்போலாம். ஆதரிசத்திலானனுபாசம் போலுமுணர்க. அவ்வாபாசமுமித்தையென நுதலப்பட்டதேயாம் சித்தஞ் சேதனமென்பதோ றாலாக விவர்ச்சிதமாம்; ஆயினுகத்திற்குமப் பிரசங்கமாம் அங்ஙனமே விழியாதிகட்குமாம். அஃதுமாருகவெனின்? லௌகாயதிக சங்கதியாதலின் அஃதொவ்வாதென்க. சித்தத்தின் மாட்டாபாசம் பவியாதேலக்கா லகம்பிரஹ்மாஸ்மியென்னு முணர்வு பவியாதென் றுணரற்பாலதாம். அகம் பிரஹ்மாஸ்மியென்னுந் தீயிலதாங்காற் றத்வமசி வியர்த்தமேயாம் யாண்டுங்காண்டலின்மையின் வியர்த்தமாகுக வெனின்? இவ்வாக்கியம் யுஷ்மதஸ்மத்தென்னும் அனுத்மாத்மவிபாகஞ்ஞன்பாற் பயனதாமென்க. 90

## யுஷ்மதஸ்மத் விவேகம். 91-98

இம்மகவாதி யென்னதென்னும் பிரத்யயங்கள் அனுன்மாவின் கண்ணே யையமின்றி யறியத்தக்கனவாம். யானென்னும் பிரத்யயம் ஆத்மாவின்கண் ணிட்டமாம். இஃதிருக்கின்றேனென்னு மிரண்டு மான்மானுன்மாக்களின் பிரத்யயங்களாம். அன்னியோன்னிய வபேக்ஷையால் அவைகட்

குப் பிரதானகுணத்வ வுடன்பாடாம், விசேஷண விசேஷி யம் அங்ஙன முத்தியாற் கிரகிக்கத்தக்கதாம். முற்சுலோகத் தின் மத்தியில் நிர்த்திஷ்ட அஸ்மதர்த்தமாய ஆன்மாவின் விசேஷணம் இஃதென்னதென்னு மிவ்விரண்டுமாம். . எங்ஙனம்:—தனி, கோமானென்பன, அஃதொப்பவாகம் அகங் கர்த்தாவாய வான்மாவிற்கு விசேஷணமேயாம் ஆத்மாவிற்கு மகங்கர்த்தாவிசேஷணமாம். மதியாரூடமாய யாவும் அகங் கர்த்தாவோடுஞ் சான்றின் விசேஷணஞ் சந்ததமாம். கிஞ்சி லும் பரிசியாமற் சந்ததஞ் சருவாவபாசமாம். ஆதலினுணர் வுருவமே யெஞ்ஞான்று மான்மாவெனத் துணியப்பெறும். லோகபுந்தியை யபேக்ஷித்து எவ்விந்நுதலிய விசேஷணவிசே ஷியாதி யாவும் அநான்மபூதமாம். அஃதவிவேக மதியினரின் றிருட்டியா லுளதாம். விவேகிகளின் றிருட்டியானேயாவு மின்றாம். ஆன்மபதார்த்தந்திருக்கா மொருக்காலுந் திருசிய மன்றாம்; யாது திருசியமோ வது விசேஷணபாவம் விடா தாதலிற் றிருக்குமெய்யாம் திருசியம் பொய்யாமென அநி ருத சடபரிச்சின்ன வியாவிருத்த சத்திய ஞானானந்தப் பிரத்யக்கனந்த வடிவமான்மாவெனப் பதார்த்தான்வய வியதி ரேகங்களாம். ஆன்மா சைதன்ய மென்பனவாதியாய பதங் கள் கேவலவான்மாவின் சமர்ப்பகங்களாம். கர்த்தா போக்தா முதலனவோ கேவலம் பூரணான்ம விஷயங்களன்றெனப் பதான்வய வியதிரேகங்களாம். இவ்விரண்டும் அஸ்மதர்த்த விஷயத்துணிவினுாகங்களேயாம். வாக்கியார்த்தத்திற்பதார்த் தவைக்கியத்தினே தத்வமசிவாக்கிய மொருதலேயாய் வேண் டற்பாலதாமென்றுணர்க. துயிலிலான்மாவின்கண்ணற்பமும் வேறுயாங் கண்டேமில்லையென வுலகு தமதான்ம திருட்டி யாய சைதன்யத்தை நிவாரிப்பதின்றாம்; பின்னரோ திரி

புடியை நிஷேதிக்கின்றது "சயஞ்சோதி" "திருஷ்டா வினின்றும்" என்பனவாதிய மறைகள் சம்வித்திற்கு அத் தித்தகைமையையும் அதற்குக்கூடத்தத் தகைமையையும் சுயமேசொல்கின்றன. அங்ஙனம் பிரமாத்ராதி பேதத்திற்கு அசத்தகைமையையும் "அதனினிரண்டாவதின்றும் அத னினன்னிய மசத்தா"மென்பனவாதிய சுருதிகள் சுயமே சொல்கின்றன. இங்ஙனம் பிரமாத்ராதிப் பிரத்யய வவகதி கள் மறைபாலே பிரித்துணர்த்தப் பெற்றனவாம். 98

பதார்த்ததத்துவத்தை யுணர்ந்தபுருடன்பால் மகாவாக்கியம் பயன்மேய விஞ்ஞானத்தைப் பயக்கின்ற தென்பது. 99-104

இங்ஙனம் சுருதிலோகப் பிரசித்தத்தாலும் அன்வயவிய திரேகங்களாலும் அவாந்தரவாக்கியார்த்த முணர்ந்தான் பாற் சுரோதாவின் மோகமேகுவான் மகாவாக்கிய வடிவமாய சுரு தி யதுநீயாயுள்ளா யென வுபதேசித்தருளியது. ஸ்ரீ நான் முகன்முசரதர்க் கெங்ஙன நுதலன்மாத்திரத்தானேதமத் தைத் தணர்ப்பித்தாரோ ஸ்ரீ ராமர்க்கு விஷ்ணுத்வ சம்போ தத்திலயன் முயல்வையடைந்தாரில்லையோ; அங்ஙனம் பிரத் தியக்கான்மச் சோதியின்கண் ணகஞ்சத்தத்தினெங்கிட்டை யிலக்கணையாற் பரியவசிதமாமோ. அந்கிட்டை பிரஹ்மமாயு ள்ளா யென்பதானுதலவேபட்டதாம் ஆண்டுபதேச மாத்திர த்தா லகம்பிரஹ்மாஸ்மி யென்னும் ஞானோதயமாங்கான் மோகாபோக ரூபபலன் பவிக்குமென்றுணர்க. வாக்கியஞ் செவிகொண்டமாத்திரத்தான் விஞ்ஞான முளதாகாதே லக் காற்காரியபரத்வமவசியங் கற்பிக்கத்தக்கதாம்; ஈண்டங்ஙன மன்று அகம்பிரஹ்மாஸ்மி யெனச் சாஸ்திரோபதேச வியவ காரத்தான் முன்னமுமான்மாவிற்குச் சுயமே சற்பாவமிட்ட

மாமாதலிற் சுத்திரூப்பிய் ஞானம் போலப்பிராமாண்யமன்றென்க. ஆப்தவாக்கிய சிரவணகாலப் பிரமையாயது அசஞ்யாதியுபலக்ஷித சம்சாரத்திணிவர்த்தியின் பொருட்டுண்டாகின்ற தாதலி னிட்பலத்வ சங்காவகாசமின்றும். தத்துவமசியாதி வாக்கியத்தின்கட் டிரிகாலத்திலுமையமேயின்றும். பதார்த்தாவகத புருடனுக்குப் பிரதிபந்தவிகினத் தன்மையுண்மையின் வாக்கிய சிரவணகாலத்தே ஸ்வாத்மாவின் கண்ணே பிரமாதிரமாயுண்டா மைய்யமின்றுமென்க. அனுபவஸ்வரூபத் தகைமையுண்மையிற் சுயமான்மாவிற்கு நிராகரிக்கத் தகாமையுண்மையின் அனுபவாயோக்யார்த்தத்வ ஆசங்கைபின்றுமன்றே. 104

## பிரதிபத்தவ்யார்த்த சுபாவ நிரூபணம். 105-140

தத்துவமசியென்னும் வாக்கிய சிரவணானந்தரம் பிரதிபத்தியில் அகமிருக்கின்றேனென என் சத்தேயடையப்படுகின்றதா? அல்லதென்னன்னியமா? சத்தேயெனின்? சச்சப்தார்த்தத்தால் அகஞ்சப்தம் முக்கியார்த்தத்திற் கவரத்தக்கதாம். பிரத்தியக் கான்மாவினன்னியமாமேற் சத்தகமெனக் கவருமுணர்ச்சி நரசிருங்கமேயாம். ஆதலின் முக்கியக்கிரகமாங்கான் மெய்யனுபவத்திற்கு வாரணமின்றும். அந்தக்கரணமுமதன் பரிணாமமுமாய விரண்டும் எதனுபாசங்களுடையனவாமோ அவைகட்கு அச்சேஷபூதத் தகைமையாம்; மேலும் அவைகட் கசித்மத்வ முண்மையினனுஞ் சைதன்யத்திற் பலங்கற்பிக்கப்படும். வேந்தன்பால் வெற்றியாதிகள் வியப்பக்கூடத்தரிடத்தும்பலமருகமாம். சாபாச விருத்தி விருத்திமான்கட்குப் பலஸ்வரூபத்வா பாவத்தானும் பலோபாதானத்வா

பாவத்தானும் பலங் கூடத்தரின்பாலேகூடுமெனக்கொள்க. எவ்வாபாசங்கொண் டாதரிசமானனகாரமாமோ அஃதே யவ்வாபாசமாம். அஃதொப்பப் பிரத்திய யாதரிசமாயவகங் காரம் எஃதாலிலங்குமோ அச்சிற்பிரதி பிம்பம் பரமான்மா வேயாம்; அன்றதினின்றன்னிய மகங்காரத்திலகமாபாச கோ சரம். அங்ஙனமாகவே அகம்பிரஹ்ம மென்னும் வாக்கியார்த்த திபொருந்தும் அத்யஸ்தாம் ஸாபோகமாத்திரத்தாலன்றி ஆ த்மாவிற்குக் கர்மத்வ மின்றென்றுணர்க. இங்ஙனஞ் சிதாபா சாப்புபகமமாங்காற் சதகமஸ்மியகஞ் சதஸ்மியென்னும் வடி வப்பிரதிபத்தியுண்டாம்; வேருற்ருலின்ரும். மேலும் அது நீ யென்னு முபதேசமும் வாயிலின்மையாற் பயனில் கூற்றுமெ ன்க. கேட்பானுக்குபதேசமாமே லக்காலது பயன் பெற்றதா ம் அக்கேட்போனுந்தகைமையும் அத்யக்ஷனுக்குடன்பாடன் றேற் கேட்போனுந்தகைமையாவனுக்காங்கொல்? (எவனு க்கு மாகாதென்பதாம்.) அத்தியக்ஷத்தின் சமீபத்திற் புத்திக் கேயாமென்றுடன் பாடாமெனின்? காட்டத்தின் சந்நிகிதத் தாற் புந்தியிலதிசய முண்டாகாததேபோலும் சந்நிகிதாத் யக்ஷமாற்று மதிசயம்புந்திக்கின்றே யாமென்க. அதனலாற் றப்பெற்ற வுபகாரம்யாதேனும் மதியின் மாட்டாமேல் ஆபா சவுடன் பாடிலதாங்கா லத்யக்ஷத்திற்குப் பரிணமித்வம் பனி ப்பதொருகலையன்றே. சுருதியாதியனுக்கிரக முளதாம் போழ்து ஆபாசமங்கீகரித்தலிற்ருன்யாது கோதாங் கூறுதி. அற்றேல் ஆபாசமுடன்படினே பரிணமமாமெனின்? அற்ற ன்றுகட்செவியாதிகட்கு இரஜ்ஜுவாதிநிபத்வம்போன்றும் இரஜதாதிகட் கிதமான்மகத்வம் போன்றும்! மதியாதி கட்குச் சிந்நிபத்வமித்தையேயாம். ஆன்மாவிற்குப்போக் த்ருத்வாபாசமு மித்தையேயாம். எங்ஙனம் பொய்ம்மை

யோ வங்ஙனம் முன்னமே ஆதரிசத்தின்மாட்டானனத்வம் போன்மையும் ஆனனத்திற் கொப்பவான்மாவிற் கவிகிருத த்வமு மறைந்தாமன்றே. கேவலான்மாவினவபாசத்தாற்ற ணியாயே ஆத்ம பாசத்வஞ் சித்தியாதேல் ஆபாசாவபாச த்தானே யாத்மபாசம் பவிக்கும்;

அக்காலிம்மகத்திலன்னியோன்னிய சம்ஸ்ரயமாம் ஆன ஞதிகட்கோ வேறாய்ச் சித்தியாம். அத்யக்ஷத்திற்குத் தனி யே சித்தியாங்கா லாபாசத்திற்குத் ததீயத்வமாம் ஆபாசத் திற்குத் சதீயத்வமாங்காலே யத்யக்ஷ வ்யதிரிக்தத்வ சித் தியாமெனின்? இங்ஙன் வினுதல் தகாதாம், என்னே? கனு வின்கண் ணங்கச்கரணத்திற்கு மான்விற்கும் வதனமு மத னிழலும்போலும் அன்னியோன்னிய நிரபேக்ஷமாகவே சித் திகூடலினென்க. சயந்தனமாதிகட் காண்டு சூனியப்பான்மை யுண்மையின் கூவிரமாதி யாகாரமுற்ற பிரத்யயத்திற்கே சுவ ப்ரகாச சைதன்யத்தாற் கிரகமாம். அவகதியானன்கு வியாப் தமாய் விஷயாகிருதிப் பிரத்தியயமுண்டாம் உண்டாய வதன் கண் ணெவ்விஷயாகார முளதோ அஃதே பாகியவிஷயமென வுடன்பாடாம். அப்பாகியவிஷயம் கர்த்தாவிற்குச் சாத்தி யமா யுத்தேஸ்யத்தகைமையானே யிட்டதமத்வமாதலிற் கர்மமாம். அவ்விஷயேச்சாவான்காரியத்திற் செய்யெனவே வப்படுதலினென் றுணர்க. எப்புத்தி பரிணமத்தின்கண் விஷயத்தாலாகாரஞ் சமர்ப்பிக்கப்படுமோ அஃதீண்டு விஷய விளக்கத்தின்கட் காரணமெனப்படும். எச்சிற்பிரதிபிம்பத்தி னுபாசத்தாற் சம்வியாப்த வசங்காரம் பரிணமிக்கின்றதோ அச்சிதான்மப் பிரதிபிம்பம் ஞாதாவென நவிலப்படும். இத் திரிபுடியைப் பிரித்து ஆகமாபாயியாய இம்மூன்றில் அநாக

மாபாயியாய சான்ஸ்ற யாவனறிவனோ அவன் துவம்பத லக்ஷிய பிரத்தியக்கான்மவித்தாமெனக் கொள்க. சப்யக்சம் சயமித்யோக்தங்களாய பிரத்யயங்கள் பிறழ்வுடையனவாம், அவற்றின்கண் ணவகதியேகமேயாம்; பேகமோ பிரத்யயார்ப்பிதமாம். மணிக்குபாதி பேதத்தாற் பேதமுளதாவதே போலும்; அவகதிக்கு அசுத்தி பரிணும முதலனயாவும் பிரத்யய சம்ஸ்ரபத்தாலேயாமென்பது துணிபாம். பிரத்யயங்களின் ஸ்புரணமும் கிரகணமும் ஸ்வரூபலாபமும் ஈண்டு அபரோக்ஷ வியல்பினதாய வயலொன்ருற் பவிக்கத்தக்கனவாம், அசிற்சுபாவத்தால், பிரதீபம்போல்; என்னுமிவ்வனுமானமே யிவணியம்பப் பட்டதாம். யாதொருவாதி என் யாதாமோரளவையானே யாக்கையாதியினயலாயவாத்மகத்துவத்தைக் கவர்கின்றனனு? அல்லதென்னளவையின்றியே யயலினீக்க வாயிலாய்ப் பரிசேடத்தாலா? சத்தப் பிரமாணத்தாலனுத்ம நிவிருத்தியேயீண்டு நுதலப்படுமாமேல், அத்யக்ஷத்திற்கப்ரசித்தத் தன்மையுண்மையிற் சூனியப்பான்மையேமேவும் அற்றேற் சேதனனீயெங்ஙனந் தேகமெனின்? அற்றன்று அப்பிரசித்தியினுல்; வேருய்ச் சேதனத்தின் சித்தியாங்காலன்ருே அன்னிய ஹானத்தாலிங்ஙனமாம். சேதனத்திற்குச் சுயமபரோக்ஷத் தன்மையுண்மையினத் யக்ஷஞ் சுயமுளதென்றேயுணர்தற்பாற்ருமெனின்? இங்ஙனமாயிற் சூனிய வாதியோடு சமமாய் அன்னியத்தின் பிரபோதமன்ருேவாம். யானிதனை யுணர்ந்துளே னென்னும் விவகாரத்திலுலகின் யுகபந்நினைவுகாண்கின்றமையிற் கரணங் கருமங் கருத்தாமூன்று மேககாலத்திற் சித்தங்களாம் ஆதலினத்யக்ஷஞ்சுயஞ் சித்தமென வுணரப்படுமெனின்? நன்று நவின்ருய்! ஸ்மிருதிக்குப் பூர்வானு பவகமகத் தகைமையானே

பிராமாண்யமாயினும் யுகபத்திரிதய சித்திகமகத்தகைமையி ன்றும். முன்னம்முறையே கர்த்ராதிகளின் கவர்ச்சியுண்டாவ தேபோலும் பின்னமும் ஸ்மிருதியின் சம்பவமாம். ஆதலின் நைரந்தர்யமாய் யௌகபத்யம் விபாவித்தன் மித்தையே யா மன்றோ மேலும், இஃதையுணர்ந்தே னென்புழி யித்மாகாரந் திரமாய்ப் பிரத்தியக்கவாவானிகழ்கின்றது ; என்னை யென் புழியோர்துருவமாய்ப் பராக்கவாவாலுணர்ச்சியாம். ஆகவே யாண்டன்னியப் பிரதியோகிகமவாவப்படுமோ ஆண்டுயௌ க்ப ந்யம் பொருந்தவே பொருந்ாதெனக் கொள்க. மேலும் பிரமாதாதிகளின் கவர்ச்சியினுமீண்டு மூன்றி னபேக்ஷகூட லின் அனவஸ்தையன்றோவாம். அக்கர்த்ராதிகளாலே ஸ்வ ரூபசித்தி சம்பவித்தலின் என்னைகொலோ அனவஸ்தையா மாறெனின்? உய்த்துணர்ந்தன்றோ வுரைத்திலாய்! பிரமாதா வொன்றன்கண்ணே யுபக்ஷீணமாய சர்த்ருத்வம் கரணகர் மங்கட் காங்கொல்! மேலும், கர்த்தாவின்கிரியையாலியாது வி யாப்தமாவானிட்டதமமாமோ அதுக்ருமமெனப் பாணி னிபகவானுலருளப்பட்டுளது. ஆதலிற் கர்மத்திற்குக் கர்த்ரு தந்திரத்வமிஷ்டமாம், அன்னியமாய அத்யக்ஷதந்திரத்வமின் றுமென்க காட்சியளவையானேனுங் கருதலளவையானேனும் உரையளவையானேனும் சருவபதார்த்தங்களின் சித்தியாம்; அஞ்ஞன் பொருட்டயலாறின்றும் அத்யக்ஷத்தின் சித்தியும் பிரமாணத்தாற் சித்திக்கின்றதா! அல்லது பிரமாணமின்றி யே சித்திக்கின்றதா! ஸ்வரூபப்பிரகாச மாத்திரத்திற்குப் பிரமாணமின்றிப் பிரசித்தி யிருப்பினும் அஞ்ஞன்பொருட் டுப் பொருந்தாததாம். சேதனத்திற்கேயஞ்ஞத்வ முடன் பாடாமே லக்காலதற்குச் சேதனத் தகைமையில் வேறு பிர மாணஜன்னியமதி யபேக்ஷிக்கத்தக்கதாம்; அன்னிய வகங்கார

த்திற்கே யஞ்ஞதையுடன் பாடாமேல் அத்யக்ஷ விஞ்ஞானத் திறே அன்னியமதி துருவமாய்ப் பவிக்கத்தக்கதேயாம ன்றோ. சித்தியென்பதென் ஞானமா? அல்லது ஸ்வரூபலா பமா? அல்லது உபயான்யப்பிரகாரமா? ஞானமே சித்தியா மெனின்! முன்னுதலியபக்ஷங்களை நீ நன்கு ஸ்மரிக்கக் கட வோனாகின்றாய். ஸ்வரூபலாபமே சித்தியாமெனின்? முய ல்கை ஆண்டு பயனில் கூற்றாம்; ஏனெனின்? பொருள்கள் யாவற்றிற்குந் தன்னேதுவாற் றன்வடிவலாபரூப சித்தியா மெனச் சருவலோகப் பிரசித்தத்தகைமையேய்தலினுண்டு பிரமாத்ராதிப் பிரயாசம் பயனில் கூற்றன்றோவாமெனச் சிந் தித்துத் தெளிதல் நன்றாம். ஞானஞேய ஞாதாக்களுண்டென் னும் வாதத்தில் ஞாதத்வமே சித்தியாம். அத்யக்ஷாத்யக்ஷபங் கட்கு ஞேயத்வமே சித்தியாம். ஆத்மலாபத்வமன்றாம். ஸ்ப ஷ்டத்வமே சித்தித்வமெனப்பட்ட மதானுசாரமாய்க் கற்பிக் கினே கர்மகர்த்ராதிகட்கு ஸ்பஷ்டத்வ மஸ்பஷ்டமாம். கர்த் ராதி விலக்ஷணமாய சான்றிற்குச்சிதாபாச ஜனனத்தாலுண் டாருக; கர்த்ராதி வடிவத்திற்கோ ஜடப்பான்மைபுண்மையிற் கூடாததாமென்றுணர்க. தரிசனவிருத்திரகிதனையவந்தனுக்கு ஞாதாவின் விஷயீபூதமாய கடத்தின் யாதொரு ஸ்பஷ்டபா வமுளதோ அது ஞான விஷயதாதிரிக்தம் பட்டமதத்திற் பவிப்பதேயின்றாம். ஆகவேபட்டமதானுசாரியாற் கர்த்ராதி கட்குப் பிராகட்ய வடிவஸ்பஷ்டதை யிஷ்டமாயினஞ்ஞான் றுத்ரஷ்ட்ருதை அதன்விலக்ஷண அத்யக்ஷ கர்த்ருகை யவசி யம் உடன்படத்தக்கதாம் ஆதலிற் கர்மாதி ஜடத்திற்கு பிர காசாபரபரியாய ஸ்பஷ்டதையின் சம்பவமின்மையின் ஸ்ப ஷ்டதை சித்திசப்தார்த்தமன்றாம். பின்னையோ ஞான விஷ யதையேயெனக் கர்த்ராதிகத சிதாபாசனவாயிலாய் அதன

திஷ்டானபூத சிதாத்மாவிதிமுகமாயே பிரதீபாதி திருஷ்டாந்த அநுமானாதியளவையா லுணரத்தக்கதாம். 140

## விஞ்ஞானவாதி பௌத்தமத நிராகரணம். 141-152

அநுபூதியாய சம்வேதனத்திற்கு அன்னியகர்த்ராதியின்கண் ணபேக்ஷையால் நினக்கென்பயனும் நுதலுதி. அநுபவிதாவின்கண் ணஃதுடன்படத் தக்கதாமெனின்? அவ்வநுபவிதாவு மெம்மதத்தி லநுபூதியேயாம். புத்தியினியல்பபின்னமாயினும் மயன்மதிமனுடராற் கிராகிய கிராகக கிரகணபேதவான்போ லிலக்ஷிக்கப்படுகின்றது. யாவர் மதத்தின்கண் ணெவ்வநுபூதியுளதோ அஃதே கிரியை அஃதே காரகமெனவறையப்படுகின்றதோ கணபங்குரத்தன்மையானே விரம்ய வியாபார அயோகத்தால் அவர் மதத்தின்கண் ணவ்வநுபூதிக்குத் தனது வ்யதிரிக்தமொன் றபேக்ஷணீயமென்பது யாண்டையதென்க, இவ்வநுபூதிக்குச் சொரூபசத்வம் கணபங்குரத்வ மிட்டமாயின் அநுபவத்திற்கீண்டுஞ் சற்பாவமுண்மையின் சகர்த்ருத்வமும், நினக்குடன்படத் தக்கதாம். யாதொருதர்மமு முடன்படுவதின் றாமாயினென்னுமாலோவெனின்? என்னும் நின் பக்ஷஹானத்வமேயாம். இன்மைத் தன்மையாதி நிவிருத்தங்களாய வுண்மைத்தன்மை முதலனவாய தருமங்களுடன்பாடாமெனின்? இங்ஙனமாயின், அநுபூதிக்குக் கணபங்குரத்வஞ் சித்தியாதாம் எதனால் நின்னநுபூதிக்குச் சுவாலக்ஷண்யமாய நிர்விகற்பமாத்திரமாமோ. ஸ்வரூபமே யிலக்கணமாயதைச் சீமாவாயுடையது நாசம், எனவே நின்மதத்தின் கண் ணுவிர்ப்பாவ திரோபாவங்களின் அவதிபூதமாய ஸ்திரமின்மையின் சத்வவிநாசங்கட்குச் சித்தியின்றாமென்க. நாசம் அநாசநிவிருத்தித்வமாம், ஆகவே

நாசஞ் சித்திக்கின் அதன்விரோதியாய அநாசத்தின் சித்தியாம் அதன்சித்தியாங்கால் அதனபோஹவடிவ நாசஞ் சித்தியாமென்றுணர்க. அகோபதாபிதேயமாய அஸ்வத்வாதிகட்கசத்வங்கோத்வ மென்பதன்றே நின்மதம் அது கோத்வலக்ஷணமன்றாம், என்னை? அஸ்வத்திற்குங் கோத்வவியாவிருத்தி யிலக்சணமாதலிற் பரஸ்பராபேக்ஷை சித்தித்தலினென்க. க்ஷணவாச்சியமாயு மெய்பொருளுளதோ அஃதும் க்ஷணிகாபாவமே நினக்காமாதலின் ஸ்திரமும் க்ஷணிகத்வ விரோதியென வுன்னூலுடன்பட்டதேயாம். அபாவத்திற்கு வடிவத்தாற் பேதமின்றேனும் அகோத்வம் அஸ்வத்வம் அனஸ்வத்வங் கோத்வமென்பதாதி நாமங்களால் வடிவபேதம் உடன்பாடாமெனின்? ஒரு நிர்ச்சுபாவாபாவத்திற்கு நிரர்த்தகசம்ஞாபேதங்களால் அநேகபதார்த்தா சாதாரணத்தகைமையால் வியாவிருத்தி யாத்மத்வம் நினக்கெங்ஙனமேனுமெனமறுக்க. பின்னங்களின் வியாவிருத்தியபோஹமாமேற் பேதப்பிரதியோகிசட்சளவின்மையின் அதனவசமமின்றி அதனபோஹ மனவகதமாதலின் அவ்வபோஹத்திற்குக்கோவின் கண் விருத்தியெங்ஙனமாம். அபின்னங்களின் வியாவிருத்தியபோஹமாமேலோ அஜத்வ அஸ்வத்வாதியபோஹவடிவ எல்லா அபாவங்களும் கோவினிதரேதர வியாவிருத்தத்வபுத்தி ஜனகங்களன்றாம். அங்ஙனமே யெவ்விசேடங்களாய கண்டமுண்டத்வாதி பாவரூபங்களும் பேத்யபேதங்களின் பேதஞ் சித்தியாமையிற் பேதகங்களன்றாம். நின்மதத்திற் சம்வித்திற்கு நிர்விசேஷத்தன்மை யுண்மையின் நாமஜாதியாதிகள் விசேஷணமன்றாம் போற்கவாதிகட்கு அகவாதி வியாவிருத்தங்களேனுங் கண்டாதிகளேனும் விசேஷணமன்றாமன்றே. எக்காட்சியுங் கருதலும் விவகாரத்தி விச்

சிக்கின்றனேயோ அது கிரியாகாரக பேதங்களா லவசியம் அங்கிகரிக்கத்தக்கதாம். ஆதலின் நீலமேனும் பீதமேனும் கடாதிகளேனும் விசேஷணஞ் சம்வித்திற்காம், எதனுலேயுமனுபவிக்கப்படுகின்றதோ அதுவும் ஞாதாவெனக் கொள்ளற்பாலதாம். ரூபாதிகட்குக் கிராகியத்தகைமை யுண்மையிற் கிராககமன்னிய மாவதேபோலும் பிரத்யயத்திற்குக் கிராகியத்தன்மை யுண்மையிற் கிராககமயலாம் அஃதொப்பக் கிராககமுங் கிராகியத்தின் வேறாம் வியஞ்சகத்தன்மை யுண்மையிற் பிரதீபம்போலுமென்க. 152

## பிரத்யய அத்யக்ஷங்களின் சம்பந்தஞ் சாற்றல். 153-159

அத்யக்ஷபமாயபிரத்யயத்தோடு, அத்யக்ஷமாய திருக்கிற்குக் காண்பான்காட்சித் தன்மைச் சம்பந்தம் விடுத்துவேறெத்தகைத்தாய சம்பந்தஞ் சம்பவிக்கும். அத்யக்ஷத்தாலாற்றுந் திருட்டி திருசியத்தை வியாபிக்கின்றது அல்லது நித்யாத்யக்ஷத்தாலாற்றும்யாதேனு முபகாரம் புந்தியின்கட் பவிக்கத்தக்கதாம். அவ்வுபகாரமு மதனிபத்வமாமெனமுகப் பிரதிபிம்பதிருட்டாந்தத்தான் முன்னுதலினுமன்றே. கடாதிகளின் கண்மதிக்குச் சம்வியாப்தியும் வியஞ்சகத் தகைமையால் ஆலோகாதி சம்வியாப்தியே போலுமாமென்க ஆலோகத்தின் கட்டிதமாய கடங்கடுப்பப் புத்தியாரூட மாமென்ப கடாரோகமுந் தீவியாப்தியாமென்றுணர்க. மதிக்கு விஷய வியாப்தியின்கட் கிரமமுண்டாம். தீயின் வியாப்தி முன்னமாம் அதன்பின்னே ஆன்மாவின் அனுக்கிரகமாம் சர்வாத்யக்ஷத்திற்குக் காலகம்மாதி கதழ்வுறக்கிரமம் பொருந்தாதாம். கர்த்ராதிகாரகாபேக்ஷையாற் கிராகிய சேஷமாங்காலே யாதினுக்கு விஷயக்கவர்ச்சியுண்டாமோ அதுசித்

தம்போற் பரிணாமியாம் அங்ஙனமான்மாவிற் கின்றாமெனத் தெரித்தெளிக. அத்யக்ஷாகமென்னும் ஞானம் புந்திக்கே யவஸ்தா விசேஷமாமன்றி அவிசேஷத் தன்மையுண்மையின் அத்யக்ஷத்திற்கின்றாம் சிதான்மாவிற்குப் பரிணாமாப்புபகமஞ் செய்யிற்பரிணாமிக்குச் சித்தம்புரையச் சுவான்ய வேத்யத்வ நியமத்தால் ஆத்மாவிற்கு மன்னிய சான்றுகற்பிக்கத்தக்க தாம் அதற்குப் பரமின்மையினஃதனுபபன்னமேயாமன்றோ; என்னை? கற்பிப்பான் பிரமாண மின்மையினானும் கற்பிக்கினோ அனவஸ்தானம் வருதலினானு மென்க. 159

## விவேகா விவேகங்கட்குப் பாத்ய பாதக பாவம் பகரல். 160-172

யான்முக்தனென விகாரியாய கர்த்தாவான் முக்தத்வ மனுபவிக்கப்படுமேலாயின் நான் கர்த்தாவன் றெனக்கர்த்ருத்வ உபமர்த்தனத்தாற் சுகதுக்க அசம்பந்தம் ஆண்டு பொருந்தாதன்றோ. குண்டலிப் பிரத்யயம்போலும் துக்கிசுகிகிருசன்றாலன்காமிகுரோதி யென்பன தேகாதியபிமானத்தாற் கிளம்பினவா மென்பதுதுருவம். ஈண்டவிவேகமேய அபிமானிகப்பிரத்யயமாயது விவேகமாய தூயதுவம் பதார்த்தாத்மாபிமானிப் பிரத்யயத்தாற் பாதிக்கப்படும். மாறாமேற் பிரமாணத்திற் கப்பிரமாணத்வாபாதத் தாலியாவுஞ் சூனியாந்தமாம் தாகச் சேத விநாசங்களில் ஆத்மாவிற்குத் துக்கித்வமாம் அயலாற்றாலின்றாம், ஆமேற்றாயினுமன்றோ புலப்படவேண்டும். அன்னியன்றன் றாகாதிகளிலன்னியன்றாக்கி யாவதும் யாண்டுங்காணவேகாணோம். ஆதலிற்றுக்கியானென்பது கற்பனையென்றுணர்க. அஸ்பர்சத் தன்மையுண்மையின் அதேகத்

தன்மைபுண்மைபிற் சந்ததமியான்றுகியனன்றும் ஆதலின் மைந்தன் மிருதமாங்கான் மிருதி புரையப் பொய்யபிமானத் தாற் கிளம்பியதாம். குண்டலியானென்னுமிது விவேகி யாற்பாதிக்கத்தக்கதேயாம், ஆங்கே கேவல சுத்தப் பிர ஹ்மமேபானென்னும் புந்தியாற்றுக்கியென்னும் பிரத்ய யம் கிராகரிக்கத்தக்கதேயாம் எவ்வவத்தையிலேனும் ஆத் மாவிற்குத் துக்கித்வம் பிரமாணசித்தமாமேலிச்சையா லச்சக்திகற்பிக்க! பொய்யபிமானத்தாற்றுக்கியாதலின் அது கற்பிப்பான் கூடாதன்றோ அம்மித்தியாபிமான நிபந்த னத் தன்மைபாற்றுக்கித் வானுபவம் அர்த்தாபாதனக்ஷம மாம். அஸ்பரிசமாயினும் அசலமாயினும் ஸ்பரிசசலன சயனைத்தானைபவேசனபரிச்சின்ன த்வாபிமானங்களாமா போன் மானசதுன்பம் ஆத்மாவின்கண் ணவிவேகத்தாற் பார்க்கப்படும். விவேகரூப ஆத்மபுந்தியாற் சலனதிசமமாய லக்கணறும். அவிவேகவியல்பான் மனமிச்சையின்றேனுஞ் செல்கின்றது அக்கால ஞர்காணப்படுகின்றது நைச்சல்யமாங் காலோ ஆத்மாவிற்கிடரேயின்றும் ஆதலிற் பிரத்தியக் காத் மாவின் கண்ணத்துக்கம் பொருந்தவே பொருந்தாதென்ப தொருதலையாம். இவ்வாக்கியமகண்டார்த்த நிஷ்டமாம், நீசற்பதங்கட்குத்துல்ய நீடத்தன்மைபுண்மையின் நீலாஶ்வ பதம் போலுமென்க: (ஏகத்திரவியபர்யவசா யித்தன்மை யானே சாமானதி காண்யத்திற்றிருட்டாந்த மெனக்காண்க) நிர்த்துக்க வாசிபாய சச்சப்தத்தோடு சாமானதி கரண்யத் தாற் றுவஞ்சப்தத்திற்குச் சச்சப்தார்த்தத்வமாம்; பிரத்யக் காத்மாபி தானமாய துவஞ்சப்தத்தோடு தச்சப்தமாய சச்ச ப்தத்திற்குச் சாமானதிகரண்யத்தால் அபரோக்ஷாத்மத் வஞ்சித்திக்கின்றது. பத்தாவானீயாயிருக்கின்று மென்ப

தாயவாக்கியம் பிரத்தியக்காத்மாவின்கண் ணுவமறு மென் 172
றோர்க.

## தத்வம் பதங்களின் ஏகார்த்தத்வமாங்காற் பர்யாயத்வாதி சங்காபரிகாரங்கள். 173–180

பிரத்யக்ஷத்வபரோக்ஷத்வ லக்ஷண தனது வாச்சியார்த்தத்தின் அபரித்யாகத்தானே துவஞ்சச்சசப்தங்கள் விசிஷ்டார்த்த சமர்ப்பகங்களாம் ஆதலின் வாச்சிய பேதத்தாற் பரியாபத்வமின்றாமென்க. பிரத்திபக்காத்மாவாய தாயசான்றும் தத்வாவகதியும் அவசான மெவைகட்கோ அத்தகைத் தாயதுவம் பதங்க ளிலக்கணையாற் சொரூப மாத்திரத்தின்கட் சோயந் தேவதத்தனென்பதே போலும் அகண்டத்திற் பரியவசிக்கின்றன வெனவாம் ஆதலிற் பகர்ந்த ஏகரச அகண்டார்த்தத்தினின்றும் விரோதியாய ஏமகுண்டல மேய்ப்பக்காரிய காரணபாவம், பூம்பூஷாதிபோ லம்சாம்சிபாவம் நீலோற்பல நிகர்ப்பக்குண குணிபாவம் ஜாதிவியக்தி விசிஷ்ட ஸ்வரூபாதிப் பிரகாரம் என்னு மன்னியார்த்தம், "இக்கிருதாகிருதத்தினின்று மன்னியத்தில், நிட்களம், நிட்கிரியம், நிர்க்குணம், ஏகமேவாத்விதீயம் அசங்கனே யிப்புருடன்" என்பனவாதி மறைகளான் முறையே பொருக்கப்படுதலின் வேதாந்தங்களிற் பிரதிபாதிக்கப்படுவதின்றா மென்றாய்ந்தறிதாற்பாலதாம். ஒன்பதின்மரேயாமென்னும் மயன்மதியான் மறைக்கப்படுதலின் மறைப்பைமாத்திரம் மாற்றும்பயனுய்த்தசத்வசங்கையின் பூரணமாய தன்னைக்கண்டுணர்வானேபவாவத்தக்கதாமன்றி யபற்சிறிதாற்றுவானன்றாம்; இஃதொப்பமுமுக்ஷுவு மெவ்வாற்றானே மறந்த தன்னை யுணர்வானிச்சிப்பது மயன்மாற்றும் பயனளவேயா மாதலிற் கரு

மபரத்வ கற்பனைக் கிடனீண்டின்றாமென்க. அனாதியஞ் ஞானத்தா லாச்சாதித விவேக தரிசனவானுந்தகைமை யாற்பாகிய விக்ஷிப்தசிந்தையன் சந்ததந் திருசியசங்காதத் தினின்றும் விவிக்தமேயாய பரமார்த்த திருக்காத்ம தத்து வத்தையொன்பதின்மரிடத்தே யுழலுமுளத்தன் ஒன்பதின் மரினின்றும் உண்மையாய் வேறாய தசமனைக் காணாதது கடுப்பக் காண்கின்றானில்லை. பத்தாவானீயா யிருக்கின்றா யென்பதே போலும் அது நீயாயிருக்கின்றா யென்பதாதி வாக்கியத்தால் சருவாந்தக்கரண சான்றாய தன்வடிவை நன் கறிகின்றனன். மகாவாக்கியங்களிற் பதப்பிறழ்ச்சி யுண்மை யின் உத்தேஸ்ய விதேய நியம மொழியுமாலோவெனின்? வேதத்தி லிந்நியமமே யின்றாம் பதசாங்கத்யமோ அர்த்தத் தாலாம்; பாடத்தினியம மிருப்பினும் பிரசித்தத்தை யுத் தேசித்து அனுவதித்து அப்பிரசித்த முணர்த்தப்படுமென் னும் நியாயத்தால் இப்பிரசித்தார்த்தக துவமகமாதிபதம் முன்பு, இவ்வப்பிரசித்தார்த்தகப் பிரஹ்மசத்தாதிபதம் பின் பென்றிவ்வண்ணம் வின்யஸ்தமாய வாக்கியம் பவிக்கத்தக் கதாமென அன்வயவியதிரேகங்களாற்றுணிந்து அதன்பின் றுவமர்த்தத்திற்குத் ததர்த்தாத்மத்வப்பிரதிபத்திவடிவவா க்கியார்த்த போதனம் பவிக்கத்தக்கதாமெனக் கொள்க. வாக்கியத்தின்கட் சுரூயமாண பதங்களின் நன்மிருதியே யேதுவாம். எஞ்ஞான்றர்த்தாவ்யபிசாரியாய வாக்கியங்க ளில் வாக்கியார்த்த ஞானசங்க்ராந்தியின் பொருட்டுப் பதா ர்த்தம் பிரிக்கப்படுமோ அஞ்ஞான்று வினைப் பொருந்தா தாம். அவாந்தரவாக்கியங்களானும் அதனனுகூல தர்க்கங்க ளானும் ஆத்மானாத்ம விவேசனமாய அன்வயவியதிரே கோக்தியும் பதார்த்த ஸ்மரணத்தின் பொருட்டேயாம்.

மிருதியின்றேல். வாக்கியார்த்த முணர்வான் யாவன்கொல் வல்லான். 180

துவம்பதார்த்த விவேகத்தைத்துலக்கல். 181-183

துவம்பதார்த்தாவிவேகத்தாற் றத்வமசி யாதிவாக்கியங்களில் நித்யமுக்தோகமென்பதாய் வாக்கியார்த்தந் துலங்கவே துலங்காதாம். ஆதலினன்வயவ்ய திரேகோக்தி துவம்பதார்த்த விவேகத்தின்பொருட்டே மாறுயன்றும். துவம்பதார்த்த விவேகமாங்காலே பாணியிலர்ப்பித்தபரு வில்வப்பலம்போல் யானெனப் பிரதீயமான பதார்த்தத்தாற் றுக்கியென்பதி னிதமம்சத்தினபோகத்தாற் பிரத்தியக்காத் மாவாயசான்றின் விசேடத்துணிவாற் பேதசம்சர்க்க சூனிய வாக்கியார்த்தந் துலங்குமெனத் துணிந்துகொள்க. 183

தத்வமசியேன்பதாதி வாக்கியார்த்த விசாரத்தை விளம்பல். 184-205

ஆண்டிங்ஙனர்த்தஞ் சம்பவிக்குங்காற் பதவாக்கியார்த்த நிபுணராற் சுருதஹான அசுருதார்த்த தீயைக்கற்பிப்பானேலவே யலாதாம். கிருஷ்ணலசப்தவாச்சிய காஞ்சனமயகணங்களிற் பாகம்போலும் காட்சியாதிகள் பாதிக்குமெனக்கடாவினே? அக்ஷஜாதி நிபங்களாய விவற்றால் வாக்கியபாதன மெங்ஙனமாமென விடைவிடுக்க. அற்றேற் றுக்கியாயுள்ளேனென்னுமுணர்ச்சி யுலவுங்கால் வாக்கியத்தால் நிர்த்துக்கியென்னும் விஞ்ஞான முதியாதெனின்? அற்றன்று, பிறழ்ச்சியுடைமையின். கனவிற்றுகச் சேதாதி ஹேதுக்களினிமித்தத்தா லியான்றுக்கியாயிருந்தேன் அக்காலாப்தோபதேசத்தாற் றுக்கமற்றவனுனேனென்னு மனுபவசித்தத்தாற் றுக்கித்வாதி யாத்மதர்மமன்றும். அக்காலுண்டாம் வாக்கியங்களாற் பாதமாற்றெணப்படாதேனும் இடரின் முடிவி

ன்மேல் வார்த்தையின் பாதமுடன்பாடாம், இங்ஙன முன்னந் துக்கமின்றுமெனவதன் பாதமுடன்பாடாம், இடையினோ கயிற்றரவாமென்க. பிராந்தியினின்றுந் துக்கத்தின் சந்தான மோரிடத்தும் புலப்படுவதின்றுமாதலிற் பிரமாணஞானம் துக்கித்வாதி பாதனத்தைக் குயிற்றிக்கொண்டே வாக்கியத் தாலுதிக்கின்றதெனை வாக்கியத்திறெற்றலின்மை விஞவினவ காசமின்றுமென வாய்ந்தறிக. பிரத்தியக்காத்மாவிற்கு ஆத் மத்வம் துக்கியாயுள்ளே னெனபதின்பாதத்தால் நவமனுக் குத்தசமம்போ லுணரப்படுமே லவிருத்தமாம், நித்தியமுக்த த்வவிஞ்ஞானம் வாக்கியத்தாலுண்டாம், வேறற்றலின்றும். வாக்கியார்த்த விஞ்ஞானமும் பதார்த்த ஸ்மிருதி பூர்வக மேயாம். அன்வய வியதிரேகங்களாற்றுருவமாய்ப் பதார்த் தம் ஸ்மரிக்கப்படும் இங்ஙனம் நிர்த்துக்கமாயக்கிரிய மாய தன்னை யடையப்படும். பத்தாவானியாயிருக்கின்று யென்ப தா லெவ்வாறோ அவ்வாறே சத்தேயென்பதாதி வாக்கியங்க ளால் அபரோக்ஷப்பிரமை பிரத்தியக்காத்மாவின் கண்ணுண் டாம். கனவிலாய சருவதுயரும் பிரபோதத்தால் நிவர்த்திக் கின்றதேபோலும் பிரத்தியக்காத்ம ஞானத்தால் ஆத்மாவிற் கெஞ்ஞான்றுந் துக்கித்வமின்றும். பிரமையினஜன்மமெக் கிருஷ்ணலாதிகளிலோ அஃதொவ்வும், அவற்றிற் கமிருதத் தகைமை யுண்மையின் ஆண்டுப்பிரமை அதிருஷ்டார்த்த மேயன்றிப் பாகார்த்தமன்றும்.

தத்வமசிவாக்கியங்களிலோ அவிரோதத்தன்மை யுண் மையினங்ஙனமன்றும். தத்வமசியென்னு மிவ்வாக்கியத்திற் றதசியென்னு மிரண்டும் பிரசித்தார்த்தமாம், துவமர்த்தத் தை யறியாக்காலோசகாய மின்மையின் இவ்வாக்கியம் அப

ரோக்ஷ நிச்சயரூபப் பிரமையை யுதிப்பியாதாம். தத்துவ மூக்கட்ருத் துல்லிய நீடார்த்தம் அசியென்னு மிப்பதம் பவிக்கும். துவம்பதத்தோடு சாமானுதி காண்யத்தாற் பிரத்பக்காத்மாவை யர்த்தமாகவுடையது தச்சப்தமாம் அங்ஙன்றற்பதத்தோடு சாமானுதிகாண்யத்தாற் றுவம்பதத்திற்குத் தச்சப்தார்த்தமர்த்தமாம். எனவே உபயபதங்களினும் துவமர்த்தத்திற்குத் துக்கித்வாம்சத்தையும் ததர்த்தத்திற்கு அனுத்மத்வத்தையும் பரோக்ஷத்வாம்சத்தையும் நிவாரிக்கத்தக்கதாய். இங்ஙனமாகவே நேதிநேதிவாக்கியசித்தமர்த்தம் பாஸ்பாங் கமிக்கத்தக்கதாம். இங்ஙனந் தத்வமசியென்பதற்குப் பலங்கம்யமானமாங்கால் எங்ஙனம் அப்பிரமாணத்வ மிதற்குக் கூறப்படும் கிரியாபேக்ஷத்வம் றுதலப்படும். ஆதலிற் றத்வமசியெனப் பிரதமோபதேசத்தினும் பதார்த்த பரிசோதனுன்வய வியதிரேக கிரகணகாலத்தினும் ஐயமற்ற பிரஹ்மானுபவ காலத்தினுஞ் செய்யென்னு மிவ்வனுட்டான கற்பனம் தத்ததர்த்தப் பிரதிபத்தி விரோதியாதலிற் கிரியைகாபக் கற்பியேயம், மேலும் அசருதத்தன்மையானுங் கற்பியேயம் அருதத்யாகமு மனர்த்தகமாம். ஈண்டுத் தத்வமர்த்தங்கட்கப் பிராப்தஸ்வரூபத்தைச் சிந்தனீயமாய் விதிப்பானுற்றலின்றும் அதன்பிராப்தியும் அன்னியத்தாற் சம்பவியாதாதலின் இதனுனே அதன்பிராப்தியை யவாவுதலால் வாக்கிய பேதாதிதோஷப் பிராப்தி அபரிகார்யமாம். தத்துவங்களின் றத்துவமாயசித்தத்தை யபேக்ஷியாமலே யெவ்வாற்றுலேனும் சிந்தனவிதானுப்புபகமமாங்கால் சிந்தியப் பிரஹ்மசாக்ஷாத்காரத்திற் கப்பிரமாத்வமாதலின் அவித்யாநிவிருத்தி பலாசித்தியாற் பிரசங்க்யானவிதி நிரர்த்தகமாமென வுய்த்துணர் தற்பாலதாம். பேரஜனத்தாற் றிரு

ப்தி யனுபவிக்கப்படுகின்றது வாக்கியார்த்த ஞானமாத்திரத் தான் மோக்ஷபல மடையப்படுவதின்றுமாதலிற் கோமயத் தாற் பாயசகாண மெங்ஙனமேலாதோ அங்ஙனம் வாக்கி யத்தின் பொருட்டுணிபு வாக்கியார்த்த அபரோக்ஷசாதன மன்றுமெனின்? இங்ஙன மனுத்மார்த்த வாக்கியத்தாற் பரோக்ஷபோதன முண்மையே, பிரத்யக்காத்மாவின் கண் ணே யிங்ஙன மநிச்சிதமன்றும்மற்றோ தசமசங்கைப் பிரா ப்தியொப்ப வாக்கியத்திற்கு அபரோக்ஷ ஞானசாதனத்வம் நிச்சிதமேயாம் சுயஞ்சோதித்வாதிச் சுருதியாற் பிரமாண நிரபேக்ஷப் பிரகாசமானத்வ வியல்பாயாத்மா வங்கீகரிக்கத் தக்கதாம் ஆகவே வாக்கியத்தா லகங்காரத்தின் பிரஹ்மபே தக நிவிருத்தியிற் சுவாத்மானுபவமு மெங்கட்குச் சித்தமே யாம். மதிகளின் விஷயந் துக்கமாம், எதன்விஷயமன்றெ ன வுடன்பாடாமோ அவ்வித்திருக்காய பிரத்யக்காத்மாவிற் குத் துக்கசம்பந்த மியாண்டையதென்க. பிரத்யக்காத்மா சருவதரும ரகிதமாயின் அதனதனுபவ மெங்ஙனமாமா லோவெனின்? அனுபவ வடிவமாய தன்னனே திருசி யின் கண்ணே யனுபவிக்குக. அதன் விசேடானுபவமோ, சைதன்யாபாச வியாப்தமாய தீயின்பிறப்பே ஆத்மாவிற் காகந்துகானுபவமென வித்வான்களால் ஸ்மரிக்கப்பட் டுளது. 205

பிரகாராந்தரத்தாற் பிரசங்க்யானப் பிராப்தி நிராசம். 206-229

அசனுயாதி சருவசம்சார விநிர்முக்த நித்திய சுத்த மோக்ஷ வடிவப்பிரஹ்மம் நீயேயென ஆசிரியருப தேசமாங் கால் நினக்குச் சுரோதவ்யாதி யனுட்டேயமுளதென வெங் ஙன் விருத்தம் விளம்பலாம். அடையப்பெறுமென்பதே யஃ

தாமேலக்காற் சிரவணாதிபவிக்கு மோக்ஷத்திற்கோவநித்ய த்வமாம் இங்ஙனம் இருவகையானும் விரோதமாங்கால் வாக்கியம் விபரிணமமுடையதாய்ப் பொருந்தாதாம்,.

சுரோத்ரு சுரோதவ்யங்களின் பேதமிஷ்டமாமே லிவ்வண்ணம் பிரசங்க்யானம் பவிக்குக, பேதமிலதே லெங்ஙனமாம், பேதமுளதாகுக வெனின், ஜீவனுக்குப் பிரஹ்மபாவமோ இஷ்டார்த்தமாம், அஃதன்னியத்திற் கன்னியபாவாயோகத்தானாறப்படுமோதலின் எவ்வாற்றானும் பிரசங்க்யான பக்ஷத்தில் வாக்கியமப் பிரமாணமேயாம். சித்தமோக்ஷியானெனவே தன்னைபுணர்ந்து யாவன் செய்வானிச்சிப்பவனவனேவவன் மூடாத்மா சாஸ்திரத்தையுங் கெடுத்தவனேயாவன். சித்தத்திற்குச் செய்யற்பால தொன்றின்றும் காரியசகிதத்திற்குச் சித்தத்வமின்றும், உபயாலம்பன முறாற்றுபவன யாத்மாவை வஞ்சிப்பவனன்றோவாவன். முமுக்ஷுவிற் காத்ம விஞ்ஞானத்தி லெங்ஙனமேனும் பிரவிர்த்தியாகுக வெனச் சித்தமோக்ஷம் நீயென்னு மிதுவஸ்துமாத்திரகதனபரவாக்கியமாம். கர்த்தாதுக்கியானுயுள்ளேனெனக் காட்சியாலனுபவிப்பன் ; அதன்பின் கர்த்தாதுக்கியுமாகாதிருப்பேனென முயல்வுண்டாம் அஃதையறியும்பொருட்டு யுக்தியாதிகள் செய்யத்தக்கதாமெனச் சுருதி நீயெனக் கர்த்ருத்வாதி யனுவாதத்தாற் சித்தத்வானுபவத்தின் பொருட்டுப் புகன்றது, துன்பமுங் கிரியையுங் காமமுமற்ற சித்தமோக்ஷமே யானெனக்கவர்ந்தும் அவனெங்ஙனந்தான் விருத்தார்த்தத்தைக் கவர்வன்.

சகாமத்வாதி ரூபத்தினின்றும் விபரீத பிரஹ்மபூதமாயவெனக்குச்சகாமன் சகிரியன் அசித்தன் என்னுமனுபவமெ

ஙஙனமாம் அலைதைத் தாங்கள் சாற்றவேண்டும் ஈண்டே விளக்கூடும் முக்தத்வானுபூதியின் பொருட்டன்று, ஈண்ட ஞ்ஞாத ஞாபனவியல்பேய்ந்த பிரமாணத்தால் அபூர்வார்த் தம் போதிக்குங்கால், அதன்விரோதியாய எப்பிரமாணபாச த்தாற்கவர்ந்த அர்த்தமுளதோ அது வினியோக்கியமாம். அகம் நிர்முக்தனென்பதே சத்தாயுள்ளாயென்னு மன்னிய மானத்தாற் சன்னிபமாம்; பிரத்தியக்ஷாபாசஜன்னியத்தன் மையாற்றுக்கித்வம் வினியோக்கியமாம் பிருஷ்டமாகாங் க்ஷித மெனப்புகலத்தக்கதாம் ஆகாங்க்ஷிதமும் துக்காபாவ வடிவமீப்சிதமாம் எனக்கித்துன்ப மெங்ஙன மத்தியந்தம் நிவர்த்தியாமெனப் பிரஸ்னனுரூபமியாது பகாத்தக்கதோ அது துக்கநிவர்த்தகமாம் சுருதிக்குச் சுதசித்தப் பிராமாண் யமாங்காற் சுவப்பிரமேயாவபாச சாமர்த்யாபாவாசங்கையு ளதாவதின்றாம். ஆதலினாத்ம விமுக்தத்வப் பிரத்யயத்தின் பொருட்டவ்வாக்கியங் காரணத்தன்மையைமேவும். "அறி யாதவன் அறிந்தான் அறிபவனே" என்னுஞ்சுருதியால் இதி னின்று மன்னியவனுபவம்யாதொன்று மான்மாவிற்குப் பொ ருந்தாதென்க சாந்தோதாந்தானு சாசனத்தாற்றுவம் பதார் த்தவிவேகத்தின்பொருட்டுச் சருவகருமங்களின் சந்நியாசம் சாதனத்தன்மையையடைகின்றதேயாம். துவம்பொருளாய்ப் பிரத்யக்கான்மாவாகிய தன்னை யித்தேகத்தேகாண்க. பின்ற ன்னைக் கேவலமாய சர்வமாய்க்காண்க வென்பதுவாக்கியார் த்தமாம் சருவமாத்மாவெனப் பிரமாணத்தால் வாக்கியார்த் தம் விஞ்ஞாதமாங்கால் அன்னியமானத்தி னசத்வமாங்கா லவனை விதியெங்ஙனம் பிரேரிப்பிக்கும். ஆதலின் வாக் கியார்த்த விஞ்ஞானத்தினூர்த்வங்கர்மவிதிபவியாதென்க. என்னை? பிரஹ்மாஸ்மி கர்த்தாவென விருத்த மதிகள்ப

வியாதன்றே. கர்த்தா சகாமன் பத்தனென்பதாய பிரமா ணுபாச ஜாதத்தால் அகம்பிரஹ்மாஸ்மி யென்னு மிவ் வித்தை பாதிக்கப்படவேமாட்டாது நூலாலகம் பிரஹ்மமா யேயுள்ளோனன்றியன்னிய மகமல்லவே யல்லவென்னும் புந்தி யெக்காற்றுணிபாமோ அக்காற்றேகாத்மமதிபோலும் கர்த் தாக மென்பதாய மதி பறந்தன்றே போம். சபயத்தினின்று மபயமடைந்தானுப்த் தன்பொருட்டு முயல்பவனுயவன் சுதந்தரனேற்பின் சபயத்தை யடைவான் வாஞ்சிப்பதே யில்லை. பதார்த்தஸ்வரூபா லோசனையாற் றேகாதியபிமான சூனியனுய் வாக்கியார்த்தானுபவத்தின் கண்ணே லக்ன சித்தனுக்குச் சந்யாசவிதி யுளதாயபோது யதேஷ்டாசரண வடைவு யாங்ஙனமென்க. 229

பிரகரணுர்த்தோப சம்மாரம். 230-231

ஆதலின் யாது நம்மான் முன்னம் நவிலப்பெற்றதோ அவ்விவ்வியாவுஞ் சித்தமாம் யாவன் யாதினின்றும் விரக்த னே அவனதன்பொருட்டுப் பிரவிர்த்திப்பதில்லை. மூவுலகி னின்றும் விரக்தனுதலின் முமுக்ஷு இவ்வற்பத்திற் பிர வர்த்திப்பனேவென், க்ஷுதையால் வருந்துறினும் கடுவ யிலக் காதலியானென்றுற் பூரணமா யுண்டியுண்டு போக்கிய பசியையுடையான் விரும்புவன்கொல்! ஆதலின் விவேகியா யினுன் பிரித்தறிந்து அதனை யயிலானென்க. வேதாந்த வாக்கிய விரைமலர்களினின்றும் உத்தமமாய ஞானமிருத மதுவை நம்பொருட்டுப் பிரமாம்புரைய யாவர்நன்குகிளப்பி னரோ அத்தகைய சற்குருவின்பொருட்டு நமஸ்காரம். 233

பதினெட்டாவது தத்துவமசிப்பிரகரணம் முற்றுப்பெற்றது.

## பத்தோன்பதாவது பேஷஜப்பிரகரணம்.

சம்சாரத்திற்கு மனோத்யாச நிபந்தனத்வ த்யோதனத்தின் பொருட்டு ஆத்மமன சம்வாதம். 1-8

விவேக விராக பேஷஜமெதன் கண்ணோ அத்தகைய திருஷ்ணாரூப சுரநாசகாரணமாய சிகிச்சித மடையப்பெற்றுப் புமானனவன் காமவடிவ சுரத்தா லுதிதம்ாய ஆத்மானாத்ம அவிவேகவடிவ மூர்ச்சைபாற் சாதமாய்ச் சதயோக துக்கித்தன்மை (மெயசரீரபரம்பரையை அடையானென்றுணர்க. ஹேமனமே யானென திலைதெனப்பயனின்றிச் சேஷ்டிக்கின்றனை. நம்பொருட்டே யெனின்? நினதுசேஷ்டையைப் புருடன் றன் போகாபவர்க்கத்தின் பொருட்டுச் சாங்கியரன்றோ வாஞ்சிக்கின்றனர் மறைமுடிதெளிந்த யாங்களன்றன்றோ. ஆராயினங்ஙனம் நினைதலு மறியாமையன்றோ யாதினானினக் கசேதனத்தன்மை புண்மையின் அர்த்தபோதமே சம்பவியாதோ. எனக்கு நின்பாலர்த்தித்வ மின்றாமாதலின் நினக்கு லயமே பொருத்தமாம். புராதன பூர்ணானந்த அவிகார பரமாத்மாவி னன்னிய ஞானன்றாதலிற் சததமுந் திருப்தன் எனக்கர்த்தித்வமின்றா சததமுந் திருப்தனுப யானிதத்தை வாஞ்சியேன் ஆதலின் ஹேசித்தமே ஹிதம்வேண்டி நினது பிரசமத்தின்பொருட்டு முமுக்ஷுக்களான் முயலத்தக்கதாம். ஆவிர்ப்பாவ திரோபாவ வடிவ வுயிருளவுடற் றன்மங்களாய உண்டிபான சோகமோக சரைமரணங்க ளென்னும் ஷடூர்மிகளின் பரம்பரைகளை முற்றிலும் வேறுபடுத்தி நிட்பிரபஞ்சமாய்ச் சித்தம் யாதோ அஃதேசகத்திற் காத்மாவாம் நினக்குயானாத்மாவாமென்பது, "எப்பிரஹ்மம் சாக்ஷாதபரோக்ஷமென்றும்" எவ்வாத்மாஸர்வாந்தாம்என்றும் மறைபறையுறைதலினு

லும்; "யானுத்மாகுடாகேச" என்பதாதிமிருதிப் பிரமா ணத்தினானும் காரிய காரண உபாதித்வய பராமரிச மின்றிச் சுயம்பேத நிரூபணஞ் செய்ய வொண்ணாமை யின் என்பதாதி நியாயத்தானும் வித்வதனுபவத்தானும் என்னால் நன்கறிப்படும். ஆதலின் ஹேமனமே நினது சேஷ்டை பயனின்றிபதேயாம் எப்பேததீயினின்று மெல் லாப் பிராணிகளும் ஆகுலீபாவத்தை அகிருதார்த்தத்வ அபிமானவடிவ மாயையால் நித்தியஞ் சம்பத்தமாமோ அப்பேத தீயாயது ஹேமனமே நீபிரசாந்தியாங் கா லின்றாம்; பேதக்கிரகண மன்றோ மாயாப்பிரபவ காரணம், பேதக்கிரகத்தி னின்றும் விடுபடுங்கான் மாயாமோக ஞ்சிறிதுமின்றாம். நின்சேஷ்டிதத்தால் எனக்கு மோகமின் றாம் யானேபரபுத்ததத்வனும் பந்தரகிதனும் அவிக்கிரியனு மாவன் எனக்குத் தத்வப்பிரபோதத்தின் முற்பிற் காலங்க ளில் விசேடமொன்றுமின்றாம் ஆதலின் ஹேஉள்ளமே நின துசேஷ்டை பயனற்றதேயாம். யானித்தியனாதலின் அநித் தியத்வமின்றாம் விகார யோகமாங்காலன்றோ அநித்யத்வம் பவிக்கும். ஒளியொளியின்மையிதென்றுமை வடிவ விக்கிரி யையுண்டாமாலோவெனின்? "சதாப்பிரபாதனியான்" என்பதாதிய மறைகளுண்மையினின்றுமென்க. அதனானே யானத்வயன். திருசியமுளதெனின்? உள்ளவதூஉங்க யிற்றராநிகர்ப்ப ஆகந்துகத் தன்மையானே பொய்யெனத் துணிபப்பெற்றதாமெனத்துணிக. ஹேசித்தமே ஈண்டபாவ ரூபம் நீயாகின்றனை ஊகத்தாலுய்த்துணருங்கால் நினக்க ஸ்தித்வமின்றாம். என்னை? மெய்யானதழியாததானும் பொ ய்யானது நிகழாமையானுமென்க. ஜன்ம விநாசமிரண்டும் நினக்காதலின் நினக்குப்பரமார்த்த சத்வவுடன்பாடின்றாம்.

ஆத்மாவிற் கத்விதீயத்வ மறையல். 9-12

காண்போனுங்காண் பொருளுங்காட்சியுமாய அவ்வெல்லாமயலும் நினதுகற்பிதமேயாம் திருசிக்கயலாய்த் திருசியத் தோற்றமின்றும். ஜடத்திற்குச் சுதஸ்புரணமின்மையினும் ஸ்புரணமில்லாததினுண்மையிற் பிரமாணமின்மையினுமென்றுணர்ந்துகொள்க. துயிலின் கணத்வயமாயிருந்தவாத்மாபிரபோதாதிகளாற் பேதிப்பதின்றும். விகற்பமின்றேனும் விகற்பனை நிகழுமாலோவெனின்? அவ்விகற்பனையும் திருசியமொப்பவே வேறாய் நிகழாதாம், மற்றேறு, அவஸ்து விஷயகமாய் அது நிரூபிக்கப்படுதலின் அதிஷ்டானதிரிக்த வடிவாகிதமாம் கொள்ளிவட்டம் போலுமென்க. அங்ஙனமாயினும் திருஷ்டி சுருதிமதியென்பனவாதிய சக்திரூபஸ்வகத பேதத்தினுண்மையானும், அங்ஙனமே உடறேறும் உயிர்ப்பேதங்காண்கின்றமையாற் சஜாதீய பேதோபபத்தியினும் ஆத்மாவிற்கத் வயத்வமின்றுமாலோவெனின்? எனின்றும், இபம்பியவிரண்டுஞ் சுருதி விரோதமாதலின் மறையானே யத்வயத்வஞ் சித்தமன்றேவாம். ஆன்மாக்கள்பரஸ்பரம் பேதப்படுமேன் மூலாங்குராதிகள் போலும் எவைபின்னமோ அவைபரிமிதங்களாம் யாவை பரிமிதங்களோ அவை விநாசிகளாம். ஆதலிற்பரிணமக் கூட்டுறவாலான்மாக்கட்கு க்ஷயந்துருவமாம் பேதவான்களுக்கே யழிவுகாண்டலின், மேலும் பேதபக்ஷத்தில் ஓரோர் கற்பத்தி லோரோருயிர் வீடுறினும் சென்றவனந்த கற்பங்களில் அனந்தஜீவர்கட்கு வீடுகூடலின் இஞ்ஞான்று சமஸ்த மோக்ஷத்தாற் போக்தாவின்மையின் அப்போக்தாவின் பொருட்டாய போக்கிய சகத்துக்களின் அழிவுமாமாதலிற் பேதபக்ஷந்

தார்யுக்திக மெனத்துணிக. யானத்வயமாதலின் உண்மை யாய் எனக்குக் குணபூதமாயேனும் பிரதானபூதமாயேனும் வேறுவகையாலேனும் யாதொன்றுமின்றாம், யாதொன்றிற் கேனு மியானுளன்? அதுவுமின்றாம், எக்கற்பிதசகமோ அதுவுமின்றாம் விகற்பனைக்கு முன்னமே பிரசித்தியால் யான் அகற்பிதனையுள்ளேன் இனிமேலும் அவதிபூதந்தன் மையாலிருப்பேன் இடையினும் அதன் சாக்ஷித்தன்மையுண் மையின் அகற்பிதனே யாவேன். துவிதமேகற்பிதமாம்.

ஆத்மாவிற்கு விகற்பனுதிய விஷயத்தன்மையை யறையல் 13

நித்தியத்தின்கண் ணசத்தென்னும் விகற்பனையுமின் றாம், அதனுனே சத்தின்கண் ணஸ்தித்வமின்றாம், ஆத்மா விற்கு நித்தியத்தன்மை யுண்மையினென்க. ஹே மனமே நினதுகற்பனையும் யாதினுற் பிரவிருத்தமாமோ அது நினது கற்பனைக்குமுன்பே பிரசித்தமாதலிற் கற்பிதமன்றாம்.

விசாரமத்வைத நிச்சயவேதுவா மென்பது. 14-18

ஹே உள்ளமே நினது கோசரீபூதமாய் யாதுயாது புல ப்படுகின்றதோ அவ்வத்துவிதம் புலப்படினும் கனுக்கடுப் பத் திருஷ்ட நஷ்டவியற்கைத் தாதலிற் பொய்யேயாம். புல ப்படுகின்றதின் றென்னுமிதனுனே வஸ்துக்கட்கு நாஸ்தி த்வமின்றாம். யாதினுற் பிரவிருத்தமாய சதசத்விகற்பனை எவ்வதிஷ்டானத்திற் பிரதீயமானமாகின்றதோ அஃதகற்பித மாம் நிர்ணயமின்றி விசாரம்பரியவசான முறுததேபோற் சத த்வயமின்றி விகற்பஞ் சாந்தியையடையாது. சற்பொருளின் றென்றுநுதலுநின்ஞல் அந்நிர்ணயத்தின்பொருட்டு விசார முடன் படப்பட்டதாவின்று? உடன்பட்டதாமேல்விசாரஞ்

சித்திப்பான் யாதேனுமோர்பொருள் சருவவிசாரகானும் உபஸ்தாபிதமாமாதலிற் சற்பொருளுடன்படப்பட்டதேயா மன்றே. விசாரமோ, பிரமாண வியாபாரத்திற்குப் பலாவ சானத்வ நிச்சய ஹேதுவாயதருக்கமாம் அதுவும் பிரமேய மின்றிப் பிரசரமுபலபியாதாம் பிரமிதமும் பாத்தியமாகா தெனச் சற்பொருடிணியப்பெற்றதாம், அச்சற்பொருளின்றே மேற் பிரமாணப் பிரமேயப் பிரமாத்ரு நிரூப்ய விசாரத்தினு னத்தாற் பிரவிருத்தியின்மையினுனும் சதபாவ நிர்ணய ஹா னத்தானும் அநிர்ணீதமே நற்றிதிபெற்றதாம்; ஆகவே வஸ் துதத்வ அனவதாரணத்தால் ஐகிகாமுஷ்மிகார்த்தப் பிரவிரு த்தியானியாமென்க இதனுல் விசாரவுடன் பாடின்றும் பக்க த்தினும் தோஷம் நுதலப்பட்டதெனத் தெளிந்து கொள்க. அவிசாரிதமும் அநிர்ணீதமுமாய அவ்வெதுவும் இஷ்டமின் றுமேலாயின், விசாரநிர்ணயங்கட்குச் சதவசானமின்றிப் பரியவசானமின்மையின் முற்றினுஞ் சற்பொருளுடன்படத் தக்கதாமென்பதொருதலையேயாம். சுருதிப்பிரதிபாத்யமாய சத்தசற்சமமாம் அர்த்தக்கிரியா சூனியத்தன்மையுண்மை யின் நரசிருங்கம்போலுமெனின்? அர்த்தக்கிரியா சூனியத்வ மும் அசத்வசாத்தியத்திற் பிரயோஜகமன்றும் இயல்பானே யிருப்புண்மையி னிலாபத்தாலென்க; எனவே அனர்த்தக்கிரி யாகாரித்வத்திற்கு அசத்வவியாப்தியின்கட் சந்திக்தானை காந்தத்வமாம் அர்த்தக்கிரியா காரித்வத்தா விருப்புண்மை யேயின்றும், பதங்யாசாதி யர்த்தக்கிரியா காரிணியாயகண்ட காத்யபாவத்தின்கட் சத்துவ வியபிசார முண்மையின். கிரி யோற்பத்தியின் முன்னுதாசின வஸ்துதரிசனத்தால் அர்த் தக்கிரியாகாரித்வமின்றுங்கா லசத்வஞ்சம்பவியாது. அன்றே யினே, சத்வார்த்தக்கிரியைகட்கு அன்னியோன்னி யாப்ரா

யாபாதமாதலி னெனத்தெளிக. கேவல மனைகாந்திகத்வாதி யினனே அனுமானமப்பிரமாண மன்றும், மற்றேருமதபிமத ஆத்மாவின்கட் பக்ஷாசித்தியினனு மென்க. அர்த்தக்கிரியா காரித்வாபாவ மாத்ரமேதுவா? அல்லது பரமார்த்த விசேஷித அதனபாவமா? கூடஸ்தமாயசத்திற்குந் தர்மித்தன்மையானே விசாரப்பிரவிருத்தி காரணத்தன்மையானும் மாயையாற் பேதப்பிரபஞ்சப்ரசாரணஹேதுத் தன்மையானும் முதலதசித்திபாம். மாயையாற் சகத்தேதுத்வமும், "மாயையைப் பகுதியென்றும் மாயாவியை மகேச்சுரனென்று மதிக்க." என்னும்மறையானும். "அத்யக்ஷனுபவென்னுற் பகுதிசராசரப் பிரபஞ்சத்தையீனுகின்றது." என்னும் மிருதியானும் காரியத்திற்கு வாசாரம்பணத்வப் பிரதிபத்திசாதக நியாயமாய யுக்தியினனுங்காண்க. இன்னணங் கூடத்தருக்கு மர்த்தக் கிரியாகாரித்வம் பிரசித்தியாதலின் ஏதுவசித்தியென வெண்ணற்பால்தாம். பரமார்த்தமா யர்த்தக்கிரியா காரித்வந் திரத்திற்கேனுங் கணிகத்திற்கேனும் அக்கிரியத்திற் ககாரகத்தன்மையுண்மையிற் கிரியாகாரியத்தின் பொருட்டுங் கிரியாவத்வாபத்தியாங்கா லனவஸ்தாப் பிரசங்கத்தாற் பொருந்தாதாம்; ஆகவே மற்றது திருட்டாந்தாசித்தியாம். அத்வயத்திற்குச் சருவவிகற்ப ஹேதுத்தன்மை யுண்மையிற் சருவ விகற்ப யுக்தத்வமாமாலோ வெனின்? விகற்பனத்தினின்றும் விருத்தவியற்கையதாம் "நிட்களம் நிட்கிரியம்" என்னுஞ் சுருதியினனும் விகற்பத்தின்முற் பிரசித்தியிருத்தலினலென்னு முத்தியினனுமென்க. ஆதலினத்வயமாம். நேதமென்றும் நேதியென்றும் நிஷித்யமான சேதனசேதன விகற்பாவசான சித்தியின்பொருட்டு ஈண்டும் நிஷேதவாக்கியங்களில் அவிகற்பவிதர்மகமத்வயம் நிர்விசேஷஞ் சித்தமாம் விகற்பி

தம் நேதி நேதியென வெவ்வனம் நிஷேதிக்கப்படுமோ அவ்வனமத்வயமாத்ம தத்வம் நிஷேதிக்கப் படுவதின்றாம். 18

நுதலிய அர்த்தநிச்சய சூனியர்கட்கு அனர்த்தப்பிராப்தி யறைதல். 19-20

கூடத்தமாய்ப் பேதவிகார சம்சர்க்க சூனியமாய்ச் சுருதிசித்தமாய் அஜமாயத்வயமாய் அக்ஷாமாய் ஆத்மாவின் கண் அஸ்திநாஸ்திகர்த்தா சவிசேஷமென்பன வாதிப்ரகாரங்களாற் றனது சித்தமாயாப் பிரபவ மெவ்வனமாமோ வவ்வனம் எவர் விகற்பிக்கின்றனரோவவர் திரியக்குமனு ஜாதிகளாலுற்பவத்தையும் ஜரையையும் மரணத்தையுஞ் சந்ததந் திண்ணமாயடைகின்றனர். மேலும் துவிதமுற்பத்யமான வியற்கைத்தா? அனுற்பத்யமான வியற்கைத்தா உபயவியற்கைத்தா, அக்காற் சாபேக்ஷத்தன்மையானே சுத்திரஜதாதிபோற்பொய்ம்மைவருதலின் முதலதன்று, சதாதனத்வாபத்திவருங்கா லதனபாவ வியவகார அனுதயப் பிரசங்கத்தா லிரண்டாவதுமன்று. ஏகத்திற்கு விருத்தோபய வியற்கைத் தன்மையினயோகத்தான் மூன்றாவதுமின்றாம். நான்காவதாய பவாபவத்வந்துவிதத்திற்காமெனின் விரோதத்தாலுடன்பாடின்றாம். அக்காற் சத்வங்கூடாதென்க, இத்துவிதத்திற்கோ அன்னியத்தின்கட் டிதமாங்காலும் ஜன்மமின்றாம். சத்திற்குபாதானத்வமாங்காலோ விகாரித்வாபத்திவருதலின் விநாசத்தா லசத்வப்பிரசங்கமாம். அசத்திற்கு முபாதானத்வமாங்காலோ சத்வத்தினின்றுஞ் சத்வாபத்தியாதலிற் சூனியமுபாதானமன்றாம் அதற்குக் காரியங்களுடனனுகம முண்மையினென்றுணர்க. கிரியாகாரகமுமின்றாம் நுதலியவுத்தியினானும் அஜம் நிர்விசேஷமத்வயமாத்மதத்வமாம். 20

## வஸ்துமாத்திரத்திற்குக் காரணத்வ காரியத்வங்களின் நிராசம். 21--24

இத்துவித ஜன்மத்திற்கு நிர்வியாபாரங்காரக மிட்டமா மேற்றுணிபாய்க் கிஞ்சிலுங் காரகமின்றெனவின்றும் பின்னரோ யாவும் யாவைக் கெக்காலுங் காரகமாம். வேறு வியாபாரமிட்டமாமேல், அக்கிரியத்திற்கு வியாபாரத்வா யோகத்தாற் கிரியாவத்வம் நித்தியமாயினை சந்ததங் காரியப் பிரசங்கத்தானும் வியாபாரத்வபக்ஷத்திற் காரகத்வா சித்தியாம். எங்ஙனமாமாலோவெனின்? சந்நிலையை வியாபாரித்தாவென் னசந்நிலையைவியாபாரித்தா? சத்திற்கு மசத்திற்கு மவிசேஷ முண்மையி னிரண்டு மேலாதென்க. என்னை? விசேஷத்தன்மையுடன்படினேவைரூப்யாபத்தியினானும் அவிசேஷத்தன்மைமருவுறினை சந்ததங் காரியமாமல்லதாகாதென வுணர்க. சத்திற்கேனும் அசத்திற்கேனும் பூர்வசத்வாசத்வப்பிரச்யுதியவஸ்தையின்கட் காரியமாமெனக் காரகத்வமாகுக வென வுடன்பாடாமேல், ஆண்டு அவஸ்தாப் பிரச்யுதிகாரியங்கட்குயௌகபத்ய மபிமதமா அல்லது கிரம மபிமதமா? முதலதெனின்? சச்ச்யுதியினும் அசச்ச்யுதியினும், துலாத்தின் கோடிகளின் நமனோன்னமன மனுபவிப்பானுக்குக் காரியகாரணபாவந் துணியப்பெறாததேபோலும் காரியகாரணவடிவவேற்றுமை துணியப்பெறாதென்க, இரண்டாவதெனின்? அவஸ்தாப் பிரச்யுதிக்குங் காரியத்தன்மையுண்மையின் அதற்கும் அவ்வித பூர்வகத்வாபேக்ஷணத்தாலனவஸ்தாப் பிரசங்கமாமெனக் காண்க. இவ்வண்ணம் நுதலியதோஷபரிகாரத்தாற் சதசத்விபர்யயமேல் இட்டமின்றும் அக்காற் சதசத்துக்கட்குச் சொரூப வியவஸ்திதியாங்காற்

பவமெங்ஙனமாம். என்னே ? இச்சத்தசத்திரண்டும் பரஸ்பர சம்சர்க்க சூனியம் வியவஸ்திதம், இவைகட்குப் பூர்வாபரீபாவம் பரஸ்பரமேனும் அன்னிய வபேகைக்ஷயானேனுமின்றுமென்க. ஆதலின் ஹேமனமே எதற்கும் பிறப்பின்றுமெனத்துணிக. ஹேமனமே நினதிச்சை வயத்தாய்ப்பவத்தை யங்கீகரித்தேனும் புகல்கின்றேன், நினது சேட்டிதத்தாற் பிரஹ்மபூதமாய வெனக்கு யாதுபயன் ? ஹானவிருத்திகளோ வெனக்கின்றும்; என்னே? ஆத்மாவின்கண் ணவித்பமானமாயஹானத்திற்கேனும் விருத்திக்கேனு முற்பவம் தன்னாலேனும் அன்னியத்தாலேனும் வேறேதுவாலேனுஞ் சம்பவிப்பதின்றுமன்றே. அல்லதவ்வானவிருத்திகட் காத்மாவின்கண் ணிருப்புண்மை யிருப்பினும் நினது சேட்டிதத்தாலெனக்குப் பயனின்றும் சித்தார்த்தத்தினினது சேட்டையால் அகிஞ்சிற்கரத்வமுண்மையினெனன் றுணர்க. துருவமாகிய கூடத்தர்களும் அத்துருவமாய கணிகங்களுமாய பதார்த்தங்கள் துணிபாயன்னிய யோகிகளாகாவாம். என்னே ? துருவங்கட் கவிகாரித்தன்மை யுண்மையினானும் கணிகங்கட் கன்னியசம்பந்த காலவளவிருப் பொவ்வாமையானு மெனத்தெளிக. சம்பந்தத்திற்குச் சம்பந்தி சம்பத்தத்வாசம்பத்தத்வ விகற்பாசகத்வ முண்மையி னன்னியோன்னியமுந் துருவாத்துருவங்கட்குச் சம்பந்தித்வஞ் சம்பவியாதாம். அதனானே அவற்றிற் காரியம் யாதும் பொருந்தாதென்ப. ஆதலின் யாதும் யாதிற்குஞ் சம்பந்தியுண்மையாய்க் கிஞ்சினு முடன்பாடின்றும். சம்பந்தமின்றேல் வேதாந்தப் பிரமேயத்வவிரோதம் வருமாலோவெனின் ? ஆத்மஸ்வரூபம் நிருபாதிகமாம் சப்தப்பிரவிருத்திநிமித்த தன்மமின்மையின் வாக்கியத்தின் முக்கிய விருத்தியாற் கவாத்தக்கதன்றும். மற்றே

இலக்கணையாற் சப்தத்திற்காண்டு பரியவசான மபேக்ஷித்து வேதாந்தப் பிரமேயத்வம் அதற்குடன்பட்டதாமென விரோதமின்றெனத் தெற்றெனத் தெரிதற்பாற்றும். 24

துவிதாபாச நிரூபணமும் மங்கலமுந் தோகுத்தல். 25-28

ஆதலிற் சத்வாசத்வங்களினின்றும் விகற்பிதங்களாய துவிதாவபாசத்தினின்றும் சததம் விமுக்தமுஞ் சததஞ்சமமும் பிரகாசமானமுமாய வஸ்துவை மதிமானானவன் சுருதியானுமூகத்தானும் நிரீக்ஷித்துத் தீபம் போற்றுரிதமாயே அசேஷபந்தத்தின் பரிசமாப்தியை யடைகின்றனன் நிரீக்ஷண நிர்வாணங்கட்கு வியவதானமியாதுமின்று மென்றுணர்க. சர்வசாக்ஷிப் பிரத்தியக் காத்மாவிற் கன்னியமாய த்வயம் பிரஹ்மமாவதின்று மென்றெவரறிவரோ அவ்வனன்ய வேதிகட்கவேத்தியமாம். மாறுய்ப்பேதத்தால் விஷயமாய றியுங்குதார்க்கிகர்க்கோ பரிச்சின்னமாய்ச் சுஞ்ஞேயமாமென்க; எனவே சாஸ்திரயுக்தி விசாரப்பிரயாசமின்றித் தன் மதியனுசாரமாய்ச் சுகபோதமாமெனவுணர்க. தேகாதி யபிமான விஹீனனானோன் நிர்விசேஷ ஆக்மதத்துவத்தை ஆராய்ந்து அபரோக்ஷமாயனுபவித்து மோகத்தையடையான். என்னை? மோகவேதுவாய அஞ்ஞானமதன் காரியபாதத்தாலென்க. நுதலியவிதாத்ம ஞானன்னிய ஹேதவந்தரத்தாலேனும் பிரகாராந்தரத்தாலேனும் பொய்ஞ்ஞான நிவிர்த்தியுடன்பாடின்றும் காரணசகித வபினிவேசமுளதாங்காற் சர்வானர்த்த பீஜபூதமாய தேகதேகாதியின்கண் ணியானென தென்பதாதியபினிவேச மதிக்கநிவிர்த்தியாம் ஆகவே அநிர் மோக்ஷப் பிரசங்கமாமெனவறிக ஆன்மஞானத்தா லபினிவேச நிவிர்த்தியாங்ஙனமாமெனின்? ஞானத்தா லஞ்ஞானத்

திற்கே நிவிருத்தி சம்பவித்தலின் அஹேதுவாய அபிநிவேசமும் அநிந்தனவனலம்போல் நிரதிசயவுபசாந்தியையடையும்.

தேவராற்கிர சாகரந்தனின் முன்றெள்ளமுதெடுத்தென மகான்ம, ரேவராங்குரவரவர்தமால்வேத வெழிற்கடல் கடைந்து முன்னென்னா, லாவலாயிதன்றன் வடிவதாயலர்த்துமமல ஞானமுதம் வெளியா, மேவராற் பிரமமினிதுணர்ந்திடலா மெழிலவர்பதங்களைத்தெடுப்பாம்

பத்தொன்பதாவது பேஷஜப் பிரகரணம் முற்றும்.

வன்னிநீழல்வாழ் வள்ளலாய் வள்ளிநாயகனாய்ச்
சென்னியாறுடைச் செல்வனாய்த்திரு நெலைபமையா
யென்னையாளுடைக்கோலமா யெழுந்தருளிறைவ
வுன்னையோதிதை யுகந்தருளுனது தாட்போற்றி.

ஸ்ரீமச்சங்கர பூஜ்யபகவற் பாதாசாரிய சுவாமிகள்
திருவாய்மலர்ந்தருளிய ஸ்ரீ உபதேச சகஸ்ரீ
பத்யபாகம் முற்றுப் பெற்றது.



PRINTED AT THE SIVARAHASYAM PRESS, P. T. MADRAS.

சென்னை வியாசர்பாடி ஆநந்தாஸ்ரம

# புஸ்தக விளம்பரம்.

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீ ஆத்மபுராணம் | 8 | 0 | 0 |
| ஸ்ரீ பகவத்கீதை கூடார்த்த தீபிகை (அச்சில்) | 5 | 0 | 0 |
| வேதாந்த மகாசிந்தாமணி | 4 | 0 | 0 |
| நியாயப் பிரகாசம் | 4 | 0 | 0 |
| தத்துவாநு சந்தானம் | 2 | 8 | 0 |
| ஸ்ரீ பொன்னம்பலசுவாமி கைவல்லியம் மூலமும் உரையும் | 2 | 0 | 0 |
| கீதாத்திரயம் | 2 | 0 | 0 |
| கண்டனகண்ட காத்தியம் (அச்சில்) | 1 | 4 | 0 |
| வேதாந்தரத்நாவலி | 1 | 0 | 0 |
| ஞானசாதக சகாயம் | 0 | 12 | 0 |
| நியாய முக்தாவலி (அச்சில்) | 0 | 12 | 0 |
| அநுகீதை | 0 | 10 | 0 |
| ஆத்திச்சூடி பாஷ்ய ஆநந்தார்த்தம் | 0 | 8 | 0 |
| வேதாந்த முக்தாவலி | 0 | 6 | 0 |
| பிரமகீதை மூலம் சுத்தப்பதிப்பு | 0 | 5 | 0 |
| மகாவாக்கிய ரகசியம் | 0 | 4 | 0 |
| ஸ்ரீ பஞ்சாக்ஷரபாஷியம் | 0 | 4 | 0 |
| பர்த்ருஹரி வைராக்கிய சதகம் உரையுடன் | 0 | 3 | 0 |
| சொரூபாநு சந்தானம் | 0 | 3 | 0 |
| நிரதிசயாநந்தத் திரட்டு | 0 | 3 | 0 |

விலாசம்:
மூர்த்தி ஸ்வாமிகள்,
48, எருக்கஞ்சேரி ரோட்,
வியாசர்பாடி, சென்னை.

விலாசம்:
மூர்த்தி ஸ்வாமிகள்,
6, ஜெனரல் காலின்ஸ் ரோட்,
வேப்பேரி, சென்னை.

தபால் சார்ஜ் பிரத்தியேகம்.